# ஜான்ஸன்ஸ்

# பேபி பவுடர்

—உலகம் பூராவும்

தாய்மார்களால் நம்பப்பட்டது






குழந்தைக்கு நாள் முழுவதும் இதமளிக்க
மிகச் சிறந்த மிருதுவான பேபி பவுடர்

குழந்தையை குளிப்பாட்டிய பிறகும், ஒவ்வொரு தடவை ஜட்டியை மாற்றும்பொழுதும் ஜான்ஸன்ஸ் பேபி பவுடரைத் தூவி குழந்தைக்கு உற்சாகத்தையும், இதத்தையும் அளியுங்கள். குழந்தைகளின் இளம் சருமத்திற்கென்றே பிரத்தியேகமாக தயாரிக்கப்பட்ட இந்த பவுடர் ஜட்டி உராய்வதால் உண்டாகும் சிராய்ப்பு வராமல் தடுக்க சிறந்தது.

குழந்தை பராமரிப்பு புத்தகத்தின் ஆங்கிலம் அல்லது ஹிந்தி பிரதியை பெறுவதற்கு, உங்கள் பெயர் மற்றும் விலாசத்துடன் 25 ந. பைசா தபால் வில்லைகளையும் சேர்த்து தபால் பெட்டி 1976, டிபார்ட்மெண்ட் நெ. 44, பம்பாய், என்ற விலாசத்துக்கு அனுப்புங்கள்.

குழந்தைகளின் பரிபூர்ண பராமரிப்பிற்கு

**ஜான்ஸன்ஸ்** தயாரிப்புகள் !

# கல்கி பொருளடக்கம்

பிலவ, வைகாசி 1 ※ மே 14, 1961



''கல்கி''யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே ; சம்பவங்களும் கற்பனையே.

வர்ஜீனியா புகையிலை இறக்குமதியாகும் விதேசிப் பண்டமென்றே கருதப்படுகிறது. உண்மையில், நிலமும் சீதோஷ்ண நிலையும் ஒத்துக்கொள்ளுமேயானால், உலகின் எப்பகுதியிலும் உற்பத்தி செய்து கொள்ளக்கூடிய ஒருவகைப் புகையிலையே வர்ஜீனியா. இன்று சிகரெட் உற்பத்தியில் முதன்மையான நாடுகள் இந்தியப் புகையிலையைப் பெருமளவில் வாங்கிச் செல்வதைப் பார்க்கையில், இந்தியாவின் வர்ஜீனியா புகையிலை அதி உன்னதமானது என்பது நிரூபணமாகிறது.



# புகையிலையின் வரலாறு...6

Panama

20

CIGARETTES




பம்பாய்—57.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

## பனாமா

ஒரு நல்ல சிகரெட்—
இறுதிவரை இன்பமூட்டுவது

GT.706 TM



மலர் 20

தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

இதழ் 41

# வேஷம் பலிக்குமா?

சாதி உணர்ச்சியின் அடிப்படையில் இயங்கும் கட்சிகளைத் தடை செய்ய மீண்டும் யோசித்து வருவதாக திரு லால்பகதூர் சாஸ்திரி டில்லி மக்கட் சபையில் அறிவித்தார்.

சாதி உணர்ச்சி குறுகிய மனப்பான்மையையும், துவேஷத்தையும் மற்றச் சாதி மக்களுக்கு அநீதியும் விளைவித்தால் அதனைத் தடுக்க வேண்டியது அவசியம்தான். ஆனால் இன்று காங்கிரஸ் என்ன செய்கிறது என்றால் இந்தச் சாதி உணர்ச்சியையும், துவேஷ உணர்ச்சியையும் தூண்டி விடும் கட்சிகள் தனக்குச் சாதகமாக இருக்கிற வரை தட்டிக் கொடுக்கிறது. அதன் தீமையைப் பற்றிப் பேசுவதில் மாத்திரம் குறைவில்லை.

இதை உதாரண மூலமாக விளக்கினால்தான் நன்கு புரியும். பஞ்சாபில் உள்ள அகாலிக் கட்சி, முழுக்க முழுக்கச் சீக்கியர்களின் நலன்களைப் பாதுகாக்கவும், மத, மொழி உணர்ச்சிகளைப் பாதுகாக்கவும் ஏற்பட்ட கட்சி. சென்ற தேர்தலின் போது காங்கிரஸ் பஞ்சாபில் மிகப் பலவீனமாக இருந்தது. பஞ்சாப் காங்கிரஸார் அகாலிகளின் நட்பைக் கோரிப் பெற்றனர். அவர்களுக்கு இல்லாத பொல்லாத வாக்குறுதிகளையும் அளித்தனர். பஞ்சாபில் அகாலிகளின் பெரும் தயவுபெற்றதினாலேயே சென்ற தேர்தலில் காங்கிரஸ் வெற்றி யடைந்தது. ஆட்சிக்கு வந்த காங்கிரஸார், அகாலிகளை ஏமாற்றி விட்டனர். இப்போது, அகாலிகள் காங்கிரஸை விட்டுப் பிரிந்து நிற்கின்றனர். காங்கிரஸை எப்படியும் வருகிற தேர்தலில் தோல்வியடையச் செய்யவேண்டும் என்று தீவிரமாக இருக்கின்றனர்.

பஞ்சாபில் காங்கிரஸ் ஆட்சி மிகவும் ஊழல் மலிந்ததாக இருப்பதால் மக்கள் மிகுந்த அதிருப்தி அடைந்திருக்கின்றனர். எதிர்க் கட்சிகள் அங்கு பலம் பொருந்தி விளங்குகின்றன. இதனையெல்லாம் பார்த்து, அடுத்து வரும் தேர்தலில், தோற்று விடுவோமோ என்ற அச்சம் காங்கிரஸ் கட்சியினருக்கு ஏற்பட்டுள்ளது. இதனைச் சமாளிக்க என்ன வழி என்று யோசித்து, சாதியுணர்ச்சி வளர்க்கும் கட்சிகளைத் தடை செய்யச் சட்டம் செய்து விட்டால், பஞ்சாபில் ஒரு பெரும் எதிரியை வீழ்த்தி விடலாம் என்று காங்கிரஸ் மேலிடத்தார் சிந்தித்து வருகிறார்கள். இதனைப் பகிரங்கமாகச் சொல்லாமல், ஜபல்பூரில் நடந்த அற்பக் கலவரத்தைப் பெரிதுபடுத்திப் பேசி வருகிறார்கள்.

உண்மையில் காங்கிரஸ் கட்சிக்குச் சாதி வெறியையும், பிற சாதிகள்மீது துவேஷத்தையும் ஊட்டும் கட்சிகளை ஒடுக்க வேண்டும் என்ற எண்ணம் அந்தரங்கசுத்தியோடு இருந்திருந்தால் சென்ற தேர்தலுக்கு முன்பே பல காரியங்கள் செய்திருக்கும். முதலில் திரு ஈ. வெ. ரா. இன்று வேறு ஓர் இடத்தில் இருப்பார்! இப்போதுகூட, காங்கிரஸ் சர்க்கார், சாதி வெறியூட்டும் கட்சிகளைத் தடை செய்வதாகச் சட்டம் செய்தாலும், அதில் தமிழ் நாட்டுப் 'பெரியார்' மட்டும் தப்பித்து சுயேச்சையாகத் துவேஷப் பிரசாரம் செய்ய விதிவிலக்கு அளிப்பார்கள். திரு ஈ. வெ. ரா. துவேஷப் பிரசாரம் செய்தாலும், காங்கிரஸ் கட்சிக்கு ஆதரவாகத்தானே செய்கிறார்? அவரோ, அவர் கட்சியினரோ நேரிடையாகத் தேர்தலில் போட்டியிடவில்லை என்பதுபோல் ஏதாகிலும் சமாதானம் சொல்லி விடுவார்கள். மொத்தத்தில் காங்கிரஸ், எப்பாடுபட்டாகிலும் அடுத்த தேர்தலில் பதவிக்கு வந்துவிட வேண்டும் என்பதற்காக முயன்று வருகிறது. அதற்காக, 'சாதிக் கட்சிகளை ஒழிக்கும் திட்டம்' என்ற மான் தோலைப் போர்த்திக்கொண்ட புலியாக உலாவப் பார்க்கிறது. ஆனால் தமிழ் நாட்டு மக்கள் இந்த வேஷத்தைக் கலைத்து உண்மை உருவத்தைப் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

# பெருமை யாருக்கு?

தமிழ் நாட்டுக் காங்கிரஸ் தனது கட்சிப் பிரசாரப் பொறுப்பு முழுவதையும் திரு ஈ. வெ. ரா. அவர்களிடம் குத்தகைக்குப் பேசி விட்டிருப்பதாகத் தோன்றுகிறது. காங்கிரஸ் இந்தக் கதிக்கு வந்து விட்டது!

இந்தப் பிரசாரகர் ராஜாஜி ஆட்சியின் போது பல பள்ளிக்கூடங்கள் மூடப்பட்டன என்றும், திரு காமராஜ் ஆட்சியில் பல பள்ளிக்கூடங்கள் திறக்கப்பட்டன என்றும் கணக்குச் சொல்லி வருகிறார். இந்தப் புள்ளி விவரங்கள் எவ்வளவு தூரம் உண்மை என்பதை நாம் அறிவோம்! நிற்க.

பள்ளிக்கூடங்கள் திறப்பதும் மூடுவதும் ஒரு நாட்டின் சுய ஆட்சியில் மிக சாமான்ய விஷயம்; அன்றாட நிர்வாகத்தைச் சேர்ந்த விஷயம்.

பள்ளிக்கூடங்கள் ஒரே ஊழல் மயமாக இருந்து, நிர்வாகக் கணக்கு முதலியவைகள் சரியாக இல்லையென்றால் மூடுவதற்கு மந்திரி வரை கூடப் போகத் தேவையில்லை. கல்வித் துறை அதிகாரியே உத்தரவு பிறப்பித்து விடலாம்.

அதே போல்தான் திறப்பு விஷயமும். ஒரு பள்ளிக்கூடம் திறக்க வேண்டும் என்றால் இவ்வளவு பரப்புள்ள நிலம் வேண்டும், கட்டடம் வேண்டும், பிள்ளைகள் விளையாட இவ்வளவு சதுர அடி கொண்ட மைதானம் வேண்டும், இவ்வளவு ஆசிரியர்கள் இருக்க வேண்டும் என்றெல்லாம் சட்ட திட்டங்கள் உள்ளன. இந்தச் சட்டதிட்டங்களைத் தங்கள் ஊரில் பள்ளிக்கூடம் திறக்க விரும்பும் மக்கள் நிறைவு செய்தால் பள்ளிக்கூடங்கள் திறப்பதில் கஷ்டமில்லை. சர்க்காரிலும், மான்யம் அளிக்க நிதியிருந்தால், கல்வித் துறை அதிகாரியே, மேற்கூறிய சட்ட திட்டங்களுக்கு உட்பட்டுப் பள்ளிக்கூடம் ஏற்படுத்த வழியுண்டு என்பதைக் கண்டாரானால் உத்தரவு பிறப்பித்து விடுகிறார். இதுதான் நடைமுறை. இதைக்கொண்டு முதன் மந்திரியாக இருப்பவருக்குப் பெயரும் புகழும் சூட்டுவானேன்?

அப்படி மந்திரிக்குத்தான் இழுக்கோ பெருமையோ சூட்ட வேண்டும் என்றால் கல்வி மந்திரியாக இருப்பவருக்குத்தான் சூட்ட வேண்டுமே ஒழிய முதன் மந்திரிக்குச் சேராது.

ராஜாஜி காலத்தில் கல்வி மந்திரியாக இருந்த திரு சி. சுப்பிரமண்யம்தான் திரு காமராஜ் காலத்தில் இன்று கல்வி மந்திரியாக இருக்கிறார்.

கல்வித்துறை சம்பந்தமாக திரு ஈ.வெ. ரா. கூறும் இழுக்கும், பெருமையும் ராஜாஜியையோ, திரு காமராஜ் அவர்களையோ சாராது. திரு சி. சுப்பிரமண்யம் அவர்களையே சாரும்.

இன்னொரு விஷயம். தற்போது மாகாண நிர்வாகத்துக்கு வரம்பற்ற தொகைகள் மத்திய சர்க்காரிலிருந்து பல காரணங்கள் சொல்லி 'கிராண்ட்கள்' பெறுவது வழக்கமாக இருக்கிறது. ஆனபடியால் சிக்கனத்தினால் ஏற்படும் கஷ்டங்கள் இல்லை.

முன்பு இப்படியிருக்கவில்லை. மாகாணத்தின் செலவு மாகாணத்தின் வருமானத்துக்குள் அடங்க வேண்டியிருந்தது. இப்பொழுது தில்லிக்குக் காவடி எடுத்துச் செல்வதே நிர்வாகமாக இருக்கிறது. அதில் மான நஷ்டம் இருந்தாலும் சில்லறைச் செலவுகளுக்குப் பணம் குறைவில்லை.

# பாதுகாப்பு விஷயம்

சீனா ஆக்கிரமிப்பாளர்களைச் சமாளிக்க நமது நேரு - கிருஷ்ணமேனன் சர்க்கார் ருஷ்யாவிலிருந்து தருவித்துள்ள விமானங்கள் தில்லி விமான நிலையத்தில் வந்து இறங்கியபோது, சில அமெரிக்க நிருபர்கள் புகைப் படம் எடுத்தார்களாம். எல்லைப் பாதுகாப்பை உத்தேசித்து, இப்புகைப் படங்கள் பறித்து அழிக்கப்பட்டனவாம். போதாததற்கு, இந்திய நாட்டின் சுதந்திரத்துக்கு விரோதமாக புகைத்துள்ள இந்த அமெரிக்க நிருபர்களை என்ன செய்யலாம் என்பது பற்றி நமது பாதுகாப்பு மந்திரி யோசித்து வருவதாகவும் சொல்லப்படுகிறது.

சீனாவின் ஆக்கிரமிப்பைத் தடுக்க, கம்யூனிஸ்ட் ருஷ்யா நமக்கு உற்ற துணையாம்; சோவியத் விமானிகள் ஒற்றர்களல்லவாம்! இந்திய சர்க்கார் கடைப்பிடித்து வரும் பாதுகாப்புத் திட்டம் பைத்தியக்காரத்தனமாகவும், அசட்டுத்தனமாகவும் இருக்கிறதே என்று பரிதாபப்படும் அமெரிக்க நிருபர்கள் ஒற்றர்களாம்! இதற்குமேல் பைத்தியக்காரத்

தனமாக ஒரு சர்க்காரால் நடந்து கொள்ள முடியுமா?

இமய மலைச்சாரலில் தமது எல்லைப் பாதுகாப்பு முகாம்களை விட்டு விட்டு, சீனத் துருப்புக்கள் பின்வாங்கி விட்டன வாம்! இதற்குக் காரணம், தாங்கள் கடைப்பிடித்து வரும் பாதுகாப்புத் திட்டமே என்று தில்லி மந்திரிகள் நினைக் கலாம். எதிரியை நோக்கி ஒரு குண்டு கூட வெடிக்காததற்குத் தங்களுடைய சாந்த சமாதான ராஜ நீதியே காரணம் என்றும் நினைக்கலாம். அந்தப் பிரதேசத்தில் ஏற்பட்டுள்ள கடுமை யான பனி மழை காரணமாகச் சீனத் துருப்புக்கள் வாபஸாகின்றன என்று செய்திகள் வருகின்றன.

# சோஷலிஸமும் ஜனநாயகமும்

இப்போதெல்லாம் நமது பிரதமர் சோஷலிஸத்தைப் பற்றி வெகு தீவிர மாக வற்புறுத்திப் பேசி வருகிறார். காங் கிரஸின் லட்சியம் சோஷலிஸம்தான்; அது பிடிக்காதவர்கள் வெளியேறி விட லாம் என்று கூடப் பேசி வருகிறார். கியூ பாவில் மே 1-ம் தேதி நடைபெற்ற நிகழ்ச்சி இந்த சோஷலிஸம் எதில் கொண்டு போய் விடும் என்பதை இந்திய மக்களுக்கு எச்சரிக்கை செய்கிறது.

கியூபாவின் தலைவர் பிடல் காஸ்ட்ரோ அவர்கள் ஒரு பொதுக் கூட்டத்தில் பேசிக் கொண்டிருந்தபோது, தமது ஆட்சி முறை சோஷலிஸ முறை தான் என்றும் இனி தேர்தல்களே நடை பெறாது என்றும் அறிவித்து விட்டார். பொதுக் கூட்டங்களில் மக்களிடம் நேரிடையாகத் தொடர்பு கொண்டு அவர்களுடைய நேர்முகமான ஆதரவின் மீதே, ஆட்சி நடைபெறும் என்று அறி வித்திருக்கிறார். இன்னும் அங்கு கூடி யிருந்தவர்களையே பார்த்து, "உங்க ளுக்குத் தேர்தல் வேண்டுமா?" என்று இரைந்து கேட்டாராம். கூட்டத்தின ரும் "வேண்டாம்" என்று பதிலுக்கு இரைந்தார்களாம்!

சோஷலிஸம் முற்றினால் என்ன விளை யும் என்பதற்கு இது ஓர் எடுத்துக் காட்டு. ஒருவிதத்தில் பிடல் காஸ்ட் ரோவை நாம் பாராட்ட வேண்டும். அவராவது இனி தேர்தல் கிடையாது என்று பகிரங்கமாகச் சொல்லிவிட்டார். ஆனால் நம் நாட்டில் தேர்தல் கேலிக் கூத்தாகத்தான் நடைபெறுகிறது. பர் மிட்டுகளும் லைசென்சுகளும் வழங்கும் உரிமை சர்க்காரிடமிருந்தால் அந்த நாட்டில் நேர்மையான தேர்தல் எப்படி நடக்கும்? நாட்டின் செல்வந்தர்கள், தொழிலதிபர்கள் அனைவரையும் சர்க்கா ரின் லைசென்ஸ்-பர்மிட் என்னும் சுருக்கில் மாட்டிவிட்டு, தேர்தல் காரியங்களுக் காக நிதி சேகரித்து, சர்க்கார் உத்தி யோகஸ்தர்களை வைத்துக் கொண்டு தேர்தல் பிரசாரமும் செய்தால் உண்மை யான தேர்தலுக்கு வழி ஏது?

# சுதந்திர நிதி

(26-4-61 லிருந்து 6-5-61 வரை)

| | | |
|---|---|---|
| என். சேதுராமன் | 1 | 00 |
| என். நீலகண்டன் | 1 | 00 |
| ஏ. எஸ். ராஜன் | 1 | 00 |
| வி. டி. ஐயங்கார் | 1 | 00 |
| கே. ஏ. வெங்கடேச செட்டியார் | 2 | 00 |
| பத்மா அருணாசலம் | 2 | 00 |
| ராஜரத்தினம்மாள் | 2 | 00 |
| தி. ரு. விஜயன் | 2 | 00 |
| காந்தி ஆசிரமத் தொழிலாளர்கள், திருச்செங்கோடு | 101 | 00 |
| திருச்செங்கோடு பொதுமக்களின் நன்கொடை | 1001 | 00 |
| பரூர் அன்பர்கள் | 101 | 00 |
| பத்மா கிருஷ்ணஸ்வாமி | 10 | 00 |
| நாமக்கல் எம். எஸ். ராஜகோபால அய்யர் அவர்களின் பேத்தி | 101 | 00 |
| செல்லப்பம்பட்டி அன்பர்கள் | 21 | 00 |
| நாமகிரிப்பேட்டை அன்பர் | 2 | 00 |
| எடப்பாடி அன்பர் | 1 | 00 |
| ஆத்தூர் அன்பர் | 5 | 00 |
| கோவை அன்பர் | 1 | 00 |
| கே. ஆர். நாராயணன் | 2 | 00 |
| 10-1-61 முதல் 25-4-61 முடிய | 3738 | 90 |
| ரூ. | 5096 | 90 |

சுதந்திரக் கட்சிக்காகப் பண உதவி செய்கிறவர்கள் ஸ்ரீ ராஜாஜி C/O கல்கி காரியாலயம், சென்னை-10 என்ற விலாசத்துக்கு அனுப்பலாம்.

# அமைச்சர்களின் விநோதக் கருத்துக்கள்

காங்கிரஸ் கட்சியில் உயர் அந்தஸ்தில் உள்ளோரும், அமைச்சர் பதவியிலிருப்போருமான மூவர் சமீபத்தில் பேசிய சொற்பொழிவுகளிலிருந்து மூன்று 'ரத்தின'ங்கள் பொறுக்கிக் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன:

"இம்மாதிரியான மனப்பான்மையுள்ள (புது டில்லி உபதேர்தலில் ஜனசங்க அபேட்சகரை ஆதரித்து வோட்டு அளித்த) சர்க்கார் ஊழியர்கள்தான் முஸ்லிம் லீக் தோன்றித் தழைத்ததற்குக் காரணமாக இருந்தார்கள். அவர்கள்தான் இப்போது மத்து வெறியர்கள் தலைதூக்க ஆதரவு அளிப்பார்கள்." (லக்னோ நகரத்தில் பிரதமர் நேருஜி சொன்னது.)

"பஞ்சாயத்துத் தேர்தல்களாக இருந்தாலும், காங்கிரஸ் கமிட்டி தேர்தல்களாக இருந்தாலும், எதுவுமே ஏகமனதாகப் போட்டியின்றி நடைபெறுவதுதான் கட்சிக்கும் நல்லது, நாட்டுக்கும் நல்லது." (கௌஹாத்தியில் திரு மொரார்ஜி தேசாய் அஸ்ஸாம் பிரதேச காங்கிரஸ் கமிட்டியில் பேசியது.)

"வருமான வரி இலாகா சோஷலிச லட்சியத்தை நிறைவேற்றி வைக்க வேண்டும் என்ற குறிக்கோளைக் கொண்டுள்ளது. இதை நீங்கள் கருத்தில் இருத்திக் கொள்ள வேண்டும். ஏழைகளை ஏமாற்றிப் பணக்காரர்களாக ஆகிக் கொண்டிருப்பவர்களைப் பற்றி நீங்கள் (வருமான வரி அதிகாரிகளும் இன்ஸ்பெக்டர்களும்) மிகவும் உஷாராக இருக்க வேண்டும்." (கான்பூரில் திரு பி. கோபால ரெட்டி 1-5-61ல் பேசியது.)

இந்த மூன்று கருத்துக்களும் வெவ்வேறு விதங்களில் முக்கியமானவை. வயது வந்தவர்களுக்கெல்லாம் வோட்டுரிமை வழங்கப்பட்டு வரும் நமது ஜனநாயக முறையில், எந்தக் கட்சி அபேட்சகருக்கு வேண்டுமானாலும் வோட்டு அளிக்க எல்லாப் பிரஜைகளுக்கும் உரிமை உண்டு. சர்க்கார் ஊழியர்களாக வேலை செய்வதால் இந்த உரிமை பாதிக்கப்படுவதில்லை. ஜீவனத்துக்காகச் செய்யும் ஒருவனுடைய தொழில் அவனுடைய அரசியல் கொள்கைகளைக் கட்டுப்படுத்த வேண்டுமென்று எதிர்பார்ப்பது தவறு. காங்கிரஸ் கட்சி அபேட்சகருக்குப் பெருவாரியாக வோட்டுக் கிடைக்கவில்லை என்பதற்காகப் பிரதமர் என்ற முறையில் அரசாங்க ஊழியர்களைக் கண்டிப்பது அதிகாரச் செல்வாக்கைத் துஷ்பிரயோகம் செய்வதாகும். சர்க்கார் சேவகர்களின் அரசியல் கொள்கைகளைக் கூடத் தங்கள் மனோபாவத்திற்கு ஒத்ததாக அமைத்துக் கொள்ளுவது கம்யூனிஸ நாடுகளில்தான் வெகுவாகக் காணப்படும் முறை. இதைப் பாரதப் பிரதமர் மேற்கொண்டு, சர்க்கார் ஊழியர்களை அவதூறாகப் பேசுவது பெருந் தவறாகும்.

அதுமட்டுமல்ல. சர்க்கார் ஊழியர்கள்தான் முஸ்லிம் லீக் தோன்றித் தழைத்ததற்குக் காரணமாக இருந்தனர் என்பதை எந்தச் சரித்திரமும் ஆதரிக்கவில்லை. குற்றச்சாட்டு வீசவேண்டுமென்றால், அது காங்கிரஸ் மீது தான் பாயும். சமீபகாலத்தில், தூங்கிக் கொண்டிருந்த முஸ்லிம் லீக் கட்சியைத் தட்டி எழுப்பிக் கேரளத்தில் செழிக்கச் செய்தது சர்க்கார் ஊழியர்களா? காங்கிரஸ் கட்சியா? அப்பாவி மக்களாகிய சர்க்கார் ஊழியர்கள் திரும்பிச் சவால்விட முடியாத நிலைமையிலிருப்பதற்காகத் தோன்றியபடி எல்லாம் பேசுவது முறையல்ல.

கட்சியில் தேர்தலெல்லாம் ஏகமனதாகவே நடைபெற வேண்டும் என்பது கம்யூனிஸ்டு நாடுகளில் காணப்படும் சம்பிரதாயம். அங்கே போட்டி என்பதே கிடையாது. மாற்று அபிப்பிராயம் இருந்தால்தானே போட்டிக்கு இடம்? ஆளும் கட்சியினருக்கு எதிராகச் சிந்தனை செய்வதே பெருங் குற்றமாயிற்றே. இங்கேயும் காங்கிரஸ் கட்சியில், கம்யூனிஸக் கட்சியின் ஐக்கியத்தையே லட்சியமாக்கத் திரு மொரார்ஜி வற்புறுத்துகிறார். ஆனால் உளுத்துப் போன கட்சியின் உட்பூசல்களையெல்லாம் மூடி மறைத்தால் அவை மறைந்து விடுமா? ஒன்று, இரண்டாக இருந்தால், தனது செல்வாக்கை உபயோகப்படுத்தி, மறைக்கப் பார்க்கலாம். பிரதமர் அப்படித்தானே பல பூசல்களை மூடி மறைத்து விடுகிறார்! ஆனால் உண்மை ஜனநாயகத்தில் கருத்து வேறுபாடுகளுக்கு இடம் இருந்தே தீரும். கட்சிப் பலத்திற்காகவேனும் போட்டி இருக்க வேண்டும். இவற்றை அகற்ற முற்படுவது யதேச்சாதிகாரத்தையே வளர்க்கும்.

திரு கோபால் ரெட்டி, மற்ற இருவரையும் மிஞ்சி விட்டார் என்றே சொல்ல வேண்டும். சர்க்கார் ஊழியர்களை, கட்சியின் சேவகர்களாகவே மாற்றிவிடப் பார்க்கிறார் திரு கோபால் ரெட்டி. சோஷலிச சமுதாய லட்சியத்தை நிறைவேற்றி வைக்கச் சட்டம் செய்வது மந்திரிகளின் பொறுப்பு. நிறைவேற்றிய சட்டத்தை அமுல் நடத்துவது ஊழியர்களின் கடமை. அவர்களுடைய நடவடிக்கைகளில் கடமை உணர்ச்சிதான் முக்கியமானதே தவிர, லட்சியத்தை நிறைவேற்றிவைக்கும் பணி அல்ல. அவ்விதம் அவர்கள் செய்ய வேண்டும் என்று எதிர்பார்ப்பதும் தவறு. சர்க்கார் ஊழியர்களின் நடத்தைக்கு முரணானதும் கூட. அதிலும் வருமானவரி இலாகா அதிகாரிகள் சாதாரணமாகவே மக்களின் வெறுப்புக்கு ஆளானவர்கள். அவர்களுடைய தொழிலின் தன்மை அந்தமாதிரி. அவர்களிடம், மனிதத்தன்மையுடன், வரி செலுத்துபவர்களைத் திருடர்களாக மதிக்காமல், கண்ணியமுள்ள மனிதர்களாகவே கருதிச் செயலாற்ற வேண்டும் என்று கேட்டுக் கொள்ள வேண்டியது முறை. சோஷலிச லட்சியத்தை நிறைவேற்றி வைப்பது அவர்கள் கையில் இருக்கிறது என்று வலியுறுத்துவது நேர்மைக்கு விரோதமானது; சர்க்கார் ஊழியர்களின் கடமைக்கு முரணானது.

"எதிர்பாராமல் வரும் விருந்தாளிகளுக்கு
என்றல்லவா இந்த பாட்டில்

# கிஸான் ஸ்க்வாஷ்

வைத்திருந்தேன்!"



முன்யோசனை மிகுந்த மனைவிமார்கள் எப்பொழுதும் எதிர்பாராமல் வரும் விருந்தினருக்காக தனியாக ஒரு பாட்டில் கிஸான் ஸ்க்வாஷை வைத்திருப்பார்கள். கனிந்தபழங்களிலிருந்து தயாரிக்கப்பட்ட இப்பானங் கள் விட்டமின் சத்துக்கள் கொண்டவை. வருஷம் முழுவதும் அருந்துவதற்கு ஏற்றவை. வீட்டில் எப்பொழுதும் கிஸான் ஸ்க்வாஷ் வைத்திருங்கள். ஆரெஞ்சு, லெமன் மற்றும் இதர ஆறு வகைகளில் கிஸான் ஸ்க்வாஷ் கிடைக்கின்றன.

கிஸான் பிரடக்ட்ஸ் லிமிடெட், பெங்களூர்

JWT KP 1315

# ஆயுள் இன்ஷூரன்ஸ் நிதிகள்

திட்டங்கள் நிறைவேற்றப்பட வேண்டும் என்பதைச் சாக்காக வைத்துக் கொண்டு எங்கே யெல்லாம் பணம் கிடைக்குமோ, அங்கிருந்தெல்லாம் சுரண்டுவது என்பது இப்போதெல்லாம் ஆளும் கட்சியினருக்கு மிகச் சாதாரணமான காரியமாகி விட்டது. பதவி வகிப்பதாலும், சட்டம் செய்யும் உரிமையும், இதற்கு இன்றியமையாத கட்சி பலமும் இருப்பதாலும், தாங்கள் அடிக்கும் கொள்ளைக்கும் வழிப்பறிக்கும் சட்டத்தின் பாதுகாப்பளித்து மக்களின் வாயை யடைத்து விடுகின்றனர்.

அரசாங்கம் அடித்த கொள்ளைகளில் பெருத்த கொள்ளை ஆயுள் இன்ஷூரன்ஸ் வியாபாரம். தனியார் நடத்தி வந்த பல கம்பெனிகளைத் தேசிய மயமாக்கி, ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஏற்படுத்தி, அதன் மூலம் கிடைக்கும் ஆயுள் நிதிப் பணத்தை அரசாங்கக் கடன் பத்திரங்களில் முதலீடு செய்து, சர்க்கார்த் துறைத் தொழிலுக்கு மூலதனம் தேடிக் கொள்ளுகிறது. இப்படி சுமார் 350 கோடி ரூபாய் வரை மூன்றாவது திட்டகாலத்தில் ஆயுள் நிதிப் பணம் தங்களுக்குக் கிடைக்கும் என்று திட்டம் வகுக்கப்பட்டிருக்கிறது. ஆனால் இப்போது 500 கோடி ரூபாய் வரை இந்த நிதிப் பணத்திலிருந்து உதவ முடியும் என்று ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷனே தெரிவித்திருக்கிறது. எதிர்பார்ப்பதற்கு அதிகமாகவே கிடைக்கும் என்பதைக் கண்டதும் காங்கிரஸ் கட்சியின் ஆசை பேராசையாக மாறி விட்டது. ஆயுள் நிதிப் பணம் முழுவதையும் அரசாங்கமே அதன் வசம் வைத்துக்கொள்ளுவது மிகவும் சிறந்தது என்று பார்லிமெண்ட் சபையின் மதிப்பீட்டு கமிட்டி சிபாரிசு செய்திருக்கிறது. இப்படிச் செய்து விட்டால், கோடிக்கணக்கில் வளர்ந்து கொண்டு போகும் நிதியை முதலீடு செய்வதில் ஏற்படும் கஷ்டங்களும், தொல்லைகளும் ஆயுள் நிதிக் கார்ப்பொரேஷனுக்கு இல்லாமல் போவதுடன், நாட்டில் சோஷலிஸ முன்னேற்றத்துக்கு மிகவும் உகந்ததாக இருக்கும் என்று இந்தச் சிபாரிசுக்குச் சப்பைக் கட்டு கட்டிக் காரணம் காட்டப்படுகிறது.

தங்களுக்குப் பணம் கிடைக்கிறது என்பதனால் அரசாங்கத்துக்கு சந்தோஷம். தங்களுக்குத் தொல்லை குறைகிறது என்பதனால் ஆயுள் நிதிக் கார்ப்பொரேஷனுக்குத் திருப்தி. இந்த ஆயுள் நிதி உண்மையில் யாருக்காக ஏற்பட்டது, யாருடைய நலனைப் பாதுகாக்கப் போஷிக் காக்கப்படுகிறது என்பதைப் பற்றிச் சர்க்காராவது, மதிப்பீட்டு கமிட்டியாவது சிந்தித்ததாகவே தெரியவில்லை.

ஆயுள்பாலிஸிகள் எல்லாம் ஒப்பந்த முறையைச் சேர்ந்தவை. இருபது ஆண்டுகளுக்குப் பின்னால் கிடைக்கப் போகும் பணத்துக்கு இப்போதிருந்தே துளித்துளியாகத் தவணை தவணையாகப் பணம் செலுத்தும் முறை. பல ஆண்டுகளுக்குப் பின்னால் பணத்தைத் திருப்பிப் பெறும்போது பணத்தின் மதிப்பு என்னவாக இருக்கும், செலுத்தப்பட்ட தொகைக்கும் திருப்பிப் பெறும் தொகைக்கும் ஏதாவது சம்பந்த மிருக்குமா என்றெல்லாம் முன்கூட்டியே கணக்குப்பார்க்க முடியாது. மேலும் பணவீக்கம் மிகுதியாக வளர்ந்துகொண்டு போகும் நிலையில், ரூபாயின் மதிப்பு வெகுவாகக் குறைந்தே போகும். பத்து வருஷங்களுக்கு முன்பு இருந்த ரூபாய் மதிப்பில் நாலில் ஒன்று இப்போதுள்ள ரூபாயின் மதிப்பு என்பது எல்லோருக்கும் தெரிந்ததே. இன்னும் பத்து ஆண்டுகளுக்குப் பின்னர் ரூபாயின் மதிப்பு எப்படி யிருக்கும் என்று யார் சொல்ல முடியும்? பொதுவாக மிகவும் குறைந்து விடும் என்று சந்தேகமின்றிச் சொல்லலாம். இம்மாதிரி ஏற்படும் நஷ்டங்களை ஓரளவுக்காவது ஈடு செய்வதற்காகவே 'லாபத்துடன் சேர்ந்த' பாலிஸிகள் வழங்கப்படுகின்றன. பாலிஸிகள் காலாவதி யடைந்து தொகை திருப்பிக் கொடுக்கப்படும்போது அவ்வப்போது "போனஸாக"க் கொடுக்கப்படும் லாபத்தையும் சேர்த்து வழங்கப்படுகிறது. இந்த லாபம் ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷனுக்கு அதனுடைய நிதிப் பணத்தை அதிக வட்டி கிடைக்கக்கூடிய இடங்களில் முதலீடு செய்து லாபம் சம்பாதிப்பதன் மூலம் கிடைக்கிறது. அதாவது தனியார் துறைத் தொழில்களிலும், கட்டடங்களிலும், பிரபல கம்பெனிகளின் பங்குகளிலும் முதலீடு செய்வதன் மூலம் கிடைக்கிறது. இப்படிக் கிடைக்கும் லாபம் அப்படி ஒன்றும் பிரமாதமானது அல்ல. மூன்று சதவீதம் வட்டி கட்டினால் பெருமைப்படக் கூடியது. பாலிஸிதாரர்களுக்கு இவ்வளவாவது கிடைக்கிறதே என்று ஒரு விதத்தில் திருப்தி.

ஆனால் மதிப்பீட்டு கமிட்டியின் சிபாரிசு ஏற்கப்பட்டால் ஆயுள் நிதிப் பணம் முழுதும் இனி சர்க்கார்த் துறைத் தொழில்களில் முதலீடு செய்யப்பட்டு விடும். சர்க்கார் தொழில்கள் எவ்வளவு லாபகரமாக நடைபெறுகின்றன என்பது நாடறிந்த விஷயம். அவற்றில் போடப்பட்ட மூலதனத்துக்கு என்ன லாபம் கிடைக்கும்? பாலிஸிதாரர்களுக்குப் போனஸ் என்று எதைக் கொடுக்க முடியும்? ஏற்கனவே மிகக் குறைவாகக் கிடைத்துக் கொண்டிருக்கும் போனஸும் கிடைக்காமல் போகும் நிலைமை ஏற்படலாம். பாலிஸிதாரர்களின் நலனுக்காக ஏற்பட்ட நிதிப் பணம் அவர்களுடைய நன்மைக்காக முதலீடு செய்யப்பட வேண்டும் என்பது தான் நியாயம். அந்த வேலையை அதற்கென்று ஏற்படுத்தப்பட்ட ஆயுள் இன்ஷூரன்ஸ் கார்ப்பொரேஷன்தான் மேற்கொண்டு செய்ய வேண்டும். இதைச் சர்க்காருக்கு மாற்றிவிட வேண்டும் என்று யோசனை கூறிய மதிப்பீட்டு கமிட்டியின் மனப்பான்மை கொள்ளைக் கூட்டத்தாரின் மனப்பான்மைக்குத்தான் ஒத்ததாக இருக்கிறது.

இந்தச் சிபாரிசைத் தற்போதைக்கு ஏற்றுக் கொள்ளுவதற்கில்லை என்று நிதி மந்திரி சொல்லியிருந்தாலும், இது பரிசீலித்துக் கவனிக்க வேண்டியது என்று கமிட்டி கூறியுள்ளது. பாலிஸிதாரர்களுக்குக் கவலைதரும் விஷயம். இந்த யோசனையைக் கைவிடுவது நல்லது.

## செய்தி தெரியுமா? சாரா







பாகிஸ்தானில் கலியாணம்
செய்து கொண்டால் வரி!
குழந்தை பிறந்தால் வரி!
— செய்தி

அடடா! இது நமக்கு,
முன்னாலேயே தோன்றாமல்
போய் விட்டதே!







மரியாதை வாரம்
கொண்டாடி மரியாதைக
எல்லாம் ஒழித்து
விட்டாங்க!
அதுமாதிரி 'ஈ' ஒழிப்பு
வாரம் கொண்டாடி
நம்மைத் தொலைத்து
விடப் போறாங்களா

உங்கள் சைக்கிள் ரிம்கள் மிகப்
பிரகாசமாகவும் நீண்ட காலம் நீடித்து
உழைக்கவும் உதவுவது

# ரிமோவா

## சைக்கிள் ரிம் பிரஷ்

நீங்கள் சைக்கிள் சவாரி செய்யும்போதே தூசி
துரும்புகள், சேறு முதலியவைகளிலிருந்து சுத்தப்
படுத்தி பாதுகாப்பு அளிக்கிறது

சைக்கிள் உள்ள அனைவருக்கும் இது மிக அவசியம்

டென்னெல் அண்ட் கம்பெனி
செகனேரியா சேம்பர்ஸ்
139, மெடோஸ் தெரு, பம்பாய்-1

Regd. Design
No. 184510.
Regd. Patent.



ஒரு சைக்கிளுக்கான
நான்கு ரிம்களுக்கு ஒரே
பெட்டியில் கிடைக்கிறது

இந்தியாவெங்கிலும் ஏஜண்டுகளும், விற்பனையாளர்களும் தேவை

என்று வியந்தேன். ஆனால் இந்த ஊர் சுதந்திரக் கட்சியினர் ராஜாஜிதான் இங்கு கூட்டம் போட வேண்டும் என்று சொன்னதாகத் தெரிவித்தார்கள்! மென்ன அசரவில்லை நின்றார் ராஜாஜி. பத்து நிமிஷங்கள் பிடித்தன மேடைக்குப்போய்ச்சேர. மலையேறும் போதே இலேசாகத் தூறிக் கொண்டிருந்தது. மேடையை அடைந்ததும் தூற்றல் பலமாகப் போய்விட்டது. இரண்டே இரண்டு வார்த்தைகள் சொல்லி விட்டு, ராஜாஜி கூட்டம் முடிந்தது என்று அறிவித்து விட்டார். மக்கள் நகரும் வழியாக இல்லை. "என்ன, நீங்கள் மழையில் நனைந்து கொண்டே பேச்சைக் கேட்கத் தயாரா?" என்று கேட்டார் ராஜாஜி.

"தயார்!" என்றார்கள்.

தூற்றல் பலமாகவே விழுந்து கொண்டிருந்தது. ராஜாஜி ஐந்து நிமிஷங்கள் பேசிக் கூட்டத்தை முடித்து விட்டார். பிறகு பத்து நிமிஷங்கள் மழையில் நனைந்து கொண்டே அந்த மலைச் சரிவில் கூட்டம் சூழ்ந்து நெருக்க ஜாக்கிரதையாக இறங்க வேண்டியிருந்தது. கூட்டம் நடக்கவில்லையே என்று ஏமாற்றம் மக்களுக்கு இருந்தாலும், மலையில் இவ்வளவு சிரமப்பட்டு ராஜாஜி ஏறியிறங்கியது பேச்சை விட அதிக பலனை அளித்திருக்கிறது என்றார் ஒரு நண்பர் ரகசியமாக.

சேலத்தில் முப்பதாம் தேதி பெரிய பொதுக் கூட்டம் நடைபெற்றது. ராஜாஜி சுமார் ஒரு மணி நேரம் பல விஷயங்களை எடுத்து விளக்கினார். சேலம் ஜில்லா சுதந்திரக் கட்சித் தலைவர் டாக்டர் கிருஷ்ணமூர்த்தி ராவ். அவர்களுக்கு அன்றுதான் திருப்தி ஏற்பட்டது. இதற்கு முன் இரண்டு மூன்று தடவை கூட்டத்துக்கு ஏற்பாடு செய்து பல இடையூறுகள் காரணமாகக் கூட்டம் நடைபெறவில்லை. இந்தத் தடவை நல்ல முறையில் நடைபெற்றதில் அவருக்குத் திருப்தி இருக்கத்தானே செய்யும்! அவருக்குத் துணை நின்ற திரு டி.டி. சீனிவாசன், திரு கிருஷ்ணமூர்த்தி, திரு ஓ. வி. மாணிக்கம் ஆகியவர்களுக்கும் அளவு கடந்த மகிழ்ச்சி.

கோவையில் இளைஞர் முன்னணியை ஆரம்பித்துவைத்த ராஜாஜி "இளைஞர்கள் மேடையேறிப் பிரசங்கம் புரிய ஆர்வம் காட்டுவதை விட கட்சிக் கொள்கைகளை மக்களைத் தனித் தனியே சந்தித்து விளக்கிப் பிரசாரம் செய்யும் தொண்டில் ஈடுபட வேண்டும்" என்று எடுத்துக் கூறினார்.

பிறகு இரண்டாம் தேதி உதக மண்டலத்தில் ஓர் இனிய மகாநாடு நடைபெற்றது. திரு வோபோ பிரபு தலைமை வகித்தார். கூனூரில் நகரசபை வரவேற்பும் பொதுக் கூட்டமும் மிகச் சிறப்பாக நடைபெற்றன.

காங்கிரஸ்காரர்கள் தாங்கள் பதவியிலிருந்ததால்தான் பள்ளிக்கூடங்கள் திறந்ததாகவும், சாலைகள் போட்டதாகவும், அணைகள் போட்டதாகவும் சொல்லிப் பெருமையும் வோட்டும் சம்பாதித்துக் கொள்ளப் பார்க்கிறார்கள் அல்லவா? இதைப் போன்ற அர்த்தமற்ற பேச்சு கிடையாது என்பதை ராஜாஜி தமக்கே உரிய முறையில் ஒரு ஹாஸ்யக் கதையைச் சொல்லி விளக்கினார்.

ஒருவனுக்கு முதல் தாரத்தின் வழியாக ஒரு மகன் இருந்தானாம். முதல் தாரம் இறந்து விடவே இரண்டாம்தாரத்தை மணந்து கொண்டானாம். சில வருஷங்கள் கழித்து, மூத்தாளின் மகனுக்கு மீசை முளைக்க ஆரம்பித்தது. இளையாள் 'என்னை மணந்து கொண்டதால்தான் இந்தப் பையனுக்கு மீசை முளைத்தது' என்று சொன்னாளாம்! இந்த இளையாள் சொல்வது போலிருக்கிறது காங்கிரஸ்காரர்கள் அணை கட்டியதற்கும் சாலைகள் போட்டதற்கும் பெருமை தேடிக்கொள்வது!

காங்கிரஸ் சர்க்கார் அல்லாமல் வேறு எந்தச் சர்க்கார் பதவியில் இருந்தாலும் இந்தக் காரியங்களைச் செய்துதான் இருப்பார்கள். நமக்குப் பிடிக்காத பிரிட்டிஷ் சர்க்கார்தான் ரயிலும் தந்தியும், தபாலும் பள்ளிக்கூடங்களும் கல்லூரிகளும் ஏற்படுத்தினார்கள். அதற்காக அவர்களை இருக்கச் சொன்னோமா? காங்கிரஸ் சர்க்கார் அல்ல தி. மு. க.வினர் பதவியிலிருந்தால்கூட காங்கிரஸ்காரர்கள் பெருமையடித்துக் கொள்ளும் காரியங்களைச் செய்திருப்பார்கள். ஒருவேளை அவர்கள் இன்னும் சிறப்பாகவும் சிக்கனமாகவும் கூடச் செய்திருப்பார்கள் என்று கூறி முடித்தார் ராஜாஜி.

மொத்தத்தில் ராஜாஜியின் சேலம் நீலகிரி மாவட்டச் சுற்றுப் பிரயாணம், பொதுமக்கள் விழித்துக் கொண்டு விட்டார்கள் என்பதை நன்கு எடுத்துக்காட்டியது.



திருவிடைமருதூர் டாக்டர் சுந்தரம் அவர்களின் குமாரன் ஸ்ரீ ராதாகிருஷ்ணனின் மிருதங்க அரங்கேற்று விழா சமீபத்தில் திருவிடைமருதூரில் சிறப்பாக நடைபெற்றது.

விழாவுக்குத் தலைமை தாங்கிய திருவிசநல்லூர் ஸ்ரீ ராமசாமி சாஸ்திரிகளும் மற்றும் பல சங்கீத வித்வான்களும் சிறுவனின் மிருதங்கம் வாசிக்கும் திறமையைப் பாராட்டி ஆசி கூறினர்.



# திருமூலர் தவமொழி

## ராஜாஜி - சோமு

5

கடவுளைச் சென்று அடையும் பாதைகளிலே எதைப் பிடித்து நடக்கலாம் என்று தயங்கி நிற்கிற பக்தர்களுக்கு எல்லா வழிகளும் இறைவனையே அடைகின்றன என்று கீதாசாரியன் கீதையில் சொன்னபடியே தாமும் உறுதி கூறிய திருமூலர் இனிமேல் மொழி வகைகளைப் பற்றியும் பேசுகிறார்.

வேதத்தின் சிறப்பு எத்தனை மேம்பட்டது என்று அறுதியிட்டுச் சொல்லுகிறார் முனிவர்.

**வேதத்தை விட்ட**
**அறம்இல்லை : வேதத்தில்**
**ஓதத் தகும்அறம்**
**எல்லாம் உள !**

(உள ; உள்ளன என்பதை உணர்வீர்களாக! இதற்கு மேலும் சந்தேகங்கள் வேண்டாம், உறுதியான வார்த்தை இது.)

இவ்வாறு உறுதிப் பாங்கோடு கூறுகிற முனிபுங்கவர், இந்த உறுதியோடுதானே அறிவாளிகள் வீடு பேறு அடைந்தார்கள் என்று சான்றும் காட்டுகிறார்.

**தர்க்க**
**வாதத்தை விட்டு**
**மதிஞர் வளமுற்று**
**வேதத்தை ஓதியே**
**வீடுபெற் ருர்களே**

(மதிஞர் – அறிஞர்கள்.)

இப்படிப் பேசிய முனிவர் ஆகமச் சிறப்புக்களைக் கூறி முடித்து விட்டுப் பாஷைகளை எடுத்துக் கொண்டு சொல்லுகிறார்.

பாஷைகள் எல்லாமே தெய்வத்தின் பேச்சு. இவற்றில் உயர்வு தாழ்வு சொல்லித் தர்க்கம் செய்வது மடமை என்று அழுத்தமாகக் கூறுகிறார் திருமூலர்.

திருமூலர் காலத்தில் நம்முடைய நாட்டில் பதினெட்டுப் பாஷைகள் வழங்கி வந்ததாகத் தெரிகிறது. இந்தப் பதினெட்டையும் கற்றுத் தேர்ந்த முனிவர் திருமூலர். இவை சம்பந்தமாக முனிவர் என்ன சொல்லுகிறார் என்பதைப் பார்ப்போம்.

**பண்டிதர் ஆவார்**
**பதினெட்டுப் பாஷையும்**
**கண்டுஅவர் கூறும்**
**கருத்துஅறிவார் என்க ;**
**பண்டிதர் தங்கள்**
**பதினெட்டுப் பாஷையும்**
**அண்ட முதலான்**
**அரன்சொன்ன வாறே !**

பண்டிதர்கள் என்ருல் இந்தப் பதினெட்டுப் பாஷைகளையும் கற்று, அந்த மொழியாளர்களின் கருத்தை அறியக் கூடியவர்கள். இந்தப் பதினெட்டு மொழிகளுமே அரன் வகுத்து வழங்கிய மொழிகளேயாம்.

ஒரு மொழி பிறப்பதும், வளர்வதும், உல்லாசமாக மக்களின் நாவில் உலவுவதும் சிந்திக்கச் சிந்திக்க வியப்பைத் தருகிற விஷயமாகும்! எத்தனையோ பல ஆயிரம் ஆண்டுகளாக

உயிர்த் தத்துவமானது மக்களுடைய நாவிலே நடந்து நடந்து சென்று சொற்களையும், சொல் முடிபுகளையும் வண்ண வண்ணச் சாயல்களையும் படைக்கிறது. இந்த உயிர்த் தத்துவம் வேறு, இறைவன் வேறு அல்ல. அறுதி தத்துவமான இறைவனே இந்தச் செயலைச் செய்து வருகிறான் என்றால் அது உண்மைக்குள் உண்மையாகும். இதை மனத்திற் கொண்டு திருமூலருடைய பாடலை உணர்ந்தால் அடிப்படை உண்மை துலங்கும்.

'ஓசை ஒலியெலாம் ஆனாய் நீயே' என்றும், 'சொல்லானாய், பொருளானாய்' என்றும், இன்னும் பல விதத்திலும் இறைவனை ஞானிகள் வழிபடுகிற முறையில் நின்று பார்க்க வேண்டிய பாடல் இது. பதினெட்டுப் பாஷைகளையும் பழுதற ஓதி உணர்ந்த சித்தரின் மொழி இது.

# வட்ட மேஜை

## மாயா நரகம்!

ஸ்ரீமதி வசுந்தரா அவர்கள் தங்கள் வட்டமேஜையில் நெய்வேலியின் ஆஸ்பத்திரிக் கஷ்டத்தையும், போக்குவரத்துக் கஷ்டத்தையும் மிகவும் உருக்கமாக எழுதியிருந்தார். தண்ணீர் எப்பொழுது வரும், எப்பொழுது நிற்கும் என்பதை ஒருவராலும் சொல்ல முடியாது. மாதம் இரண்டு நாட்கள் கட்டாயம் வராது. இன்னும் எத்தனையோ கஷ்டங்கள். இங்கு லாரியில் ஒரு சமயம் இரண்டு பக்கெட் தண்ணீர் கொடுப்பார்கள். குளிக்க முடியாது. ஒருவர் திவசம் ஆரம்பித்து, தண்ணீர் நின்று விட்டதால் அதைத் தொடர்ந்து நடத்த முடியாமல் பட்ட கஷ்டம் சொல்லி முடியாது. அவசரத்துக்குக் கிணறும் கிடையாது.

பால் கஷ்டம் அதைவிட மோசம். நெய்வேலி உத்தியோகஸ்தர்கள் எல்லோரும் காலை சுமார் ஐந்து மணியிலிருந்து பிச்சைக்காரக் கும்பலைப்போல், பாத்திரங்களை வைத்துக் காத்து நிற்க வேண்டும். பால் பெரிய கேன்களில் வரும். அதன் விநியோகம் அதைக் கொண்டு வரும் ஆளின் விருப்பத்தைப் பொறுத்தது. ஒரு நாள் அரைச் சேர் பசும் பால், அரைச் சேர் எருமைப் பால் கொடுப்பார்கள். ஒரு நாள் பசும்பால் மாத்திரம் கிடைக்கும். மற்றொரு நாள் எருமைப் பால் தான் கிடைக்கும். சொந்த மாடு வைத்துக் கொள்ளவும் அநுமதிக்கப்படவில்லை.

ஏறக்குறையப் பத்தாயிரம் பேர்கள் வசிக்கும் இந்த நரகத்தில் புருஷர்கள், தாடி வளர்க்க வசதி செய்யப்பட்டிருக்கிறது. ஒரே ஒரு கூட்டுறவு சலூன்தான் இருக்கிறது!

நெய்வேலி - 1
20-4-61

எஸ். லலிதா

## பாகுபாடு ஏன்?

எஸ். எஸ். எல். ஸி. பொதுத் தேர்வு எழுதும் அபேட்சகரின் விடைத் தாள்களை மதிப்பிடும் பணிக்குப் பயிற்சி பெற்ற பட்டதாரி ஆசிரியர்களுக்கு உயர்நிலைப் பள்ளியில் நான்கு வருஷ போதனை அனுபவம் வேண்டுமென்பது எஸ். எஸ். எல். ஸி. போர்டு விதித்துள்ள தகுதி. நான் பயிற்சி பெற்ற எம். ஏ. பட்டதாரி ஆசிரியன். ஐந்தாண்டு அனுபவமுள்ளவன். எஸ். எஸ். எல். ஸி. வகுப்புக்கு நான்காண்டுகளாகச் சமூக நூல் பாடமும், இரண்டாண்டுகளாக ஆங்கிலமும் போதித்து வருபவன். இருப்பினும் எனக்குப் போர்டாரின் நியமனம் கிடைக்கவில்லை. ஆனால், என்னிலும் குறைந்த அனுபவமுடையவர்களும், நான்காண்டு அனுபவம் மட்டும் கொண்டவர்களும், எஸ். எஸ். எல். ஸி. வகுப்புக்கு ஒரு பாடம் மட்டும் போதித்து வருபவர்களுமான ஆசிரியர்கள், பலர் இந்த ஆண்டு 'அஸிஸ்டெண்டு எக்ஸாமினர்'களாக நியமிக்கப் பெற்றுள்ளனர்.

ஒரு குறிப்பிட்ட பள்ளியில் மட்டும் எட்டு ஆசிரியர்களுக்கு இந்த நியமனம் கிடைத்துள்ளது. அவற்றுள் ஐந்து புதிய நியமனங்கள். ஆனால் எனது பள்ளியில் ஒரே ஒரு நியமனம் தான். நியமனம் பெற்றுள்ள ஆசிரியரும் ஏற்கெனவே அஸிஸ்டெண்டு எக்ஸாமினராக இருந்தவர்.

தேர்வு அதிகாரிகளை நியமனம் செய்யும் போது, போர்டு எதனையும் ஆராயாது, "ஏனோதானோ" என்ற முறையில் வேலையைக் கவனிக்கிறதா? அன்றி போர்டுக்குத் தனிப்பட்ட முறையில் சிபாரிசு செய்வதற்குப் பெரிய மனிதர் தயவை நான் நாடவேண்டுமென எதிர்பார்க்கிறதா?

மதிக்கப்படாத ஆசிரியன்

## வகுப்புவாதம் எங்கே?

இன்று புது தில்லியில் காங்கிரஸ் தலைவரான சஞ்சீவி ரெட்டி உரத்த குரலில், "நாங்கள் (காங்கிரஸ்) வெற்றியடைந்தாலும் தோல்வியடைந்தாலும் கவலையில்லை. நாங்கள் வகுப்புவாதத்தைப் பரப்பும் கட்சியுடன் சேர்ந்தோ, அல்லது அதன் உதவியுடனோ தேர்தலில் வெற்றியடைய மாட்டோம்" என்று கூறியுள்ளார். தமிழ் நாட்டின் காங்கிரஸ் தலைவரான திரு காமராஜர் வகுப்புவாதக் கட்சியின் தலைவரான ராமசாமிப் பெரியாரின் உதவியில்லாமல் தேர்தலில் போட்டியிடுவாரா?

அகமதாபாத்
11-4-61

ஜெ. எஸ். மூர்த்தி




வேதநூல் பிராயமான நூறில் நாற்பதைக் கடந்து நாற்பத்தொன்றாவது வயதில் காலடி எடுத்து வைத்திருக்கிறவன் நான். ஓர் எழுத்தாளன் என்ற முறையில், உலகத்து மற்றைய இலக்கிய ஆசிரியர்களோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது என்னுடைய இந்தச் சாதனையைப் பாராட்டிக் கொள்ளவே தோன்றுகிறது! திருஞானசம்பந்தர், கீட்ஸ், ஆண்டாள், ஆதிசங்கரர், ஷெல்லி, பைரன், பாரதியார், ராஜம் அய்யர் இவர்களில் யாரும் நாற்பதாவது வயதை எட்டாத போது அவர்களால் எட்டித் தொட முடியாத ஒன்றைத் தொட்டுவிட்ட பெருமை என்னுடையது!

நாற்பது வயதானவன் என்ற எண்ணமே, என் மனத்தில் ஓர் இதத்தை ஏற்படுத்துகிற(து). வாலிபத்தை வழியனுப்பி விட்டு, முதுமையை 'வா' வென்று வரவேற்கும் வாயிற்படிதான் இந்த நாற்பது என்பதை எண்ணும்போது, இழக்கக் கூடாத ஒன்றை இழந்துவிட்ட ஆயாசம் என் உள்ளத்தைக் குழப்பவில்லை.

என் ஒருசாலை மாணவர், நண்பர் நடராஜன், நாற்பத்திரண்டாவது வயதில், இருபத்துநான்கே வயதானவர்போல் கட்டுக் குலையாமல், மிடுமிடுப்பு மங்காமல் காட்சி தருகிறார். ஆச்சரியப்பட வேண்டிய இயற்கையின் கூறுதான் அது! ஆனால் நான் அதற்கு ஆசைப்படவில்லை. நாற்பதை நாற்பதென்றே சொல்லும் என்னுடைய தோற்றத்தில் நான் மகிழ்ச்சியடைகிறேன். 'கன்ன மூலத்தில்' நரையின் மின்னல், உச்சந்தலையில் வழுக்கையின் ஜன்னல்! வயது தந்த பரிசை, அனுபவம் தந்த முத்திரையை வேண்டாம் என்று மறுக்க நான் யார்?

நாற்பது வயதை எட்டியபோதுதான், 'நாம் இத்தனை ஆண்டுகளாக இருபதிலும் முப்பதிலும் வியர்த்தமாக உழன்றோமே, என்ன முட்டாள்தனம்!' என்ற கழிவிரக்கம் எனக்கே ஏற்பட்டது. அறுபதை நாற்பதாகவும், நாற்பதை முப்பதாகவும் நடிக்க முயலும் இந்த உலகில் முப்பதானபோதே நாற்பதுக்காக ஏங்கினவன் நான்.

நரைக்குப் பொடிதூவித் திரைபோட முயல்கிறவர்கள், தங்கள் கண்களில் தாங்களே மண்ணைப் போட்டுக் கொள்ளுகிறவர்களே! நம்மைக் கண்டு நாலு பேர்கள் மதிப்பதை, மரியாதை செய்வதை, பயபக்தியுடன் அணுகுவதை நாமே ஏன் கெடுத்துக் கொள்ள வேண்டும்? 'அறியாத பிள்ளை,' 'ஓடும் பாம்பை மிதிக்கும் துடுக்கு மிகுந்தவன்' என்று உலகம் நம்மை 'ஒரு மாதிரியாக' நினைத்துப் பேசி அசட்டை செய்து வந்த காலம் மலை ஏறி, நம்மைக் கண்டு நாலுபேர்கள் மதித்துப் பேச விழையும் வேளைவந்தால் அதைப் போய் வேண்டாம் என்று சொல்லலாமா?

நாற்பதை வந்தடைந்தால்தான் நமக்கெல்லாம் ஞானமோ, புத்தியோ உதயமாகிறது என்பதில்லை. ஞானப்பல் முளைக்க முயலும் முப்பதிலேயே நமக்கு அறிவு முதிர்ந்து விடுகிறது. ஆனால் நமது அறிவை வெளிக்காட்ட, நமது சரக்கை வெளியே அவிழ்த்து விட நாம் கெட்டித்தட்ட ஒரு வியாழ வட்டம் காத்திருக்க வேண்டியிருக்கிறது! முப்பதில் நாம் யாருக்காவது யோசனை சொன்னால், ''உனக்கென்ன தெரியும்? சின்னப் பிள்ளையாலட்சணமா வாயை மூடிக்கொண்டிரு!'' என்று பெரியவர்கள் வாயடைக்கச் சட்டம் போட்டுவிடுகிறார்கள். ஆனால் நாற்பது வயதாகிவிட்டாலோ, நமக்கே இனம் தெரியாத கௌரவம் பிறந்த உணர்ச்சி பிறந்து விடுகிறது. நாம் பேசுவதையெல்லாம் இந்தச் 'சின்னப் பயல்கள்' வாயைப் பிளந்துகொண்டு கேட்பதாக ஒரு பிரமை நமக்குத் தட்டுகிறது. இந்த உலகமே அவரவர்கள் கொண்டுள்ள பிரமையையொட்டித்தானே நடை போட்டு வருகிறது?

மூக்குக் கண்ணாடி அணியும் மோகம் நமது வாலிபர்களை எவ்வளவு தூரம் பற்றியிருக்கிறது என்பதைப் பார்க்கப் பார்க்க நம் கண் கூசுகிறது. கறுப்புக் கண்ணாடி

அரசியல் தலைவர்களின் மூக்கிலிருந்தும் நழுவி சினிமா நடிகர்கள், நடிகைகள் பத்திரிகைக்காரர்களின் மூக்கில் அமரத் தொடங்கியதும் அதற்கு வாலிப உள்ளங்களிடம் ஏற்பட்ட 'மவுசை' அளவிட முடியுமா? இளைஞர்களுக்கு அரசியலில் ஆர்வம் குறைந்து சினிமா பார்ப்பதிலும், பத்திரிகை படிப்பதிலும் ஆர்வம் மிகுந்திருக்கிறது என்பது இதன் பொருளாக இருக்கக் கூடுமானாலும், கண்கள் இரண்டும் நன்றாக இருக்கும்போதே கண்ணாடி அணிவது ஒரு நாகரிகம் என்பதையே இது காட்டுகிறது. என்னுடைய வாலிப காலத்தில் எந்த விதமாகக் கண்ணாடியணியாத எனக்கு இந்த நாற்பதாவது வயதில் இயற்கையாகவே அந்தப் பாக்கியம் கிட்டியுள்ளது. புராண காலத்து மகரிஷிகளுக்கும், பத்தினிப் பெண்களுக்குமே இருந்த 'தூர திருஷ்டி' எனக்குக் குறைந்த சிரமத்தில் நிறையக்கிடைத்துள்ளது.

இந்த நாற்பதின் மகிமையைப் பற்றிய ஞானோதயம் எனக்கு எங்கே எப்படி ஏற்பட்டது என்பதே ஒரு வேடிக்கை. ஆலமரத்தடியிலும் அரச மரத்தடியிலும் ஞானோதயம் பெற்ற மகான்கள் உண்டு. எனக்கு இந்த ஞானோதயம் ஏற்பட்டது ஒரு தூங்குமூஞ்சி மரத்தடியில் என்றால் யாரும் திடுக்கிட வேண்டியதில்லை. பஸ்களிலும், டிராம்களிலும் இத்தனை வருஷங்களில் நான் சுமார் லட்சம் மைல்கள் பிரயாணம் செய்திருப்பேன். இதில் எழுபத்தையாயிரம் மைல் வரைப் பிடித்துத் தொங்கிக் கொண்டும், இருபதாயிரம் மைல்கள் புட்போர்டில் சகபிரயாணியின் கால்மீது என் கால் ஒன்றை ஊன்றியபடி அந்தர நடனம் ஆடிக்கொண்டும் ஐந்தாயிரம் மைல் உட்கார்ந்து கொண்டும் பிரயாணம் செய்துள்ளேன். இந்த ஐயாயிரம் மைல்களில் இளம் நங்கைகளின் நன்றிப் புன்சிரிப்பைப் பெறுவதற்காக நான் என் இடத்தைத் தியாகம் செய்த சந்தர்ப்பங்களே அதிகமாக இருக்கும். அத்தகைய எனக்கு அன்று பஸ்ஸில் நின்று கொண்டிருந்தபோது ஏற்பட்டது அந்த அனுபவம்.

பஸ் நின்று கொண்டிருந்தது. நின்ற இடம் தூங்குமூஞ்சி மரத்தடியாகையால் பஸ்ஸே தூங்கிப் போய்விட்டதோ என்றும் கருதினேன்: 'கத்துக்குட்டி' கண்டக்டர் டிக்கெட் கொடுக்க ஆரம்பித்ததால் ஏற்படும் கதி அது! 'நின்று நின்று காலே வலிக்கிறதே!' என்று முதன் முறையாக நான் அலுத்துக் கொண்ட அதே சமயம், "ரொம்ப நேரமாக நிற்கிறீர்களே! நீங்கள் வயதில் பெரியவர்கள். என் இடத்தில் உட்கார்ந்து கொள்ளுங்கள்" என்று ஒரு வாலிபன் சட்டென்று எழுந்து எனக்கு இடமளித்தான். நரையும், வழுக்கையும், கண்ணாடியும் என் நாற்பதை அவனுக்கு ஐம்பதாகப் பூதம் காட்டியிருக்கலாம். அந்தக் கணத்தில்தான் வயது கூடினதால் கூடின மதிப்பை நானறிந்து கொண்டேன். என் உடல் பலவீனத்தை ஒருவன் சுட்டிக் காட்டினவுடன் என் உள்ளத்தில் புதிய பலம் ஊற்றெடுப்பதை உணர்ந்தேன்.



''முதல் தேதி வந்தால் என் மனைவி ஒரு புடவை எடுக்கிறாள்.''
''தேவலையே! என் மனைவி உயிரையேன்னா எடுக்கிறாள்!''

பொறுப்பு மிக்க அலுவலகங்களில் ஆயிரம் இரண்டாயிரம் ரூபாய் ஊதியம் பெறும் இளம் அதிகாரிகள் நானூறு ரூபாய் கூட வாங்காத அனுபவஸ்தர்களின் யோசனைகளைக் கேட்டே எல்லாக் காரியங்களையும் செய்வது மரபு. 'அனுபவஸ்தர்' என்ற முத்திரையை நாற்பது வயது கூட ஆகாதவர்கள் மீது இந்த உலகம் அடிப்பதில்லை. தொழிலதிபர்கள் தங்கள் ஸ்தாபனங்களில் புத்திர சிகாமணிகளையும், மாப்பிள்ளைத் தெய்வங்களையும், மைத்துன மகானுபாவர்களையும் உயர் பதவியில் அமர்த்தினாலும் நாற்பதுக்கு அஞ்சலி செலுத்தத் தவறுவதில்லை. நாற்பதுக்குள் முழுசாக இரண்டு இருபதும், மூன்று மாமாங்கங்களும் அடங்கியிருப்பதை நன்கு உணர்ந்தவர்களாயிற்றே அவர்கள்!

நமக்கு வயதாக ஆக நமக்கு மேலிருக்கும் உறவுப் படிகள் சரிந்து நமது நிலைமை உயர்கிறதைக் காண்கிறோம். எள்ளுப் பேரனாகப் பிறந்து, கொள்ளுப் பேரனாக மாறி, பிறகு பேரனாக விளங்கிப் புத்திரனாய் நிற்கும்போது நம் வயது இருபது இருபத்தைந்தை எட்டி விடுகிறது. அன்று வரை நாம் எத்தனை பெரியவர்களுக்கு எத்தனையாயிரம் முறை சாஷ்டாங்கமாக விழுந்து விழுந்து வணங்கியிருப்போம்!

இருபதாவது வயதில் மாமனார் மாமியார் என்ற இரண்டு புது உறவுகளுக்கு வணங்கும் கடமை கிடைக்கும் அதே வேளையில் நம்முடைய காலைப் பிடித்து உரிமையோடும் அன்போடும் நமஸ்கரிக்கும் ஒரு மனைவியும் கிடைத்து விடுகிறாள். நமக்கு வயது நாற்பதாகும்போது நாம் வணங்க வேண்டியவர்களின் எண்ணிக்கை மிகவும் குறைந்திருப்பதுடன் நம்மை வணங்குவதற்குத் தயாராகப் பிள்ளை, பெண், மருமகன், மருமகள், பேரன், பேத்தி என்று வரிசையாக ஒரு புதிய தலைமுறையே புறப்பட்டு விட்டதை, அல்லது புறப்பட இருப்பதை நாம் காணும்போது, மூப்பு வந்து விட்டதே என்ற கவலையை மறக்கக்கூடிய ஓரின்பம் நம் நெஞ்சில் நிறைகிறது.

நாற்பது வயதுகளின் சிகரம். வாலிபம் முதுமை வேஷம் பூண்டும், முதுமை வாலிப உள்ளம் கொண்டும் செயல்படுகிற பருவம் தான் நாற்பது. நான் என்றும் நாற்பதாகவே இருக்க விரும்புகிறவன்!

# கவர்ச்சிகர புதிய மாடல்

# அதிசயத்தக்க மலிவு விலை!

6 வால்வுகள் - 5 பாண்டுகள்

A-C எல்லா அலைகளும்



- 11 முதல் 120 மீட்டர் களுக்கு நான்கு சிந் நலை பாண்டுகளும் ஒரு நடுத்தர அலை பாண்டுமுள்ளது.
- 10" × 6" P. M. எலிப்டிகல் ஒலி பெருக்கி சாதனம்.
- இரு வண்ண கவர்ச்சி கரமான மர காபினட்.
- நவீன 'F' ஸீரிஸ் நோவல் பேஸ் வால்வுகள்
- அற்புத சேவை.
- எல்லா விதமான சீதோஷ்ண நிலைக் கும் ஏற்றது.
- ஒரு வருட உத்திர வாதம்.

## ரீஸா

மாடல் BS 5

## விலை ரூ. 370 -

எக்ஸைஸ் தீர்வை மற்றும் ஸ்தல வரிகள் தனி

★




## ரீஸா ரேடியோ ஷோ - ரூம்

மியூஸி - மியூஸிகல் "

3/16 மவுண்ட் ரோடு - த. பெ. 3755 - சென்னை-2

போன் 84380 தந்தி "ASSEMBLER"

Chari




பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

குருதேவர் தாகூருடைய நூற்றி ஒன்றாவது பிறந்த நாள் இந்த வாரம் கொண்டாடப் பெறுகிறது. அவர் எண்பத்தொரு வருடங்கள் வாழ்ந்தார். இதில் ஏறக்குறைய அறுபத்தாறு ஆண்டுகள், இடையறாத இலக்கியப் பெரு வெள்ளமாக அவருடைய வாழ்க்கை அமைந்தது. சிறுகதை, நாவல், கட்டுரை, பேச்சு, நாடகம், கவிதை, பாடல், காவியம் எல்லாத் துறைகளிலும் அவர் கற்பனை மலர்ந்தது. இந்த அரிய சாதனையின் உயர்வு முழுவதையும், ஒரு சில கட்டுரைகளால் அளந்துவிட முடியாது. 'ஒரு பானைச் சோற்றுக்கு ஒரு சோறு பதம்' என்ற கணக்கில்தான் இதுவரையில் பார்த்து வந்திருக்கிறோம். இன்று அவரிடம் விடை பெறும் இந்தத் தருணத்தில் எதை நினைப்பது, எதைச் சொல்வது?

அவரை எண்ணும்போது, முதலில் தோன்றுவது அவர் ஒரு மகரிஷியைப் போல் வாழ்ந்தார், பேசினார் என்பது தான். பாரத நாட்டின் தத்துவ ஒளி அவர் கவிதையில் எங்கும் படிகிறது. மனிதனுடைய ஆசைகள், சஞ்சலங்கள், போராட்டங்கள் இவற்றுக்கு முடிவுண்டா? இவற்றிலே அழுந்தி, ஓயாத செயல்களில் சிக்குண்டு, தடுமாறி வருந்தும் மனிதனுக்கு, இந்த வாழ்க்கைக்கு அப்பாலிருந்து இதற்கு ஆதாரமாய் இயங்கும் சத்தியப் பொருள் எவ்வாறு தென்படும்? இவனைப் பார்த்து, குருதேவர் பேசுகிறார்: அப்பனே, நீ என்ன செய்கிறாய், தெரிகிறதா? நான், நான், நான் என்று பேய் போல அலைகிறாய். எல்லாம் உன் வலிமையால் சாதிக்க முடியும் என்று எண்ணுகிறாய். எத்தனை நாளுக்கு இப்படி உன்னையே தூக்கிக் கொண்டு சுற்றப் போகிறாய்? எத்தனை நாளைக்கு உன் கையையே எதிர்பார்த்து, உன் வாசலிலேயே பிச்சைக்காரனாக நிற்கப் போகிறாய்? விட்டுவிடு தம்பி, இதையெல்லாம் விட்டு விடு. எல்லாம் அவன் பாரம் என்று இருக்கப் பழகு. உன் ஆசையின் மூச்சுப்பட்டால் எந்த ஒளியும் அணைந்து போகும்; உன் ஆசை பற்றினால், இந்த உலகமே வெறும் ஊன் கடாகி விடும். அவன் அருள் ஒன்றையே எண்ணி வாழக் கற்றுக்கொள்

உன் தோளில் உன்னையே தூக்க முயல்
பேதையே
உன் வீட்டு வாசல் நின்றே
உன்னையே நோக்கி இருகை ஏந்திப்
பிச்சையென
உழல்கின்ற ஏழையே கேள்:
உன்பாரம் அத்தனையும் அவன் பாரம்
என்று விடு.
ஒரு கவலை இல்லாது.
உன் பாரம் உலகத்தின் பாரம் எல்லாம் அவன்
ஒருவனே தாங்க வல்லான்
உன் ஆசை பேய் மூச்சு விட்டதும் விளக்கிலே
ஒளிச் சுடர் அவிந்து போகும்.
உன் ஆசை இறைவன் உளம் உணராத
ஊன் காட்டில்
ஊற்றும் ஊத்தை ஆகும்.
உன் ஆசை மாசுற்ற கையினால் எதனையும்
ஒரு போதும் பற்றிடாதே.
எந்நாளும் அவன் கருணை அருள்வதே
போதுமென
இருக்க நீ மறந்திடாதே.

'வாழ்க்கைக் கடலில் எறிபட்டுத் தவிப்பதை விடுத்து, கடலின் அக்கரையில் உள்ள சத்திய லோகத்துக்குச் சென்று, உலேவில்லாத ஒரு பொருளோடு ஒன்றி, தனி உயிராகத் தத்தளிக்கும் என்னை உலைத்துவிடவே துடிக்கிறேன்':

அலைகள் எறியும் விளையாட்டில்
அழிந்த காலம் அழிந்ததுகாண்,
உலேவில் பொருளில் எனை ஒடுக்கி
உலேவ தோன்றே விழைகின்றேன்.

நிலையும் நீக்கும் காணாத
நீண்ட பள்ளத் தயலெங்கோ
நிலவி விளங்கும் லோகம்
நேர்வ தொன்றே நோக்கின்றேன்.

இப்படிப் பாடிய போதிலும், இந்த உலகத்தைத் துறந்து செல்லும் நிவிருத்தி மார்க்கத்தைக் குருதேவர் ஏற்கவில்லை. நம்முடைய பாரதியாரைப் போலவே, இங்கேயுள்ள வாழ்க்கை மூலமாக அலகிலா ஒன்றைத் தொடலாம் என்பதே

அவருடைய கருத்து. இது காரணமாக, அவரைக் கருத்தளவில் ஒரு வைஷ்ணவர் என்று வங்காள இலக்கிய அன்பர்கள் பேசுகிறார்கள். இதனால் விஷ்ணுவைப் பரம்பொருளாக அவர் வழிபட்டார் என்பது பொருளன்று. உண்மையில், நிர்க்குணப் பிரும்மமாகவே குருதேவருடைய சிந்தையில் நித்தியப் பொருள் தோன்றியது. மனிதனுடைய உயிருக்கும், கடந்து நிற்கின்ற கடவுள் தத்துவத்துக்கும் உள்ள தொடர்பை, எத்தனையோ விதமான மனித உறவுகளின் மூலமாக அவருடைய கவிதை விளக்குகிறது. கடவுளைத் தாயாகவும், தந்தையாகவும், அரசனாகவும், காதலனாகவும் பாவித்து, நம்முடைய ஆழ்வார்களைப் போல, நம்முடைய நாயன்மார்களைப் போல, நூற்றுக்கணக்கான பாடல்களை அவர் பாடியிருக்கிறார். இப் பாடல்களில், மனித உறவுகளின் உணர்ச்சி வேகம் துடிப்பதைக் காணலாம். அதே சமயத்தில், இந்த உணர்ச்சியைச் சரடாகக் கொண்டு இறைவனை நோக்கிச் செல்லும் உயிரின் மெய்ப்பொருள் யாத்திரையின் பல படிகளையும் காணலாம். சிறு வைர மணிக்குள்ளே, அலகிலாத ஒளி துள்ளவில்லையா. அதுபோல, இப்பாடல்களில் அகண்டாகாரமான சத்தியத்தின் பேரொளி சுடர் விடுகிறது. இதோ பாருங்கள் ஒரு பாட்டு, நாயகி-நாயக பாவத்தில் அமைந்தது:

பாடலில் தலைவி பேசுகிறாள். இரவில் நாயகனைத் தேடிச் செல்கிறாள் தனிமையாக; பகலிலே அவன் வருவான் என்று பதறும் உள்ளத்தோடு காத்திருக்கிறாள்; மறுபடியும் இரவு வருகிறது. இவள் தேடிப் போகவில்லை அவனே வந்துவிடுகிறான்; வசமிழந்து மருவ நினைக்கிறாள்; ஆனால், அவள் மார்பில் உள்ள ஆபரணம் ஒளி சிந்தவே, அந்த வெளிச்சத்தில் நாயகனை அணைய நாணுகிறாள்.

தன்னை மறந்து, தன் நாமம் கெட்டால் அல்லவா தலைவனைக் கூட முடியும்?

**இருளில் தனியே அவனைக்காண**
**ஏகும் அந்த நள்ளிரவில்,**
**குருவி ஒன்றும் கூவுவதில்லை,**
**குறுமென் காற்றும் அசைவதில்லை.**

**தெருவில் எங்கும் மோனம்; ஆனால்**
**சில்லென்(று) அறை என் சிலம்பொலியே**
**பெருகும் பாதம் பெயரப் பெயரப்**
**பிளிக்கும், ஐயோ, வெட்கமடி!**
(அறை — ஒலிக்கின்ற.)

**வருவான் என்றே மாடத்தேறி**
**வழியை அளக்கும் வேளையிலே**
**மரம் நிலைகள் அசையா நயரும்**
**மயங்கிக் காவல் மறந்து துயில்**
**புரியும் பேதை வான்போல் ஆற்றுப்**
**புனலும் கிடக்கும்; பாழ்நெஞ்சோ**
**நீரும் பதறும் சிந்தும் அதனைத்**
**தேற்ற வழியோ இல்லையடி.**

**அருகில் வந்தே அமர்வான் என்றன்**
**ஆவி சிலிர்க்கும், உடல் துவளும்**
**செருகும் இமைகள்; செறியும் இரவு;**
**செல்லக் காற்று விளக்கணைக்கும்**

**மருவ நினைந்தால் மானங்குலைந்(து) என்**
**மார்பின் இழையே ஒளி சிந்தும்**
**உருவி அதனை எங்கோ வீசி**
**ஒளிக்க வழியும் இல்லையடி!**

இப்படியெல்லாம் பலவிதமான மனித உறவுகளை ஆதாரமாக வைத்தே கடவுளைப் பற்றிப் பாடியபோதிலும், இறைவனை வடிவம் கடந்த பூரணமாகவே குருதேவர் கருதினார். என்றாலும் வடிவற்ற ஒன்றை, நம்மைச் சுற்றியுள்ள கோடி கோடி வடிவங்களின் மூலமாக உணரலாம் என்பதை அவருடைய கவிதை பேசுகிறது. இந்தப் பிரபஞ்சம், மண்ணும் விண்ணும் அண்டகோளங்களும், உயிர் என்ற மாயமும், உயிரற்றவை என்று நாம் கருதும் விந்தைகளும் ஒன்றாக அலைமோதும் இந்த வடிவப் பெருங்கடல், இதுவே இறைவனுடைய விராட் ஸ்வரூபம். இதுவே அவனுடைய திருமேனி என்பது வைஷ்ணவ சித்தாந்தம். இந்த அடிப்படையில், தாகூரின் கவிதை இயங்குகிறது. இதனாலேயே அவரை வைஷ்ணவர் என்று பேசுகிறார்கள். இதனாலேயே தாகூருடைய கவிதைக்குத் தனித் தன்மை ஒன்று ஏற்படுகிறது.

அது என்ன? மனித வாழ்க்கையின் எல்லா அம்சங்களையும் பற்றி அவர் பேசுகிறார். குழந்தை, காதலன், காதலி, உழைப்பாளி, கிழவன், அன்பு, வெறுப்பு, பெருமை, பொறாமை, நட்பு, பகைமை, ஆசை, நிராசை, தாபம், அமைதி, எதைப் பற்றித்தான் அவர் பேசவில்லை? ஆனால் எதைப் பற்றி அவர் பேசிய போதிலும் இங்கே நடைபெறும் மனித வாழ்க்கையை மிக நுணுக்கமாக, தத்ரூபமாக அவர் காட்டிய போதிலும், பேசும் பொருளில் எல்லாம், காட்டும் காட்சியில் எல்லாம் பொருளுக்கும் காட்சிக்கும் அப்பாற்பட்ட சத்தியம் ஒன்றின் சாயல் எப்போதும் படிகிறது. உழவன் நண்பகல் வெய்யிலில் கழனி வெளியில் உடம்பை ஒடித்து உழைக்கிறான்; நாணம் படர்ந்த விழிகளோடு, காதலி தன் நாயகனைக் காணச் செல்கிறாள்; ஆற்றிலே தோணிக்காரன் படகு செலுத்துகிறான்; கரையில் குழந்தைகள் மணலை வாரி இறைத்து விளையாடுகிறார்கள்; உலோபி ஒருவன் எங்கேயோ பணத்தைப் புதைத்து வைக்கிறான்; திருடன் அதைக்



# நாளை என்பதும் உண்டோ?



இன்றே செய்க. வருங்காலத்திற்கான திட்டம் நன்றே நடைபெற இன்றே செய்க. ஏனெனில் நாளை என்பது நாண் ஏற்றாத கணை.

ஆயுள் இன்சூரன்சுப் பாலிசி பெறுவதுபற்றி ஆழ்ந்து சிந்திக்க வேண்டிய அவசியமும் உண்டோ? போட்ட பணத்திற்கு ஏற்ற சரக்கா என்றெல்லாம் வருத்தம் கொள்ளாது நேரடியாகப் பெறக்கூடியது இது ஒன்றே! உங்கள் முன்னெண்ணத்திற்கு ஒரு முழுச்சான்றாகும் இது! உங்கள் குடும்பத்தின் வருங்காலப்பாதுகாப்பிற்கு ஓர் ஊன்றுகோல். எவ்வளவு விரைவில் பாலிசி எடுக்கிறீர்களோ அவ்வளவிற்கும் உங்களுக்குத்தான் நன்மை; பணம் குறையும்.



**வருங்காலத்திற்கு வகைசெய்வீர்**

**ஆயுள் இன்சூரன்சு மூலம்**

EP LIC/Ú/24

களைவாடுகிறான்; அரசியற் சுழலில் பலர் ஆடுகிறார்கள்; உடலின்பம் இல்லையே என்று கிழவன் ஏங்குகிறான்; உயிரின்பம் எது என்று ஞானி தேடுகிறான்; இப்படி யாக, மனித வாழ்க்கையின் ஆயிரம் ஆயிரம் நிலைகளைக் கவிஞர் தாகூர் பாடு கிறார். பாடும்போது, வாழ்க்கையில் பிடிப்போடு, அதன் வண்ணம் சிறிதும் மங்காமல் பாடுகிறார்; ஆனால், மனித வாழ்க்கையில் எதைப் பற்றிப் பேசிய போதிலும், அது தனித்து நிற்கவில்லை, வாழ்க்கையின் மற்றைய பகுதிகளோடு, இறைவன் என்ற சக்தியால் பிணைக்கப் பட்டிருக்கிறது என்ற உண்மை அவ ருடைய பேச்சில் தொனித்துக் கொண்டேயிருக்கிறது. இதுவே தாகூர் கவிதையின் தனித்தன்மை.

இயற்கைக் காட்சிகளைப் பற்றி அவர் பாடும் போதும், இப்படித்தான். புயலின் பயங்கரத்தில், மகா சம்ஹாரத்தின் குரல் கேட்கிறது. இளவேனிலின் இனிய மழையில் உலகையெல்லாம் அணைக்கும் பேரருளின் கனிவு பேசுகிறது. அந்தி மாலையின் செக்கர் வெள்ளம், அலகில்லா ஆற்றலின் ஒரு செல்வலையாகப் புரள் கிறது. மலரின் புன்னகையில், இறைவ னுடைய விழி தென்படுகிறது. கடல் அலையின் விம்மலில் அகண்டப் பேரெழி லின் சதங்கையொலி கொஞ்சுகிறது. குருவியின் சிறகொன்று விழுந்தால், நட்சத்திர மண்டலம் சலிக்கிறது. சிறு மணல் ஒன்றில், விசுவ வெளி முழுவதை யும், ஒரு கணத்தினுள்ளே காலாதீத நெடும் பரப்பையும் நேரடியாகவோ, அடி நாதமாகவோ காட்டிச் செல்கிறது குருதேவரின் கவிதை. இதுவே அதன் தனித் தன்மை.

இந்த வாழ்வை அவர் ஒதுக்கவில்லை; அதற்குமாறாக, இதில் அவர் திளைத்தார்; இதுவே சத்தியத்தைக் காணும் வழி என்று கண்டார், காட்டினார். அலைக்கும் கடலுக்கும் எப்படி முரண்பாடில்லையோ, அப்படியே வாழ்க்கைக்கும் (அது ஓர் அலை) இறைவனுக்கும் (அவன் ஒரு கடல்) முரண்பாடில்லை என்ற தர்சனம் அவ ருடைய கவிதையில் வடிவாகிறது.

குருதேவர் சொல்கிறார், நூறு வரு டங்கள் கழிந்தபின், அவருடைய கவிதை களைப் புரட்டிப் பார்க்கும் ஒருவனைப் பார்த்து-அதாவது என்னைப் பார்த்து, உங்களைப் பார்த்துச் சொல்கிறார்: 'நண்பா, யாரோ நீ? நூறு ஆண்டு களுக்குப் பிறகு என்னுடைய பாடலைப் படிக்கிறாய். படி, படி. ஆனால் இதோ, என் முன்னே பூத்துக் குலுங்கும் வசந்த மலரில் ஒன்றையாவது என்னால் உனக்கு அனுப்பமுடியுமா? இதோ, இந்த வண்ண மேகத் துணுக்கில் சிக்கிப் புரளும் பொன்னில் ஒரு துளியாவது எடுத்து உனக்குப் பரிசாக வழங்க முடியுமா? முடியாது, முடியாது.

'என் பாடலைப் படிக்க வேண்டுமா? முதலில் ஒன்று செய். உன் வீட்டுக் கதவைத் திறந்து, உன் நெஞ்சின் கத வையும் திறந்து, வெளியே பார். எதிரிலே உள்ள பூங்காவில் அங்கே கமழும் நறு மணத்தில், இன்று என்முன் நடனமாடும் எழிலை யெல்லாம் கண்டு கொள். உன் நெஞ்சில் ஊறும் களிப்பில், என்னைப் பித்தாய்ச் செய்யும் இந்த உயிரோட் டத்தை உணர்ந்து கொள். அப்போது என் பாடல் உனக்கு விளங்கும். காலத் தைக் கடந்து என் உயிரும் உன் உயிரும் ஒட்டும். செத்த சொல்லும் சாகா உயிராகும்.'

நூறு வருடம் கழிந்தபின் என்
  நூலைப் புரட்டிக் கவிதையிலே
ஆறப் பருக எண்ணுகிறாய்,
  யாரோ நீயும்? அன்பா, கேள்.

தேறி இந்த இளவேனிற்
  செல்வ மலரில் ஒன்றேனும்
மீறி வண்ண மேகத்தில்
  மின்னும் பொன்னில் துளியேனும்

என்னால் உனக்குப் பரிசாக
  எடுத்து வழங்க இயன்றிடுமோ?
அன்பா, நீயே உன் கதவை
  அகலத் திறந்து வெளியே பார்.

முன்னி என்றோ எனதுளத்தில்
  முகிழ்த்த வாச நினைவெல்லாம்
உன்முன் மலரும் பூங்காவில்
  உணர்ந்துன் வாழ்வில் களித்திடு நீ.

ஒரு நூற்றாண்டின் முன்னம் என்றோ
  உதித்த வசந்தத் தொரு நாளில்
பெருகிக் களிப்பாய் என்னுளத்தைப்
  பித்தாய்ச் செய்த உயிரோட்டம்

வரையில் லாமல் வடித்த இசை,
  வருங் காலம் கடந்துனை
மருவும் வியப்பை உன் மனத்தில்
  மலரும் களிப்பில் உணர்ந்திடு நீ.

'வாழ்வை உணர்ந்து, அதனுள் தோய்ந்து களித்தால், என் பாடலும், என் உள்ளமும் உனக்குப் புரியும்' என் கிறார் குருதேவர். உண்மைதான். ஆனால், அவருடைய பாட்டில் அவருடைய உள் ளத்தில், தோயும்போதுதான் வாழ்வின் பெருமையும் அழகும் நம்முடைய மனத் தில் ஊறுகின்றன என்பதும் உண்மை. இயற்கையின் அளக்கொணா அழகு, மனித வாழ்வின் அலகிலாத் தன்மை, இரண்டிலும் மாயமாய் உறையும் சத்தி யத்தின் ஒளி— இவற்றைப் பேசும் ஞானி யின் குரலே குருதேவரின் கவிதைக் குரல்.

# பாண்ட்ஸ்

## ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடர்

**பனித்துளியின் புதுமையையும், காலை ஸ்நானத்தின் சுகத்தையும் நாள் முழுவதும் அளிக்கும்!**




புத்துணர்ச்சியும், இதமும் அளிக்கும் பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரை உங்கள் உடம்பின் மேல் தூவிக்கொள்ளுங்கள். அது வியர்வையை சீக்கிரத்தில் உறிஞ்சி, மிக உஷ்ண காலத்திலும்கூட ஸ்நானத்திற்குப்பின் உண்டாகும் புத்துணர்ச்சியை நாள்முழுவதும் நிலைக்கச் செய்யும். எப்பொழுதும் புத்துணர்ச்சியுடன் விளங்க பாண்ட்ஸ் ட்ரீம்ப்ளவர் டால்கம் பவுடரையே உபயோகியுங்கள்.

சீஸ்ப்ரோ-பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடட்

(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ். ஏ.யில் இணைக்கப்பெற்றது)



# புனர்ஜென்மம்

## (திரைக்கதை அல்ல

குற்றாலத்திலே ஒரு கல்யாணம். அருவியில் ஆனந்தமான ஸ்நானம்; திருமண விருந்து. இரண்டையும் வெகுவாக அனுபவித்தேன்; தம்பதிகளை நிறைந்த மனத்துடன் ஆசீர்வதித்தேன். பின்னர் விடைபெற்றுக் கொண்டேன். தென்காசி வரையில் 'பிளஷ'ரில் ஓ. சி. சவாரி. திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸில் ஏகக் கூட்டம். 'டி. டி. ஆரி'டம் சொல்லி விட்டு இரண்டாம் வகுப்புப் பெட்டி ஒன்றில் உள்ளே இருந்தவர்களுடன் சண்டை போட்டு ஏறினேன். 'கொஞ்சம் இடம்' என்று கெஞ்சிக் கேட்டு அமர்ந்தேன். 'உஷ்' என்ற பெருமூச்சுடன் சட்டைக் காலரைச் சரி செய்து விட்டு நிமிர்ந்தேன்.

தெருவில் நடந்து சென்றுகொண்டே இருக்கும் போது திடீரென்று முதுகில் ஒரு பலமான அடி விழுந்தால் எப்படி இருக்கும்?

சற்றும் எதிர்பாராத தருணத்தில் 'பளார்' என்று முகத்தில் அறைவது போலத்தான் இருந்தது—

அவள் அழகு.

ஆங்கிலோ இந்தியப் பெண்மணி என்பதைக் கேசம், உடை, அலங்காரம் இவற்றால் மட்டுமல்ல, கழுத்தைச் சுற்றித் தொங்கிய மெல்லிய சங்கிலியில் இணைக்கப்பட்டிருந்த சிறிய தங்கச் சிலுவையாலும் உணர்ந்துகொள்ள முடிந்தது. கொஞ்சம் கறுப்புத்தான் — இருந்தாலென்ன? அந்தக் குறை தெரியாத அளவுக்கு வேறு பல லட்சணங்கள் பொருந்தியிருக்கையில் நிறத்தைப் பற்றி நினைக்கத்தான் முடியுமா? ஆண்களைப் போலவே கால் சராயும் சட்டையும் அணிந்திருந்தாள். ஆனால் இவை பெண்மையின் எழிலை எடுத்துக் காட்டவென்றே அமைக்கப்பட்ட ஆண்கள் பாணி ஆடை!

கால்கள் இரண்டையும் 'ஸீட்'டின் மேல் நீட்டிப் பக்கத்திலிருந்த தலையணையில் முழங்கையை ஊன்றித் தன் அருகே யிருந்த ஆஜானுபாகுவான தோற்றம் கொண்ட ஆண்மகன் பக்கமாக உடலைச் சாய்த்து அவள் உட்கார்ந்திருந்த விதத்தில் 'இவர் என்னுடையவர்' என்று உரிமை கொண்டாடிப் பறைசாற்றுபவளாகக் காட்சியளித்தாள்.

ரயில் நகர்ந்தது. பார்வையைச் சன்னலுக்கு வெளியே செலுத்தினேன்—

சிரமப்பட்டுத்தான்.

டி. டி. ஆர். பணம் பெற்றுக்கொண்டு ரசீது தரும் முகமாகச் சற்று நேரம் என் சிந்தனையை ஆக்கிரமித்துக் கொண்டார்.

அப்புறம் பக்கத்தில் கிடந்த ஒரு தினசரியில் புதுச் செய்திகளைத் தேடுவதில் தீவிரமாக முனைந்தேன்.

''ஏன் சார்! 'சமாதி' என்கிறார்களே, அதில் உங்களுக்கு நம்பிக்கை உண்டா?''

எதிரே இருந்து இப்படி ஒரு கேள்வி பிறந்ததும் மெல்லப் பத்திரிகையைத் தாழ்த்தி விழிகளை உயர்த்தினேன்.

அந்தப் பெண்ணின் முகத்தில் மந்தகாசம் தவழ்ந்தது. வினா எழுப்பியது அவளுடன் இழைந்தவாறு இருந்தவன்.

**கி. ராஜேந்திரன்**

"இரண்டாவது பக்கத்தில் ஒரு 'நியூஸ்' வெளியாகியிருக்கிறது. அதைப் படியுங்கள்!" என்றான் அவன்.

பத்திரிகையைச் சொடுக்கிப் புரட்டினேன். "பத்து மணி நேரம் பூமிக்கடியில் புதைந்து கிடந்தார்! — சிவயோக சித்தரின் சாதனை!"

கீச்சக் குரலில் அந்தப் பெண் சிரித்தாள்.

கிறிஸ்துவர்களாய் இருப்பதால் இதையெல்லாம் கேலி செய்கிறார்களோ என எண்ணினேன். "உடலையும் உள்ளத்தையும் தங்கள் இச்சைப்படியெல்லாம் கட்டியாளக்கூடிய மகான்கள் இருக்கத்தான் செய்கிறார்கள்" என்றேன் வீம்புக்காக. உண்மையில் இதெல்லாம் வெறும் புரளி என்பதாக எனக்கு அபிப்பிராயம்.

"கரெக்ட்" என்று ஆமோதித்தான் எதிரே இருந்தவன். "எனக்குக்கூட அப்படிப்பட்ட ஒருவனைத் தெரியும். ஆனால் அவன் சிவநேசச் செல்வனல்ல. அவன் பெயர் ஆல்பர்ட்..."

"ஆரம்பித்து விட்டீர்களா?" என்று தடித்த உதடுகளை மொட்டுப் போல் குவித்துக் கோபித்துக் கொண்டாள் அவள்



காதலி. "இவருக்கு இதுதான் வேலை" என்றாள், செல்லமாக அவன் தோளைத் தட்டியவாறே.

"ஆல்பர்ட்டைப் பற்றிச் சொல்லுங்கள்" என்றேன் அடக்கமாட்டாத ஆர்வத்துடன்.

* * *

தன் திட்டத்தை அவன் வெளியிட்ட போது அசந்துபோய் விட்டாள் ஜேன். "ஆல்பர்ட்! தயவு செய்து வேண்டாம்! ஆபத்து!" என்று கெஞ்சினாள்.

"ஜேன்! நீ சும்மா இரு!" டாம் அவளை அதட்டி அடக்கிவிட்டு ஆல்பர்ட்டை ரொம்பவும் மெச்சிக் கொண்டான். "அருமையான யோசனைதான்; ஆனால் நிஜமாகவே அதை நிறைவேற்ற உன்னால் முடியும் என்று சொல்கிறாய்?" என்று கேட்டான்.

டாம் அதிசயப்படுவதைக் கண்டு சிரித்தான் ஆல்பர்ட். "இதோ பார்! என்னுடைய பதினைந்தாவது வயதில் ஒரு சாமியார் சமாதியில் இருப்பதாக ஏதோ ஒரு பத்திரிகையில் படித்தேன். அன்று முதல் எனக்கு அதில் ஒரே பிரமை; ஈடுபாடு. கடந்த பத்து வருஷங்களாக ஓய்வு நேரங்களிலெல்லாம் தனிமையில் இருந்து யோக மார்க்கத்தில் பயிற்சி பெற்று வந்திருக்கிறேன்" என்றான்.

"உன் உடலின் அவயவங்களெல்லாம் உன் சொற்படி நடக்கும் என்கிறாயா?" என்று டாம் கேட்டான்.

"வேண்டுமானால் பரீட்சித்துப் பார்!" என்று கூறிவிட்டு ஆல்பர்ட் தரையில் படுத்துக் கொண்டான். "சரியாக அரை மணி நேரம் பொறுத்து உலுக்கி எழுப்பு. அதுவரையில் எனக்குத் தொந்தரவு கொடுக்காமல் இரு."

ஆல்பர்ட் கண்களை மூடிக் கொண்டான். இரண்டு மூன்று முறை நீள சுவாசத்தை இழுத்து விட்டான். அப்புறம்—

அவன் சுவாசிக்கவே இல்லை!

ஐந்து நிமிஷமா, பத்து நிமிஷமா! அரை மணி நேரம்!

ஜேன் அழ ஆரம்பித்து விட்டாள். ஆதரவாக அவளை அணைத்துக் கொண்டு விசும்பலை அடக்கினான் டாம். 'அரை மணி நேரம்தான். அமைதியாக இரு' என்று கேட்டுக் கொண்டான்.

விநாடிகள், நிமிஷங்கள் ஊர்ந்தன. ஆல்பர்ட்டை வெறித்துப் பார்த்தார்கள் இருவரும். ஒரு நெளிவு ஒரு சுளிவு—ஊஹூம்! ஒன்றையுமே காணோம்! சிலை; கற்சிலைதான்! இருவரும் மாறி மாறிக் கடிகாரத்தை நோக்கினார்கள். முப்பதாவது நிமிஷம் முடிந்து விநாடி முள் பன்னிரண்டைத் தொட்டதும் பாய்ந்து சென்று ஆல்பர்ட்டை அணுகி, அவன் உடலைத் தொட்டான் டாம். மின்சாரம் தாக்கியது போலக் கரத்தைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டான். ஆல்பர்ட்டின் தேகம் சில்லிட்டிருந்தது....முகம் வெளிறிப் போயிருந்தது. தன்னைச் சுதாரித்துக் கொண்டு, "ஆல்பர்ட்!" என்று உரக்க அழைத்து அவன் மேனியை அசைத்தான் டாம்.

இமைகள் படபடத்தன. மார்பு அலை போலப் பொங்கி எழும்பித் தணிந்தது. இரண்டு நிமிஷங்கள் இப்படிப் பெருமூச் செறிந்த பிறகு டென்னிஸ் பந்து போலத் துள்ளி எழுந்தான் ஆல்பர்ட்.

ஜேன் வீரிட்டுப் பயந்து பதுங்கினாள். மருண்ட விழிகளால் அவனைப் பார்த்தாள்.

"நான் பேயோ பிசாசோ அல்ல ஜேன்!" என்று பெரிதாக நகைத்தான் ஆல்பர்ட். "இதே போலக் குறைந்த பட்சம் எட்டு மணி நேரம் என்றால் இருக்க முடியும். அதற்கு மேலும் அரை மணி, முக்கால் மணி ஆகி விட்டால் பரவாயில்லை!"

"கண்ணால் கண்ட பிறகும் என்னால் நம்பவே முடியவில்லை!" என்றான் டாம்.

"டாம்! பத்து வருஷங்களாக அரும்பாடு பட்டுக் கற்ற கலை இது! பைசாவுக்கு லாபமில்லாமல் போகக் கூடாது!"

மற்ற இருவரும் இதனை உடனடியாக ஒப்புக் கொண்டார்கள். எந்த முறையைக் கையாண்டாலும் சரி; அபாரமான, மகத்தான இந்தச் சாதனைக்குத் தகுந்த பிரதிபலன் இல்லாமல் போகக் கூடாது!

"அப்படியானால் எனக்கு நீங்கள் உதவுவீர்கள், இல்லையா?"

"நிச்சயமாக" என்று பதில் கிடைத்தது.

அளவற்ற சந்தோஷத்துடன் ஆல்பர்ட் தன் திட்டத்தின் முதற் பகுதியை நிறைவேற்றப் புகுந்தான். மறுநாளே ம்க்காக உடையணிந்து ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி ஒன்றினுள் நுழைந்தான். அப்போது ஆயுள் இன்ஷ்யூரன்ஸ் தேசியமாக்கப் படவில்லை. ஐம்பதினாயிரத்துக்குப் பாலிஸி எடுக்க விரும்புவதாகவும் மாதத் தவணைகளில் பணம் கட்டுவதாயும் தெரிவித்தான் ஆல்பர்ட்.

மானேஜர் பலமாக ஆல்பர்ட்டை உபசரித்தார். டாக்டர் ஒருவருக்கு ஆள் அனுப்பிவிட்டு அவனைப்பற்றி அக்கறையுடன் விசாரித்தார்.

"எனக்கு நரேந்திரா இன்ஜினீரிங் ஓர்க்ஸில் வேலை. மாதம் இருநூற்றைம்பது ரூபாய் சம்பளம். அதில் பெரும்பகுதியை 'பிரீமிய'மாகக் கட்டி விடுகிறேன்" என்று உண்மையை விளம்பிய ஆல்பர்ட் பிறகு கொஞ்சம் கைச்சரக்கையும் சேர்த்துக் கொண்டான். "பிதுரார்ஜிதமாக ஓரளவுக்குச் சொத்து உண்டு. அதுவே ஒண்டிக்கட்டையான எனக்குக் காலத்தை ஓட்டப் போதுமானது."

டாக்டரைத் தனியே அழைத்துப் போய்ப் பேசினார் மானேஜர். 'பெரிய தொகை ஜாக்கிரதையாகப் பாரும் என்கிறீரோ?' என்று தனக்குள் சிரித்தபடி அலட்சியமாய்ப் புகையை ஊதிக் கொண்டிருந்தான் ஆல்பர்ட்.

அரை மணி நேரத்துக்குமேல் அவனைத் தட்டிக் கொட்டிப் பார்த்த பிறகு, இவரைக் காட்டிலும் திடகாத்திரமான ஒருவரை இன்று வரையில் நான் பரீட்சித்ததே இல்லை என்று கூறிப் போய்ச் சேர்ந்தார் டாக்டர்.

அகமும் முகமும் மலர, மானேஜர் எல்லா விவரங்களையும் குறித்துக் கொண்டார். "யார் பேருக்குப் பாலிஸியை எழுதி வைக்கப் போகிறீர்கள்?"

"எனக்கு உற்றார் உறவினர் யாருமில்லை." உண்மையைச் சொல்லத் தயங்கவில்லை ஆல்பர்ட். "ஆனால்..."

"ஆனால்...?"



# குழந்தைகள் எல்லோரும் விரும்புவது ப்ரௌன் அன்டு போல்ஸனில் தயாரித்த ப்ளாமாஞ்ச்

## ப்ரௌன் அன்டு போல்ஸன் பிளேவர்ட் கார்ன் ப்ளவர் வாய்க்கு ருசியான ஒரு சிறந்த பதார்த்தம்

ப்ரௌன் அன்டு போல்ஸன் ப்ளேவர்ட் கார்ன் ப்ளவரினால் இதைத் தயாரிக்கும்போது எப்பொழுதுமே மிகச் சிறந்த பதார்த்தமாகிறது. ஏனென்றால் ப்ரௌன் அன்ட் போல்ஸனின் கார்ன் ப்ளவர் மிருதுவாக, சரியான அளவுக்குக் கலங்கக்கூடியது. ஒருக்காலும் கட்டி பிடிப்பதில்லை. மேலும் இது சுவை மிகுந்த 5 வித வாசனைகளில் கிடைக்கின்றது. வனில்லா, ராஸ்பெரி, கேரிமல், ஸ்ட்ருபெரி, மற்றும் பைனபிள் வாசனைகளில் கிடைக்கின்றன. ப்ரௌன் அன்டு போல்ஸனின் மற்ற சாதனங்கள் என்னவென்றால் — பேடன்ட் கார்ன் ப்ளவர், ஜெல்லி, ரெய்டி கஸ்டர்ட் மற்றும் கஸ்டர்ட் பவுடர்.




ப்ரௌன் அன்டு போல்ஸன் பிளேவர்ட் கார்ன் ப்ளவர்

கார்ன் ப்ராடக்ட்ஸ் கோ. (இந்தியா) ப்ரைவேட் லிட்.



**இலவசம்:** இங்கிலீஷ், ஹிந்தி, தமிழ், தெலுங்கு, குஜராத்தி, மலையாளம், வங்காளம், மராத்தி, அல்லது உருது பாஷைகளில் பிரசுரிக்கப்பட்ட அபூர்வமான சமையல் புத்தகம் இலவசமாக வேண்டுவோர் இங்குள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பவும். (வேண்டாத பாஷையை அடித்துவிடவும்).

தபால் செலவிற்காக 25 ந. பைசா விலையுள்ள தபால் ஸ்டாம்பு நான் இத்துடன் அனுப்புகிறேன்.

ஸ்ரீ/ஸ்ரீமதி/குமாரி ..............................

..............................

விலாசம் ..............................

டிப்பார்ட்மென்ட் நம்பர்: KLK4

கார்ன் பிராடக்ட்ஸ் கம்பெனி (இந்தியா) பிரைவேட் லிட்.

த. பெ. நெ. 994, பம்பாய்—1.

இந்த இலவச அளிப்பு இந்தியாவிற்கு மாத்திரம்தான்.

இந்தியாவிற்கான ஏஜென்டுகள்:

பாரி அன்டு கோ. லிட்.

"காதலி ஒருத்தி இருக்கிறாள்!"—இதிலும் பொய்க் கலப்பு கிடையாதுதானே?

இலேசாக முகம் சிவக்க மானேஜர் தொண்டையைக் கனைத்தார். அவள் பெயர் விலாசம் எல்லாவற்றையும் எழுதிக் கொண்டார்.

அன்று மாலை கடற்கரை மணலில் அமர்ந்தவாறே ஆல்பர்ட் நடந்தவற்றை விவரித்தபோது டாமும் ஜேனும் விழுந்து விழுந்து சிரித்தார்கள்.

"இன்னும் ஒரே ஒருவருஷம் அவர்களுக்குச் சந்தேகம் ஏற்படாதிருப்பதற்காக நாம் காத்திருக்க வேண்டும்" என்றான் ஆல்பர்ட்.

"அப்புறம் ஆல்பர்ட் இறந்து விடுவான்" என்றான் டாம்.

"ஐம்பதாயிரம் எனக்குக் கிடைக்கும்" என்றாள் ஜேன்.

"இரவோடு இரவாக நீங்கள் இருவரும் என்னை அடக்கம் செய்த இடத்தில் மண்ணைத் தோண்டி என்னை விடுவிக்க வேண்டும்" என்றான் ஆல்பர்ட். "மூவருமாகக் குழியை இட்டு நிரப்பி விடலாம். யாருக்குமே தெரியாது!"

"அப்புறம் யாரோ ஒருவனாக மாறி நீங்கள் டில்லி போய் விடுவீர்கள்."

"வெறுங்கையோடு அல்ல. முப்பதாயிரத்துடன்தான். அதை மறக்காதே! உங்கள் இருவருக்கும் ஆளுக்குப் பத்தாயிரம்!"

"சுமார் இரண்டாயிரத்து ஐந்நூறு முதலீடு செய்து ஒரே வருஷத்தில் ஐம்பதாயிரம் திரட்டப் போகிறோம்!" என்றான் டாம். நடப்பதெல்லாம் கனவா நினைவா என்றே அவனுக்குச் சந்தேகம்!

மாதாமாதம் ஒழுங்காகத் தவணைகளைக் கட்ட ஆல்பர்ட்டின் சம்பளம் பெரும்பாலும் செலவாகிவிடுமாதலால் அவன் கைச்செலவுக்கு ஜேனும் டாமும் மாதம் ஐம்பது ரூபாய் தருவதாக ஒப்புக் கொண்டார்கள். மானேஜரிடம் ஆல்பர்ட் கூறியதுபோல் அவனுக்குப் பிதிரார்ஜித சொத்து ஏதும் கிடையாது என்பது அவர்களுக்குத் தெரியும்.

"இன்னுமொரு விஷயம்..."

"என்ன?"

"ஜேன் என்னைக் காதலிப்பது போல நடிக்க வேண்டும். சந்தேகத்துக்கு நாம் இடமளிக்கக் கூடாதல்லவா?"

இதை டாம் ஒப்புக் கொள்ளவே யில்லை. ரொம்பவும் வற்புறுத்தியதின்பேரில் போனால் போகட்டும் என்று வாரம் ஒரு முறை நாலு பேர் கண்களில் படுமாறு அவர்கள் வெளியே சென்று வர அனுமதி யளித்தான்.

திட்டத்தின் எல்லா அம்சங்களையும் மனத்திலேயே வைத்துக் கொள்ள வேண்டுமென்றும் அந்தரங்க டைரியில் கூட எழுதக் கூடாதென்றும், ஒருவரிடமிருந்து ஒருவர் உறுதி பெற்றுக் கொண்டார்கள். யார் கண்ணிலாவது அது பட்டுவிட்டால் பிறகு கம்பி எண்ண வேண்டியதுதான்!

ஒரு வருஷம் உருண்டோடியது.

எதிரே இருந்தவர் கதையை நிறுத்தி விட்டார்.

"என்ன ஸார்! மேலே சொல்லுங்கள்" என்று ஆவலுடன் தூண்டினேன்.

"சொல்ல என்ன இருக்கிறது? ஆல்பர்ட் செத்துப் போய்விட்டான்!"

"எல்லாரும் கலபத்தில் நம்பினார்களா அதை?"

"நடிப்பு கச்சிதமாயிருந்தால் நம்புவதற்கென்ன? ஒரு நாள் காலையில் 'ஆ. ஊ' என்றெல்லாம் கூச்சல் போட்டான் ஆல்பர்ட். கீழே குடியிருந்த சாம்பசிவய்யர் மாடியில் அவனறைக்கு ஓட்டமாய் ஓடிவந்தார். வயிற்றைக் குமட்ட மார்பை அழுத்திப் பிடித்துக் கொண்டு ஆல்பர்ட் "நெஞ்சை வலிக்கிறதே!" என்று அலறினான். டாக்டரை அழைத்து வந்தார் சாம்பசிவம். அவர் மருந்து எழுதிக் கொடுத்து விட்டு இருதயப் பரிசோதனைக்காக ஆஸ்பத்திரியில் சேர்க்கச் சிபாரிசு செய்வதாய்க் கூறிச் சென்றார்.

காரியாலயத்துக்கு நாழியாகி விட்டதை உணர்ந்தார் சாம்பசிவம். நோயாளியைத் தனிமையில் விட்டுப் போவதா என்று தவித்தபோது ஆல்பர்ட்டே நல்ல உபாயம் கூறினான். அதன்படி ஆபீஸுக்குப் போகும் வழியில் 'ஜாலி டிராவல்ஸ்'ஸில் தாமதித்து, டாமுக்கு விவரம் தெரியப்படுத்தினார். லீவு போட்டு விட்டு நண்பனிடம் போகுமாறு கேட்டுக் கொண்டார்.

மாலையில் அவர் வீடு திரும்பியதும், வெளியே சவப் பெட்டியை ஏற்றிச் செல்லும் கரிய மோட்டார் நிற்பதைக் கண்டு திடுக்கிட்டு விட்டார்.

தள்ளாடியபடியே மாடி ஏறினார். அங்கே அவர் கண்ட காட்சி அவர் இதயத்தைக் கசக்கிப் பிழிவதா யிருந்தது. சவப் பெட்டியில் கிடந்தான் ஆல்பர்ட். அந்தக் களையான முகம் பார்ப்பதற்குத் தூங்குவது போலத்தான் இருந்தது.

நீண்ட பெருமூச்சுடன் டாம் பெட்டியை மூடினான். ஜேன் ஒரு மூலையில் மௌனமாய்க் கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தாள். கீழே மோட்டாருடன் வந்திருந்த இரண்டொருவரை உதவிக்கு அழைத்தான் டாம். சாம்பசிவம் தாமும் கைலாகு கொடுத்துத் தாங்கினார் பெட்டியை. துக்கம் தொண்டையை அடைத்தது அவருக்கு. ஆல்பர்ட்டும் ஜேனும் கைகோத்துப் போவதை எத்தனை முறை கண்டிருக்கிறார் அவர்? 'மகா பாவி! நானே திருஷ்டி போட்டு விட்டேனோ?' என்று வெளிப்படையாகவே தம்மைச் சபித்துக் கொண்டார். மயானத்துக்குத் தாமும் பின்னோடு போனார். பாதிரி ஒருவரையும் இட்டுவந்து இறுதிக்கடன்களைச் செய்தார்கள்.

சில நாட்களுக்குப் பிறகு ஜேன் வாயிலாக இன்ஷ்யூரன்ஸ் பற்றிக் கேள்விப்பட்டபோது, சாம்பசிவம் தாமே எல்லா உதவிகளையும் செய்ய முன்வந்தார். ஆல்பர்ட்டை அன்று சோதித்த டாக்டரிடம் மாரடைப்பால் மரணம் என்று சர்ட்டிபிகேட் வாங்கினார். கார்ப்பொரேஷனுக்கு நடையாக நடந்து மரண சர்ட்டிபிகேட் வாங்கினார். அப்புறம் இன்ஷூரன்ஸ் கம்பெனி மானேஜரைத் தினம் ஒருமுறை சென்று தாக்கினார். ஜேனிடம் பணம் போய்ச் சேர்ந்த பின்னர்தான் அவர் மனம் நிம்மதியுற்றது.

**ர**யில் மதுரையைத் தாண்டிச் சென்று கொண்டிருந்தது. "நல்ல வேடிக்கை!" என்றேன் நான். "இரவோடு இரவாக ஆல்பர்ட்டைப் புதையுண்ட இடத்திலிருந்து காப்பாற்றி விருப்பார்கள். பணம் கிடைக்கும் வரையில் தலைமறைவாக இருந்து விட்டு, முப்பதாயிரத்தைத் திரட்டிக் கொண்டு, ஆல்பர்ட் லாரென்ஸாக மாறி டில்லிக்கு ஓடி விட்டானு?"

"அதுதான் இல்லை!"

"என்ன? என்ன?"

"ஆல்பர்ட் செத்தே போகட்டும் என்று நிர்மானித்துவிட்டான் டாம்! மயான பூமியின் பக்கமே அன்றிரவு அவன் போகவில்லை!"

"அடப் பாவி! சண்டாளா!" என்று வாய் விட்டுத் திட்டினேன் நான்.

"அதற்கென்ன செய்ய? பணத்தாசை யாரை விட்டது?"

"ஜேனும் இந்தக் காரியத்துக்கு உடன் பட்டு விட்டாளா?"

"டாமின் பயங்கரச் சூழ்ச்சியை முதலில் செவியுற்ற போது ஜேன் அருவருப்படைந்தாள். அப்புறம் அவளையும் பணத்தாசை ஆட்கொண்டிருக்க வேண்டும், தலையாட்டிச் சம்மதம் தெரிவித்து விட்டுத் தன் வீடு போய்ச் சேர்ந்தாள்.

"ஜேன் கையில் பணம் கிடைத்ததும், டாம் கல்யாணப் பேச்சை ஆரம்பித்தான். 'பணத்தை உன் பேரிலேயே பாங்கியில் போடு. உன்னிடமிருந்தால் என்ன? என்னிடமிருந்தால் என்ன?' என்று குழைந்தான்.

"திடீரென்று ஒரு நாள் நடுநிசியில் டாமின் ஜாகைக்கு வந்து அறைக் கதவைப் படபடவென்று தட்டினாள் ஜேன். கதவைத் திறந்த டாம் அவள் தோற்றத்தைக் கண்டே அரண்டு விட்டான். 'பேய்! பேய்!' என்று கூப்பாடு போட்டாள் ஜேன். 'ஆல்பர்ட்டின் ஆவி என்னைப் பின் தொடர்கிறது! நம்மிருவரையுமே கொன்றுவிடப் போவதாய்ப் பயமுறுத்துகிறதே!' என்று கதறினாள்.

"டாம் சிரித்தான். அதில் தெம்பு இருக்கவில்லை!

"'அதோ! அதோ!' என்று சுட்டிக் காட்டி வீறிட்டாள் ஜேன்.

"டாமின் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது. வியர்த்து விதிர் விதிர்த்து விட்டது. 'ஓ!' என்று அலறித் துடித்தான். நிழலோடு நிழலாக நின்ற ஆல்பர்ட்டின் ஆவி மெல்ல வந்த சுவடு தெரியாமல் மறைந்து விட்டது. ஆனாலும் டாம் மூடிய கண்களை நீண்ட நேரத்துக்குத் திறக்கவேயில்லை!

"இதன் பிறகு சரியாக நாலே நாட்களுக்குத்தான் ஆல்பர்ட்டின் ஆவியைச் சகிக்க முடிந்தது டாமினால். இரவு நேரங்களில் அது திடீரென்று தோன்றி அவனைக் கொலைகாரனென்று பழிக்கும்; நிமிஷங்களை எண்ணிக் கொண்டிருக்குமாறு பணிக்கும்; போய்விடும். கடைசியில் ஆல்பர்ட்டின் ஆவி செய்யும் சித்திரவதையைத் தாங்க முடியாமல் தற்கொலை புரிந்து கொள்வதாய்க் கடிதம் எழுதி வைத்துத் தூக்கு மாட்டிக் கொண்டான்!"

'கூ'வென்று ரயில் ஊதும் சத்தத்துக்கும் மேலாக நான் பெரிதாய்ச் சிரித்தேன். "எனக்கு எல்லாம் புரிந்துவிட்டது! நன்றாய்ப் புரிந்துவிட்டது!" என்று பலமாய்த் தலையாட்டினேன். "ஜேன் ஆரம்பத்தில் டாமை நேசித்து வந்தபோதிலும் வெளித் தோற்றத்துக்காக ஆல்பர்ட்டைக் காதலிப்பது போலப் பாவனை செய்யப் போக உண்மையிலேயே அவள் மனம் கொஞ்சம் கொஞ்சமாக அவனிடம் திரும்பியிருக்கிறது. டாமின் நீசத்தனமான சதித் திட்டத்தைக் கேட்டதும் அவனை அடியோடு வெறுத்து விட்டாள். ஆனாலும் அதனை வெளிக்காட்டிக் கொள்ளவில்லை. அவனைப் பழி வாங்கக் கருதியும் கொஞ்ச நாட்களுக்கு அவனால் இடைஞ்சல் ஏதும் இல்லாதிருக்கவும் தொடர்ந்து அவனைக் காதலிப்பதாகவே பாவனை செய்ததுடன் அவன் சூழ்ச்சிக்குச் சம்மதம் தெரிவித்தும் விட்டாள். அதே சமயத்தில் டாமுக்குத் தெரியாமல் ஆல்பர்ட்டையும் சவக் குழியிலிருந்து தன்னந்தனியாகச் சிரமப்பட்டு மீட்டு விட்டாள். இருவரும் ஒன்றுகூடி மகிழ்ந்தார்கள். டாமை ஒழிக்க நினைத்தார்கள். ஆல்பர்ட், ஆல்பர்ட்டின் ஆவியாக நடித்தான்! டாம் பயப்பிராந்தியில் தற்கொலை செய்து கொண்டான்!"

"வெரிகுட்! வெரிகுட்!" என்றார் எதிரே இருந்த நபர்.

"ரொம்பக் கெட்டிக்காரர் ஸார் நீங்கள்" என்றுபாராட்டினாள் ஆங்கிலோ இந்தியஅழகி.

எனக்கு உச்சி குளிர்ந்து விட்டது! "இன்னொன்றும் எனக்குத் தெரியுமே!" என்றேன் பெருமையாக.

"என்ன?" என்று இருவரும் ஏககாலத்தில் கேட்டார்கள்.

"நீங்கள்தான் ஆல்பர்ட்! உங்கள் பக்கத்திலிருப்பது ஜேன்!"

"உஷ் ஷ் ஷ்..." என்றார் அவர் உதட்டில் விரலைப் பதித்து. "நான் ஆல்பர்ட் இல்லை! என் பெயர் லாரென்ஸ்! டில்லிக்குப் போய்க் குடியேறப் போகிறோம். அதற்கு முன்னால் பிறந்த மண்ணைத் தரிசித்து வரத் திருவனந்தபுரம் சென்று திரும்புகிறோம்."

"இருந்தாலும் இப்படி நீங்கள் மோசடி செய்யலாமா? ஐம்பதாயிரம் ரூபாய்! அடேயப்பா!" என்றேன் நான்.

"மோசடி செய்ததால்தான் அரோகரா ஆகிவிட்டது" என்றார் லாரென்ஸ்.

"என்ன? என்ன?"

நான் திருதிருவென்று விழிப்பதைப்பார்த்து விட்டு ஜேன் குறும்புத்தனம் குமிழியிடக் கலுக்கென்று நகைத்தாள். "சமீபத்தில் ஒரு பாங்கு திவாலாயிற்றே கேள்விப்படவில்லை?"

"ஓஹோஹோஹோ" என்று வயிறு குலுங்கச் சிரித்தேன் நான்.

ஒருவாறு என் சிரிப்பு அடங்கிய பிறகு, "ஏன் ஸார்? 'மெஸ்மெரிஸம்' என்கிறார்களே அதில் உமக்கு நம்பிக்கை உண்டா?" என்று மெல்ல ஆரம்பித்தார் லாரென்ஸ்.

"அடிமைப் பிடிடா பாரத பட்டாளுனும்! எனக்குத் தூக்கத்தில் அபார நம்பிக்கை!" என்றவாறே ஜமக்காளத்தைத் தரையில் விரித்துத் தலையணைக்குக் காற்று ஊத ஆரம்பித்தேன்.

என் குறட்டை ஒலி அந்தக் காதலர்களுக்கு இடைஞ்சலாகத்தான் இருந்திருக்கும்!

# அறிமுகப்படுத்துகிறோம்...

## பாமாலிவ்
## லவண்டர் டால்க்

பெருமிதமும்... வசீகரமும் தரும் பிரசித்தி பெற்ற லவண்டரின் நறுமணம் இப்பொழுது உங்களுக்கும் பிடித்தமான பாமாலிவ் டால்க் மூலம் கிடைக்கிறது. இந்த மிக நுண்ணிய சேர்த்தியான டால்க் உங்கள் சருமத்தில் பரவி நாள்முழுவதும் நீடித்திருக்கும். உங்களைப் புத்துணர்ச்சியுடனும் பரிமள அழகுடனும் வைத்திருக்கும் சேர்த்தியை நீங்கள் பெரிதும் விரும்புவீர்கள்.

**லவண்டர்**
பெருமிதமும்...வசீகரமும்
தரும் மணமுடையது

PALMOLIVE
*Lavender*
TALC POWDER

**டி லக்ஸ்**
17 மயக்கும் ஸென்ட்டு
களின் அற்புதக் கலவை

PALMOLIVE
*Talcum Powder*
DE LUXE

# பாமாலிவ்

டால்கம் பவுடர்

PTG.5 T.

# ஆதரவுடன் சீராட்டி
# ஆஸ்டர்மில்க் பாலூட்டி...

நீங்கள் பெற்ற செல்வம்....அன்பு கனிந்த ஆதரவுக்கு அன்னை முகம் நோக்கும் ஆரமுது...அருமையிலும் அருமையான ஆதரவெல்லாம் அவனுக்கே உரிமையாகும்...பொன்னான அவனது ஆரோக்கியத்திற்கு ...... ஆஸ்டர்மில்க். ஏனெனில், தாய்ப்பாலுக்கு நிகரான ஆஸ்டர்மில்க், சிறு குழந்தைகளுக்கென்றே தயாரிக்கப்பட்டுள்ள தூய பாலுணவாகும்.



பாப்பாவின் பச்சிளம் ஜீரண சக்திக்கேற்றவாறு பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது ஆஸ்டர்மில்க். மேலும், இரத்தசோகை ஏற்படாமல் பாதுகாப்பதற்கான அதிகப்படி அயச்சத்தும், தவிர வைட்டமின் 'டி'யும் அதில் சேர்க்கப்பட்டுள்ளன.

**தாய்ப் பாலுக்கு நிகரானது**

இலவசம்! 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலத்தில்)..குழந்தைப் பராமரிப்பு நூல். 50 ந. பைசாவிற்குத் தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: ஆஸ்டர்மில்க், தபால் பெட்டி எண் 2420, சென்னை-2.

OS 6-50-M. TM

# அக்கரைச் சீமையில் ஆறு மாதங்கள்

சோமு

## 24. ஆடுகளும் ஆடைகளும்

பர்மிங்ஹாமிலிருந்து புறப்படும்போது, பல நாள் தங்கியிருந்த ஒரு நகரத்திலிருந்து, பல நாள் பழகிய நண்பர்களிடமிருந்து, விடை பெறுவது போன்ற ஓர் உணர்ச்சி எனக்கு ஏற்பட்டது. இதற்குக் காரணம் மிஸ்டர் பென்னி, மிஸ்டர் கோல்ட் ஆகிய நண்பர்களின் அன்பும், அந்த ஊரிலும் அதைச் சுற்றியுள்ள வட்டாரங்களிலும் நான் பெற்ற இனிய அனுபவங்களுமே!

எத்தனையோ ஆண்டுகள் பழகிய மனிதர்களிடம் இதயம் தோயாமலே இருந்து விடுவதையும், சிலநாட்கள் பழகிய ஒரு சிலரிடம் சில சமயங்களில் இதயம் நன்றாக இணைந்து விடுவதையும் வாழ்க்கையில் நாம் காண்கிறோம் அல்லவா? ஒத்த உணர்ச்சியிருந்துவிட்டால் பழக்கத்துக்கும் நட்புக்கும் நாட்கணக்கு, ஆண்டுக்கணக்கு என்று வேண்டியதில்லை அல்லவா! இது போலவேதான் ஊர்களும் நகரக்காட்சிகளும்! சில நாட்களுக்குள் நம் உள்ளத்தில் நன்றாகப் பதிந்து விடுகிற ஊர்கள் உண்டு! பல ஆண்டுகள் இருந்தும் இதயத்தில் பதியாத ஊர்களும் இருக்கின்றன! இதெல்லாம் மனநிலையையும் சூழ்நிலையையும் பொறுத்த விஷயங்கள் என்பதைப் பார்மிங்ஹாம் நகரத்தில் நன்றாக உணர்ந்தேன்!

அங்கிருந்து புறப்படுவதற்கு முன்பு மிஸ்டர் பென்னி தம்முடைய வீட்டுக்கு என்னை அழைத்துச் சென்று ஒரு சிறு விருந்து கொடுத்தார். அந்த விருந்துக்குப் பிறகு அவருடைய குடும்பத்தின் முன்னோர்களில் ஒருவர் எழுதிய ஓர் ஆங்கில நூலை—மிகப் பழைய ஒரு புஸ்தகத்தை—அன்புப் பரிசாக வழங்கினார். இதைக் கடைசிவரையில் அவர் இரகசியமாகவே வைத்திருந்து புறப்படும்போது கொண்டு வந்து கொடுத்ததால் திகைப்பும் மகிழ்ச்சியும் பன்மடங்காக இருந்தன!

மிஸ்டர் பென்னி அவர்களிடம் ஒருநாள் தம்முடைய தமிழ் நாட்டு வைத்திய முறைகளையும், சித்தர்களுடைய மூலிகைகளையும், ஸ்ரீஹரி போன்ற நண்பர்களின் வைத்தியக் கட்டுரைகளையும் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தேன். டி. வி. சாம்பசிவம் பிள்ளை என்பவர் வெளியிட்டுள்ள ''வைத்திய நிகண்டு'' என்னும் அற்புதமான 'தமிழ் — ஆங்கில நூலைப் பற்றியும் கூறினேன். இதை மனத்தில் நன்றாக நினைவு வைத்துக்கொண்டு நான் புறப்படும்போது ஒரு பழைய புஸ்தகத்தைக் கொண்டு வந்து கொடுத்தார் நண்பர் பென்னி! அது ஆங்கில நாட்டிலே, அந்த ஊர் மண்ணிலே வளர்கிற மருந்துச் செடிகளையும் அவற்றிலிருந்து செய்யக்கூடிய மருந்து வகைகளையும் பற்றிய '' புத்தகம். 1725ம் ஆண்டில் லண்டனில் அச்சிடப்பட்டது! பென்னியின் மூதாதையர் ஒருவர் எழுதியது. அந்தப் புத்தகத்தின் பெயர் ''ஆங்கில வைத்தியன்'' (The English Physician). இதில் முந்நூற்று அறுபத்தொன்பது மருந்து முறைகள் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

இந்தப் புத்தகம்தவிர பார்மிங்ஹாம் நகரைப் பற்றிய அழகான ஒரு சித்திரப் புஸ்தகமும் எனக்குக் கிடைத்தது. நேர்த்தியான படங்களோடு கூடிய இந்தப் புத்தகத்தை எனக்குக் கொடுத்தவர்கள் பார்மிங்ஹாமிலிருந்த ஒரு தமிழ்க் குடும்பத்தினர்!

ஆம்; திருச்சியில் புனிதசிலுவைக் கல்லூரியில் கணித ஆசிரியையாக இருந்த ஸ்ரீமதி சரஸ்வதி அவர்களும் அவருடைய கணவரும் பார்மிங்ஹாமில் உத்தியோகமாக இருந்தார்கள், நான் அங்கே சென்ற போது! அவர்கள் வீட்டுத் தமிழ் விருந்தையும் விட்டு விடாமல் அங்கே சென்றதில் இந்த அழகான புஸ்தகமும் எனக்குக் கிடைத்தது.

இந்த இரண்டு புஸ்தகங்களையும் கையில் வைத்துக் கொண்டு ரயில் வண்டியில் ஏறினேன், 'லீட்ஸ்' நகரத்தை நோக்கி!

'லீட்ஸ்' நகரம் என்றதும் அங்கே உள்ள புகழ் பெற்ற 'பல்கலைக் கழகம்' நினைவுக்கு வரும். இந்தியாவிலிருந்து சென்றுள்ள பல மாணவர்கள் அந்தப் பல்கலைக் கழகத்திலே படிக்கிறார்கள் என்று கேள்விப்பட்டிருந்தேன். அதோடு, நம் அரசாங்கத்தில் பணி புரிகிற அதிகாரிகள் சிலர் தொழிற்படிப்பு சம்பந்தமாகப் பயிற்சி பெறுவதற்கு இந்த ஊருக்கு வந்திருந்ததால் இங்கே பல இந்தியர்களைச் சந்திக்கும் வாய்ப்பு ஏற்படும் என்று கருதினேன்.

'லீட்ஸ்' போய்ச் சேர்ந்ததும் அங்குள்ள ஒரு புகழ்பெற்ற ஆங்கில விடுதியில் தங்குவதற்கு எனக்காக ஓர் அறை திட்டம் செய்

யப்பட்டிருந்ததை அறிந்தேன். மலை போன்று உயரமாக அமைந்த ஒரு பெரிய அழகிய திடலில் நின்ற விடுதி அது! கட்டடத்தின் கம்பீரமும் அதைச் சுற்றி எழுந்து நின்ற மாபெரும் மாளிகைகளும் கண்ணைக் கவர்ந்தன!

விடுதிக்குள்ளே நான் சென்றபோது இரவு நேரம். களைப்பு அதிகமாக இருந்ததால் ரொட்டியும் பாலும் சாப்பிட்டுவிட்டுப் படுத்துக் கொண்டேன். மறு நாட் காலையில் எழுந்து 'குளிக்கும் அறை'க்குள்ளே நுழைந்ததும் அங்கே ஓர் ஆச்சரியம் எனக்காகக் காத்திருந்தது!

"காலை பத்தரை மணிக்கு முன்பு நீங்கள் தயவுசெய்து இங்கே குளிக்கக் கூடாது என்று மிகுந்த மரியாதையோடு கேட்டுக் கொள்ளப்படுகிறீர்கள்!"

என்று ஒரு பெரிய அறிவிப்பு அந்த அறைக்குள்ளே கொட்டை கொட்டையான எழுத்திலே நின்றது! இதைப் பார்த்ததும் எனக்குத் தூக்கிவாரிப் போட்டது.

ஆங்கில நாடுகளிலே இதற்கு முன்பு பல ஊர்களில் தங்கியாகி விட்டது! இது வரை பெரும்பாலும் நண்பர்களின் வீடுகளில் தங்கியதால் குளிப்பது சம்பந்தமாக இப்படி ஒரு கஷ்டம் நேரவில்லை! எந்தக் குளிரிலும் நம்முடைய வழக்கப்படி காலையிலே எழுந்ததும் குளிப்பதற்கு வசதியாக வெந்நீர் கிடைத்து வந்தது! இப்பொழுது இப்படி ஓர் அறிவிப்பைப் பார்த்ததும் என்ன செய்வதென்று புரியாமல் ஒரு நிமிஷம் மலைத்து நின்றேன். பிறகு விடுதியின் நிர்வாகியைப் பார்த்து வரலாம் என்று நேரே நிர்வாக அறைக்குள்ளே சென்றேன்!


உலன் ஆராய்ச்சி நிலையம்

விடுதியின் நிர்வாகி ஒரு முதிய பெண்மணி. அவரிடம் நான் சில வார்த்தைகள் பேசத் தொடங்குவதற்குள்ளேயே! அவர் நம்முடைய நாட்டின் பழக்கத்தை நன்றாகப் புரிந்து கொண்டவராக மிகுந்த பரிவோடு பேசினார். "காலையில் எல்லாரும் ஆபீஸ்களுக்குச் செல்கிற நேரம். ஆகையால் குளிக்கும் அறைகளில் இடநெருக்கடி ஏற்படக் கூடாது அல்லவா? அதோடு காலை நேரந்தான் சமையலறையில் மின்சாரத்துக்கு அதிக வேலை! எல்லாரும் வெந்நீர்த் தொட்டியை நிரப்புவதற்கு விசையை உபயோகப்படுத்த ஆரம்பித்து விட்டால், பிறகு மின்சாரப் பளு அதிகரித்து மின்சார விநியோகத்தில் சிக்கல் ஏற்படும். இதையெல்லாம் உத்தேசித்தே பத்தரை மணிக்குமேல் குளிக்கலாம் என்று அறிவிப்புப் போட்டிருக்கிறோம். என்றாலும் சில இந்தியர்கள் காலையில் எழுந்து குளித்துவிட்டுப் பிரார்த்தனை செய்கிற வழக்கம் உள்ளவர்கள் என்பது எனக்குத் தெரியும். ஆகையால் உங்கள் விஷயத்தில் விதி விலக்குச் செய்கிறேன்! ஆனாலும் அதிக நேரம் குளிக்கும் அறையில் இருந்து விடாதீர்கள்!" என்று பக்குவமாகச் சொன்னார் அந்தப் பெண்மணி!

விடுதியில் ஏற்பட்ட இந்த முதலாவது அனுபவத்துக்குப் பிறகு, சுறுசுறுப்பு பலமடங்காக அதிகரித்தது! விறு விறு என்று குளிப்பை முடித்துக் கொண்டு, விறு விறு என்று "பாரிட்ஜ்" என்னும் கஞ்சியைச் சாப்பிட்டுவிட்டு, 'விறு விறு' என்று வெளியே வந்தேன்! அன்றைய நிகழ்ச்சித் திட்டத்தின்படி லீட்ஸிலுள்ள உலன் ஆராய்ச்சி நிலையத்துக்குச் சென்று விட்டு, அதன் பிறகு லீட்ஸ் நகரத்தின் வெளி எல்லையிலேயுள்ள ஒரு சரித்திரப் புகழ்பெற்ற புராதனமான மடாலயத்தைச் சென்று பார்ப்பது என்று ஏற்பாடாகியிருந்தது.

லீட்ஸ் நகரத்திலே உள்ள உலன் ஆராய்ச்சி நிலையம் சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு நிறுவப்பட்ட ஒரு பெரிய விஞ்ஞான நிலையம். கம்பளிக்குரிய உரோமத்துக்காக என்றே ஆடுகளை வளர்ப்பது, இவற்றிலிருந்து உரோமத்தை எடுத்துப் பக்குவப்படுத்துவது, நெய்வது முதலிய பல வேலைகளையும்பற்றிஇந்த ஆராய்ச்சி நிலையத்திலே புதிய புதிய சோதனைகள் செய்கிறார்கள். உலன் தொழிலில் ஈடுபட்டுள்ள முதலாளிகள் ஒன்றுசேர்ந்து ஒரு சங்கத்தை ஏற்படுத்தி, தங்கள் தொழிலின் அபிவிருத்திக்காக இத்தகைய ஆராய்ச்சி நிலையத்தை நடத்தி வருகிறார்கள்! இந்த ஆராய்ச்சி நிலையத்திலிருந்து ஓர் அருமையான பத்திரிகையும் வெளியிட்டு வருகிறார்கள். கம்பளி ரோமம் எடுப்பது, பக்குவப்படுத்துவது ஆகியவை பற்றிப் புதிது புதிதாகப் பல ஆராய்ச்சிக் குறிப்புக்களெல்லாம் இந்தப் பத்திரிகையில் பிரசுரமாகின்றன!

உலன் ஆராய்ச்சி நிலையத்துக்கு நான் சென்றபோது, ஆராய்ச்சிப் பத்திரிகையின் ஆசிரியர் மிஸ்டர் ஹோகோ லெவார் எனக்காகப் பல ரசமான இயந்திரக் காட்சிகளை ஏற்பாடு செய்து வைத்திருந்தார். சிறு சிறு ரோமமாக ஆட்டின் மேனியிலிருந்து எடுக்கப்

படுகிற இழைகள், பஞ்சப் பொதி போன்று எப்படி ஒருமிக்கப்படுகின்றன; பிறகு விஞ்ஞான முறையில் இந்தப் பொதிகள் எங்ஙனம் பக்குவம் செய்யப்படுகின்றன; பின்னர் இந்தப் பொதிகள் இயந்திரத்துக் குள்ளே சென்று நூற்பதற்குரிய முறையில் எப்படிப் பதமாகின்றன என்பதையெல்லாம் அவர் விரிவாக விளக்கினர்.

தனிருக்கு இதமாக இருப்பதற்காக மனிதன் எப்படியெல்லாம் தன்னுடைய சூழ்நிலையையும், இயற்கைப் பொருள்களையும், ஆடுகளையும் பயன்படுத்துகிறான் என்பது ஒரு விந்தை மிகுந்த வரலாறு. அந்த வரலாற்றை 'மட மட' என்றும் 'தட தட' என்றும் இயந்திர மொழியிலே அடித்து முழக்குகின்றன, அந்த ஆராய்ச்சி நிலையத்திலேயுள்ள மின் பொறிகள்! இவற்றையெல்லாம் வரிசையாகக் காட்டிக் கொண்டே வந்தார் மிஸ்டர் லெவார். இதன் பிறகு அங்குள்ள ஆராய்ச்சிக் கூடத்தில் பல நுட்பமான விஷயங்களைக் கண்டுபிடித்த விஞ்ஞான நிபுணர்களின் பெயர் வரிசைகளைக் காட்டினர். அந்த வரிசையில் சில இந்தியர்களின் பெயர்களைப் பார்த்ததும் மனம் பூரித்தேன்.

"உங்கள் நாட்டிலிருந்து சில ஆராய்ச்சி நிபுணர்கள் இங்கே வந்து அற்புதமான சாதனைகள் புரிந்திருக்கிறார்கள். முக்கியமாக ஏ. கே. தேஷ்பாண்டே என்ற பம்பாய் விஞ்ஞானி இந்த ஆராய்ச்சி நிலையத்தில் பல அரிய ஆராய்ச்சிகள் செய்திருக்கிறார். இதோ பாருங்கள், அவருடைய ஆராய்ச்சித் தொகுப்பு!" என்று ஒரு புஸ்தகத்தை எடுத்துக் காட்டினர்.

இந்தியாவில் ஆடு வளர்க்கும் விதத்தையும், நம்முடைய முன்னோர்களின் முறைகளையும் இங்கிலாந்தின் சூழ்நிலையோடு ஒப்பிட்டுத் தேஷ்பாண்டே எழுதியிருந்த ஒருநீண்டகட்டுரை அது!

ஆராய்ச்சி நிலையத்துக்கு வெளியே வந்தபோது, அந்த இடத்தின் இயற்கையழகு என்னைக் கவர்ந்தது. திருக்குற்றாலத்தில் 'செண்பகாடவி' என்றும், 'ஐந்தருவிப் பாதை' என்றும் சொல்லுகிறோமே, அப்படிப்பட்ட ஒரு சூழலில் நிற்பது போன்ற உணர்ச்சியே எனக்கு ஏற்பட்டது. வளமான இயற்கையழகின் மத்தியிலே கல்வி நிலையங்களையும், ஆராய்ச்சிக் கூடங்களையும் அமைப்பதால், அங்கே செல்பவர்களுக்கும் அங்கே இருந்து பணி செய்பவர்களுக்கும் உள்ளத்தில் எத்தகைய உற்சாகம் உண்டாகிறது என்பதை அங்கே கண்டேன்!

இந்த அழகான காட்சியைப் பார்த்து விடுதிக்கு வந்ததும், அடுத்த முக்கிய இடமாகிய "கர்க்ஸ்டால் ஆபி" என்ற வனாந்தரத்துக்கு எப்படிப் போவது என்று வழி விசாரித்தேன். அப்போது அந்த இடத்தின் சரித்திரத்தைப் பற்றிய சுவையான கதைகளைத் தெரிந்துகொண்டேன். அந்த வனாந்தரத்தில் ஒரு காலத்தில் மிகப் பெரிய மடாலயம் ஒன்று இருந்தது என்றும், அங்கே பல துறவிகள் வாழ்ந்தார்கள் என்றும், அவர்களுடைய வாழ்க்கை முறை இந்த நகர நாகரிகப் பிணைப்பிலிருந்து விடுபட்டு ஏகாந்தமான காட்டுக்குள்ளே பெரியதொரு மடத்திலே பல பூஜை முறைகளோடும், தம் நியமங்களோடும் புனிதமாக நடைபெற்று வந்தது என்றும் கேள்விப்பட்டதும், அந்த மடாலயத்தைச் சென்று பார்க்க வேண்டும் என்ற ஆசை அதிகரித்தது!

"கிறிஸ்துவ மதத்தின் வளர்ச்சியிலே ஒரு முக்கியமான கட்டம் இந்த மடாலயங்களின் நிறுவனம்! இன்று இந்த மடாலயம் பாழடைந்து கிடக்கிறது. மதிற்சுவர்களும், துறவிகள் வாழ்ந்த பெரிய பெரிய தவச் சாலைகளும், அவர்களுடைய தியானக் கூடங்களும் அரசியல் மாறுதல்களாலும் வேறு பல குழப்பங்களாலும் சிதைந்து போய் விட்டன. என்றாலும் அந்தப் பிராந்தியத்திலேயுள்ள பாழ் வெளிகளை ஆராய்ந்து, புதைபொருள்களைத் தோண்டியெடுத்துப் பல சரித்திர ஆராய்ச்சிகள் நடத்தி வருகிறார்கள்!" என்று ஓர் ஆங்கிலேய நண்பர் கூறினர்.

எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்பு அந்த வனாந்தரத்திலே சில கிறிஸ்துவத் துறவிகள் மடாலயம் அமைத்து வாழ்ந்து வந்ததும், ஆன்மீகத் துறையிலே பல வழிபாட்டு முறைகளைப் பயின்று வந்ததும் பற்றிக் கதை கதையாகச் சொல்லுகிறார்கள் ஆங்கில மக்கள்! அதோடு இன்று சிதைந்து போய்க் காணப்படுகிற இந்த ஆலயத்தின் சிற்ப முறைகளும், இதற்கு அருகிலேயுள்ள ஒரு சரித்திரக் காட்சி நிலையமும், புராதனமான பொருள்களும் வெளி நாட்டார் பலரையும் கவர்ந்து வந்துள்ள விந்தைக் காட்சிகளாக இருப்பதால் இந்தப் புனிதமான இடத்தைச் சென்று பார்ப்பதற்காகப் புறப்பட்டேன். (தொடரும்)



இயந்திர இயக்கம்

# புனர் ஜென்மம்

[illegible]லை தடவைகள் வெள்ளித்திரையில் வந்த படம்தான் புனர்ஜென்மம் எடுத்திருக்கிறது.

**சங்கர்:** சிலை செய்யும் கலைஞன். குடிப் பழக்கத்துக்கு அடிமையானவன்.

**பார்வதி:** சங்கருக்கு உள்ளத்தில் இடங் கொடுத்தும் பல விதத்திலும் சங்கடப் பட்டவள். அவனிடம் அடியும் பட்டவள்.



**ஜகந்நாதம்:** பார்வதியின் அண்ணன். மனைவிக்கு அடங்கி நடக்க மட்டும் தெரிந்தவர்.

**காமாட்சி:** ஜகந்நாதத்தின் மனைவி. கணவனை மீறிய வீராங்கனை.

**புஷ்பா:** சேற்றில் மலர்ந்த செந்தாமரை. காமாட்சியின் பெண். பார்வதியின் காதலுக்கு உறுதுணையாயிருந்து அவனுடைய உயிரைக் காப்பாற்றியதுடன் திரைக்கதையையும் காப்பாற்றுகிறவள்.

பார்வதியாக வரும் பத்மினிக்கு இந்தப் படத்தில் நிறையச் சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. சங்கரைத் திருத்த முயலும்போதும் (சற்று மிகையாக இருந்தாலும்) சங்கரின் தாயாரிடம் தன் வெற்றியைக் கூறும்போதும் நடிப்பு நன்றாயிருக்கிறது.

பார்வதியை அடித்ததற்காகச் சங்கர் தாயாரிடம் அடிபட்டதும் அவன் மனம் திருந்தி விடுகிறது. அத்தனை அடிகளையும் வாங்கிய பிறகுதான் நடிகர் திலகத்தின் நடிப்புத் திறமையும் அற்புதமாக வெளிப்படுகிறது. ஆனால் அவருக்கு இது புதிதல்ல.

புஷ்பாவாக வரும் ராகினி, கொடுத்த பாகத்தைக் குறைவில்லாமல் செய்திருக்கிறார்.

'ட்யூஷன்' உபாத்தியாயராக வந்து டி. ஆர். ராமச்சந்திரன் ஹாஸ்ய ரஸத்தை நிறைய வழங்குகிறார்.

கண்ணாம்பாவுக்கு, திரையில் வழி வழி வந்த தாயார் பாகம். சங்கர் சாப்பிட்டுக்கொண்டே அம்மாவைக் கூப்பிடுகிறான். தாயார் கண்ணை மூடி உட்கார்ந்திருக்கிறாள். அவன் எழுந்து போகிறான். பார்வதி வந்து, "அம்மா! சாப்பிடும்போது மகனிடம் கோபத்தைக் காட்டலாமா?" என்கிறாள். தாயார் தள்ளாடியபடி, கண்ணீருடன் சென்று வெறும் பானையை அவளிடம் காட்டி, "சோறு இல்லை என்று எப்படியடி பெற்ற மகனிடம் சொல்லுவேன்!" என்று கதறுகிறாள். இந்த இடம் நன்றாயிருக்கிறது.

தங்கவேலுவுக்கு ஜகந்நாதத்தின் பாகம் மிக மிகப் பொருத்தமானது. சிரிப்பு வெடிகளாக வெடித்துத் தீர்க்கிறார். கலபமாக மனைவிக்கு அடங்கி விடுகிறார். ஆனால் நமக்கு அடங்கவில்லை - சிரிப்பைத்தான் சொல்கிறேன்.

திரைக் கதையைத் தயாரித்து அதற்குப் பொருத்தமாக வசனத்தையும் எழுதியிருக்கிறார் ஸ்ரீதர். மூலக்கதை காலஞ்சென்ற அமியா சக்கரவர்த்தி எழுதியது. "புனர் ஜென்மம்" கதையில் புதுமை எதுவும் இல்லை; புரட்சி பூக்கவில்லை. பாத்திரங்களில்முன்பே பார்க்காதவர்களில்லை. கதையின் முடிவில் மட்டும் இது வரை நாம் காணாதது ஒன்று உண்டு. முடிவில் கதாநாயகனும் கதாநாயகியும் ஒரு குடிகாரன் மீது கற்களை எடுத்து வீசுகிறார்கள். அந்தச் சமயத்தில் ரசிகர்கள் கையில் தான் ஒன்றும் கிடைக்கவில்லை. நல்ல காலம்! யாருக்கு?

# கூங்கட்

## காந்தன்

சூங்கட்.

குங்கட்டா, கூங்கட்டா?

இப்பொழுது ''குங்கட்''டாக வெளி வந்திருப்பது ''மாதர் குல மாணிக்கம்'' என்ற பழைய தமிழ்ப் படம்தான். இவ்விரு படங்களுக்கும் ஆதாரம் ரவீந்திரரின் ''புயல்'' என்ற நாவல்.

ரவியும், லக்ஷ்மியும் காதலர்கள். தகப்பனாரின் வாக்கைக் காப்பாற்ற, லக்ஷ்மிக்குப் பதிலாக ரவி வேறொரு பெண்ணை மணக்கும்படி நேருகிறது. அதே சமயத்தில், டாக்டர் கோபாலுக்கும் பார்வதிக்கும் வேறொரு இடத்தில் கல்யாணம் நடக்கிறது. ரவியும் அவன் மனைவியும் பிரயாணம் செய்த ரயிலில்தான், டாக்டர் கோபாலும் பார்வதியும் பிரயாணம் செய்கின்றனர். ரயில் விபத்துக்குள்ளாகிறது. ரவியின் மனைவி இறந்து விடுகிறாள். ஆனால் அதை உணராத ரவி மணக்கோலத்தில் பிரக்ஞையற்றுக் கிடந்த பார்வதியைத் தன் மனைவியெனக் கருதி வீட்டுக்குக் கொண்டு வந்தபிறகு உண்மையை அறிந்து துடிக்கிறான்; கோபால் தன் மனைவி ரயில் விபத்தில் இறந்து விட்டதாகக் கருதி வருந்துகிறான். பார்வதியின் அண்ணன் மனோகருக்கு ரயில் விபத்தின் காரணமாகக் கண் பார்வை போய் விடுகிறது. ரவி தன் கணவனல்ல என்று தெரிந்ததும் பார்வதி யமுனையில் விழுகிறாள். டாக்டர் கோபாலே அவளைக் காப்பாற்றுகிறான். மனோகரின் பார்வை திரும்புகிறது. படத்தின் முடிச்சும் அவிழ்கிறது.

மணப் பெண்ணின் முகத்தையே மணமகன் பார்க்காமல் இருந்திருப்பானா: வேறொரு புது மணப் பெண்ணை எப்படித் தன் மனைவியென்று ஒருவன் நினைத்துவிட முடியும் என்று எல்லோரும் நினைத்துக் குழம்புவார்கள். கூங்கட்—அதாவது முகத்திரை—என்ற கதையின் தலைப்பு இந்தக் குழப்பத்தைத் தீர்த்து வைக்கிறது. வடக்கே நடக்கும் திருமணங்களில் முகத்திரை மிகவும் முக்கியமானது. முகத்திரை யில்லாவிட்டால் இந்தக் கதையும் இல்லை; குழப்பமும் இல்லை.

ரவியின் பாகத்தைப் பிரதீப் குமார் ஏற்றிருக்கிறார். கல்லூரிக் காதலி லக்ஷ்மியுடன் உல்லாசமாக ஆடிப் பாடிய போதிருந்த நடிப்பு மற்றச் சந்தர்ப்பங்களில் இல்லை.

பார்வதியாக வரும் பீனாராய் மிகவும் நன்றாக நடித்திருக்கிறார். ரவியைத் தன் கணவனென்றே நம்பி, அவனது அலட்சியத்தைத் தாங்க முடியாமல் தவித்த போதும், தன் கணவன் கோபாலிடம் போய்ச் சேர்ந்ததும் உண்மையை அவனுக்கு எடுத்துக் கூற முடியாமல் துடித்த போதும் பீனாராயின் நடிப்பு உயர்வாயிருந்தது.

பாரத்பூஷன், டாக்டர் கோபாலாக வருகிறார். விசேஷமாகக் கூற அவர் நடிப்பில் எதுவும் இல்லை.

கல்லூரி மாணவி லக்ஷ்மியின் பாகம் ஆஷா பாரேக்குக்குப் பொருத்தமானதுதான். ஆனால் பிரதீப்குமாருடன் ஜோடிப் பொருத்தம் சரியாயில்லை.

ஆகாவும், மீனு மும்தாஜும் படத்தின் ஹாஸ்யப் பகுதியை நன்கு சோபிக்கச் செய்கின்றனர்.

அடிக்கு அடி, காட்சிக்குக் காட்சி ''கூங்கட்'' ''மாதர் குல மாணிக்க''த்தைப் போலவே இருந்தாலும் ஜெமினியின் தயாரிப்பென்று சொல்லிப் பாராட்டி மகிழக் கலை நுணுக்கங்களும் இருக்கின்றன. பாடல்கள் காதுக்கு இனிமையாக ஒலிக்கின்றன.

தமிழில் ஒருமுறை வெளிவந்து வெற்றிக் கொடி நாட்டிய படம் தமிழகத் தயாரிப்பில் ஹிந்தியிலும் வெளி வந்து சக்கைப்போடு போடுகிறதென்றும் மகிழ வேண்டியதுதானே!



# காளையார் கோயில் காளீசர்

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்

ஒரு குடும்பத்தில் மூன்று சகோதரர்கள். நல்ல பரம்பரைச் செல்வந்தர்கள். மூவரிலும் மூத்தவர் நல்ல உழைப்பாளி. விவசாய விருத்தியிலும், வியாபாரப் பெருக்கத்திலுமே கண். அதனால் குடும்பத்துக்குச் சொத்து சேர்ப்பதெல்லாம் அவர்தான். நடு உள்ளவரோ கொஞ்சம் குஷிப் பேர்வழி. நல்ல செலவாளி, மைனர்போலத் திரிவார்; செலவு செய்யத் தயங்க மாட்டார். கோலாகலமாகச் செலவு செய்து கொண்டு உல்லாசமாகக் காலங் கழிப்பார். கடைக்குட்டி மிக்க அடக்கம். பொருள் சேர்க்கவோ, செலவழிக்கவோ அவர் முற்படுவதில்லை. எப்போதும் படிப்பதும் பஜனைக்குச் செல்வதுமாகவே காலங் கழிக்கிறார். இப்படி ஒரு குடும்பம். இத்தகைய சகோதரர்களை நாம் வாழ்நாளில் பல இடங்களில் கண்டிருக்கிறோம் அல்லவா?

இதே விதமாக நாம் வணங்கும் கடவுளரும் வாழ்கிறார்கள் என்று அறிகிறபோதுதான் நமது ஆர்வம் அதிகமாகிறது. அதிலும் முழுமுதற் கடவுளாகிய சிவபெருமானது வாழ்க்கையிலேயே இப்படி நடக்கிறது. முத்தொழில் புரியும் முதல்வனே நாம் கண்ட மூன்று சகோதரர்கள்போல் மூன்று நிலையிலும் நின்று அருள் புரிகிறான் என்றால் கேட்கவா வேணும்! ஒரு சிறு ஊர். அங்கு ஒரு பெரிய கோயில். கோயிலிலே மூன்று சந்நிதி. கோயிலில் முதல்வராக இருப்பவர் காளீசர், அவருக்கு வலப்புறம் சோமேசர், இடப்புறம் சுந்தரேசர். இந்த மூவரையும் பற்றி ஊர் மக்கள் சொல்வது என்னவென்றால், 'காளீசர் தேட, சோமேசர் அழிக்க, சுந்தரேசர் கவிக்க' என்றல்லவா அமைந்திருக்கிறது என்பதுதான். இதற்கு விளக்கம் இதுதான். இந்தக் கோயில் சொத்து முழுதும் ஆம், நாற்பது கிராமங்களில் உள்ள நிலமும் இரண்டு லக்ஷம் பெறுமான நகைகள் மஞ்சங்கள் எல்லாமும் தேடிச் சேர்த்து வைத்திருப்பவர் காளீசர்தான். நிலங்களின் பட்டா எல்லாம் அவர் பேரிலே தான்; சொத்துச் சுதந்திரம் எல்லாமே அவருக்குத்தான். ஆனால் அவருக்கு என்று பெரிய பிரம்மோத்சவமோ அல்லது மற்றச் செலவுகளோ அதிகம் கிடையாது. அவருக்கு நடக்கும் உத்சவம் எல்லாம் தைப்பூசத்தில் புஷ்ய ஸ்நானம்தான். ஆனால் சோமேசருக்குத்தான் ஆடம்பரமான உத்சவம்; வைகாசி விசாகத்திலே. அந்தப் பிரம்மோத்சவத்தில் தான் தேரோட்டம், தெப்பம், புஷ்பப் பல்லக்கு எல்லாம். மொத்தச் செலவு பதினாயிரம் வரை ஆகும். ஆடம்பரமான செலவுகளுக்குக் குறைவே யில்லை. இருவரையும் அடுத்து ஒரு சின்னஞ்சிறு கோயிலிலே குடியேறி யிருக்கும் சுந்தரேசரோ மிக்க அமைதியாக வாழ்கிறார். நித்தியப் படியிலும் இவர் தேவை மிகமிகக் குறைவுதான். உத்சவாதிகளிலும் இவர் கலந்து கொள்கிறதில்லை. ஆம்! இப்போது விளங்குகிறது - காளை தேட, சோமன் அழிக்க, சுந்தரன் கவிக்க என்று மக்கள் ஏன் சொல்லுகிறார்கள் என்று. இப்படி, காளீசுவரரும், சோமேசரும், சுந்தரரும் கோயில் கொண்டிருக்கும் ஊர்தான் இன்று காளையார் கோயில் என்று வழங்கப் படுகிறது. இக்காளையார் கோயிலுக்கே செல்கிறோம் நாம் இன்று.

இந்தச் சின்னஞ்சிறிய ஊர் மதுரைக்கு நேர் கிழக்கே நாற்பது மைல் தூரத்தில், தொண்டிக்குச் செல்லும் ரஸ்தாவில் இருக்கிறது. ரயில் வழியாகச் செல்ல விரும்புபவர்கள் சிவகங்கை ஸ்டேஷனில் இறங்கிக் கிழக்கே பத்து மைல் தூரம் செல்ல வேணும். காரைக்குடி, தேவகோட்டை, சருகணி வழியாகவும் வரலாம். ஊர் சிறிய ஊர்தான் என்றாலும் கோயிலும் குளமும், கோபுரமும் வீதிகளும் பெரியவைகளாகவே இருக்கின்றன. இந்தத் தலத்தை அப்பர், சம்பந்தர், சுந்தரர் மூவரும் பாடியிருக்கிறார்கள். தேவார காலத்தில் இந்தத் தலத்தின் பெயர் கானப்பேர் என்று இருந்திருக்கிறது.

கங்காளர், கயிலாய மலையாளர்,
கானப் பேராளர், மங்கை
பங்காளர், திரிசூலப் படையாளர்
விடையாளர் பயிலுங் கோயில்

என்று ஞான சம்பந்தர் கோயிலைப் பாடினால், கோயிலில் உள்ள மூர்த்தியை,

ஆனைக்காவில் அணங்கினை
ஆரூர் நிலாய அம்மானைக்
கானப் பேரூர் கட்டியைக்
கானூர் முளைத்த கரும்பினை

என்று நாவுக்கரசர் பாடி மகிழ்கிறார். இந்தக் கானப் பேரூர் கட்டியாம் கடவுளை சுந்தரர் தேவாரத்தில் கானப்பேரூர் உறை காளையாகிறார். அதனால் அந்த ஊர் காளையார் கோயில் என்று வழங்கப் படுவதற்கும் காரணம் ஆகிறார். நாவலூரர், நம்பியாரூர் முதலிய தலம் தலமாகச் சென்று இறைவனைப் பாடித் துதித்து வரும் நாளில், தன் அருமை நண்பர் சேரமான் பெருமான் நாயனாரோடு திருச்சுழியல் என்னும் தலத்துக்கு வந்து சேருகிறார். அங்கு அன்றிரவு துயிலும்போது கானப்பேர் உறை அண்ணல் அவர் கனவிலே தோன்றுகிறார், காளை உருவிலே. செங்கையில் பொற் செண்டும், திருமுடியில் சுழியமுடன், எங்குமிலாத் திருவேடம் என்புருக முன்காட்டி, 'யாம் இருப்பது கானப் பேர்' என்றும் ஞாபகப்படுத்திவிட்டு மறைகிறார். அதனால் சுந்தரர் இந்தக் கானப்பேர் ஊருக்கே வருகிறார். வரும் வழி எல்லாம்,

காதலுறத் தொழுவது என்று கொலோ ?
அடியேன்
கார் வயல்சூழ் கானப் பேர் உறை
காளையையே !

என்று ஏங்கி ஏங்கித் தவிக்கிறார். அன்று முதல் கானப்பேர் என்று வழங்கப்பட்ட தலம் காளையார் கோயில் என்று பெயர் பெறுகிறது.

கைலாயத்தில் ஒரு நாள் பார்வதியும் பரமசிவனும் தனித்திருந்தார்கள். அப்போது ஒரு சந்தேகம் எழுகிறது. பார்வதியின் உள்ளத்தில்: 'எல்லாமே வல்லவராகிய உமக்கு சகள ரூபம் எதற்கு?' என்று கேட்டு வைக்கிறாள் அன்னை பார்வதி. அத்தனும் சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அனுக்கிரகம் என்னும் ஐந்தொழிற்காகவே இவ்வுருக் கொண்டிருக்கிறோம் என்று சொல்லி விட்டு அத்துடன் நிறுத்தாது, எனது கண் திறக்கும்போது உலகம் தோன்றும், விழித்திருக்கும்போது வாழும், மூடுங்காலத்து அழியும் என்று அருள் திறத்தை மேலும் விளக்குகிறார். இதைக்கேட்ட அம்மை — பெண்மைக்கே உரிய சந்தேகத்தோடு, இதைப் பரீட்சித்துப் பார்த்துவிடத் துணிகிறாள். இறைவன் பின்புறமாக வந்து அவரது கண்கள் இரண்டையும் ஏதோ விளையாட்டாகத் தன் கைகளால் பொத்துகிறாள். அவ்வளவுதான்; மூவுலகுமே இருளில் புதைந்து விடுகின்றது. உயிர்கள் எல்லாம் வாடி வதங்கி விடுகின்றன. அண்ணலும் அம்மையைக் கடிந்து, அவள் தன் கைகளை விலக்குகிறார். இப்படி ஒரு உத்பாதத்தை ஏற்படுத்தியதற்காகப் பார்வதியைக் கரிய உருவமுடைய காளியாகக் கடவாய் என்று சபித்து விடுகிறார். அம்மை அறியாது செய்த பிழையை மன்னிக்க வேண்டும் என இறைவன் காலடியில் விழுந்து கதற, 'சரி சண்டாசுரனை வென்ற பின், காளியுருவம் நீங்கித் திரும்பவும் என்னை வந்து சேர்வாய்' என அனுக்கிரகிக்கிறார். அம்மையும் அரனது ஆணைப்படியே காளியாகிறாள். கானப்பேருரை அடுத்த மருத வனத்தில் துர்க்கை வடிவிலே கோயில் கொள்கிறாள். இந்தச் சமயத்தில் பெரு வரங்கள் பல பெற்ற சண்டாசுரன் தேவர்களை வருத்த, தேவர்கள் அம்மையிடம் முறையிட, அம்மையும் சண்டாசுரனோடு போர் புரிந்து அவனை முடிக்கிறாள். தேவர்களும் பூமழை பொழிந்து தேவியை வாழ்த்துகிறார்கள். தேவியின் சாபமும் நீங்குகிறது. சாபவிமோசனம் பெற்ற இந்தக் காளியம்மையே, அழகெலாம் திரண்ட சுவர்ணவல்லியாகி, கானப் பேருரில் கோயில் கொண்டிருந்த காளீசரை மணந்து, அவரது இடப்பாகத்தில் வீற்றிருக்கிறாள். காளையார் கோயிலைச் சுற்றியுள்ள சின்னஞ்சிறிய ஊர்கள் எல்லாம் இந்தப் புராண வரலாற்றை இன்றைக்கும் பறைசாற்றிக் கொண்டிருக்கின்றன. தேவர்கள் தேவியைக் கண்டு குறையிரந்து நின்ற இடமே கண்டதேவி; தேவி தங்கியிருக்க தேவர்கள் நிருமாணித்துக் கொடுத்த கோட்டையே தேவிகோட்டை; அம்மை சண்டாசுரனை வெற்றிகண்ட இடமே வெற்றியூர்; சண்டாசுரனது தேரில் உள்ள கொடி இற்று விழ்ந்த இடமே மாளக் கண்டான்; வெற்றி பெற்ற தேவியைப் பூமழை பொழிந்து தேவர்கள் வாழ்த்திய இடமே பூங்குடி என்று இன்றும் வழங்கப் பெறுகின்றன. இப்படிக் காளியுருவில் இருந்த பார்வதியாம் பரமேட்டியை மணந்த ஈசுவரனே காளீசுவரனாகிறார். அந்தச் சுவர்ணவல்லியையும் தன் இடப்பாகத்தில் ஏற்றருளிய பின் சுவர்ண காளீசுவரனாகவே மாறுகிறார். இன்றும் காளையார் கோயில் மூலமூர்த்தி



ஆனைமடு

சுவர்ண காளீசுவரன் என்றுதானே அழைக்கப் படுகிறான்.

காளீசுவரன் கானப்பேர் நகரில் கோயில் கொண்டிருக்கும்போது இந்தப் பாண்டிய நாட்டை ஆண்டவன் **வீரசேனன்**. இவனுக்குப் பழவினை வசத்தால் குழந்தை இல்லை. அதனால் இவனும் இவன் மனைவி சோபனாங்கியும் சுவர்ணத்தால் ஒரு பிள்ளையைச் செய்து வைத்து, அதைப் பார்த்துப் பார்த்துத் திருப்தி அடைகிறார்கள். சுவர்ண காளீசுவரனை வணங்க வந்த இந்தத் தம்பதிகள், கோயிலை அடுத்த உருத்திர தீர்த்தத்தில் மூழ்கி முழுகி எழுகிறார்கள், சுவர்ணப் பதுமையோடு. இறை அருளால் அந்தச் சுவர்ண புத்திரன் உயிர் பெறுகிறான். உடனே இறை அருளை நினைந்து, அங்கு கோயில் கொண்டிருந்த காளீசர் சுவர்ணவல்லி, சோமேசர் சௌந்திரவல்லி யாவருக்கும் கோயில்கள் எடுப்பித்து, நித்திய நைமித்திக காரியங்களுக்கும் உற்சவாதிகளுக்கும் ஏராளமான நிபந்தங்களை ஏற்படுத்துகிறான். இந்த இரண்டு பெருமான்களை வணங்கி வாழ்த்துவதோடு திருப்தி அடையவில்லை. தன்னுடைய வழிபடு தெய்வமாகிய சோமசுந்தரரையும் மீனாக்ஷியையும் தரிசித்து வணங்காமல் தினமும் அவன் உணவு உண்பதில்லை. காளீசர் கோயில் கட்டும் திருப்பணியில் ஈடுபட்டிருக்கும் போதும் தினமும் மதுரை வந்து சோமசுந்தரரைத் தரிசித்து விட்டுக் கானப்பேருக்குத் திரும்பி வருகிறான். ஒருநாள் அடை மழை பெய்தது. கானப்பேரூரிலிருந்து மதுரை வந்து திரும்ப முடியவில்லை. அதனால் உணவே அருந்தாமல் அமர்ந்திருக்கிறான். அந்தச் சமயத்தில் சோமசுந்தரனே அந்தப் பாண்டிய மன்னன் வீரசேனன் கனவில் தோன்றி, 'இனி நீ இங்கு வர வேண்டியதில்லை. நாமே அங்கு வந்து, காளீசுவரனுக்கும் சுவர்ணவல்லிக்கும் இடையிலே வீற்றிருப்போம்' என்று சொல்லி மறைகிறான். விடிந்து எழுந்து பார்த்தால் குறிப்பிட்ட இடத்தில் ரிஷபத்தின் அடிச்சுவடுகள் தோன்றுகின்றன. அந்த இடத்திலே அவசரம் அவசரமாக மீனாக்ஷி சுந்தரேசருக்குக் கோயில் எழுகிறது. அங்கயற்கண்ணி தன்னொடும் அமர்ந்த ஆலவாய் அரன் இங்கு சுந்தரனாக எழுந்தருளுகிறார்.

காளீசர், சோமேசர், சுந்தரேசர் மூவரும் கோயில்கொண்டிருக்கும் இந்தக் கோயிலுக்கு மேல்புறத்திலே ஒரு பெரிய தெப்பக்குளம். இக்குளம் மதுரை மாரியம்மன் தெப்பக் குளம் போல் அவ்வளவு பெரியது அன்று



பெரிய மருது கட்டிய கோயில்

என்றாலும் அமைப்பு எல்லாம் அதே போலத்தான். குளத்தின் நடுவில் இருக்கும் நீராழி மண்டபமே ஒரு பெரிய கோபுரமுடைய சிறிய கோயிலாகவும், அதைச் சுற்றி நான்கு மூலைகளிலும் கோபுரங்களோடு அமைந்த மண்டபங்களாகவும் இருக்கின்றது. இந்தக் குளத்தைத்தான் ஆனைமடு என்கிறார்கள். ஆம்! ஆனை இறங்கினாலும் அதை மூழ்கடிக்கும் ஆழமுடையது என்று தெரிகிறது. என்றாலும் இந்தக் குளம் எப்படி ஏற்பட்டது, அதற்கு ஆனைமடு என்று ஏன் பேர் வந்தது என்பதற்கு ஒரு ரஸமான கதை. தேவேந்திரனது ஐராவதம் என்னும் வெள்ளை யானை கைலாசம் போய்த் திரும்பி வருகிறது. விளையாட்டாக, அங்கிருந்த ரிஷபத்தின் வாலைப் பிடித்து இழுத்திருக்கிறது. ரிஷபமான நந்திக்கோ ஒரே கோபம். உடனே 'நீ காட்டானையாகப் பூமியில் பிறந்து ஆயிரம் வருஷங்கள் வருந்தக் கடவாய்' என்று சாபமிட்டு விடுகிறது. நந்தியிட்ட சாபத்துக்கு விமோசனத்தை நாயகனே நல்குகிறார். அதனால் காட்டானையாகப் பிறந்து வளர்ந்த ஐராவதம், இத்தலத்துக்கு வந்து தன் கொம்புகளாலேயே குத்திக் குத்தி இந்தத் தடாகத்தை உண்டாக்கி, இந்தத் தடாகத்திலுள்ள தண்ணீரையே தன் துதிக்கையால் முகந்து கொண்டு வந்து காளீசர், சோமேசருக்கு எல்லாம் அபிஷேகம் செய்யச் சாப விமோசனம் ஆயிற்றாம். அன்று முதல் இந்தத் தடாகம் ஆனை மடு என்றே வழங்கப்படுகிறது.

இந்தக் காளையார் கோயில் என்னும் கானப்பேர் மிகவும் பழைமையான ஊர் என்று தெரிகிறது. இந்த ஊரைச் சுற்றி ஒரு கோட்டை இருந்திருக்கிறது. அந்தப் பழைய சங்க காலத்திலேயே. அப்போது பாண்டிய நாட்டை ஆண்ட மன்னன்தான் உக்கிரப் பெருவழுதி. இவனே திருக்குறள் அரங்கேறும் போது அரியாசனத்திலிருந்த பெருமகன். இவன் அப்போது இந்தக் கானப் பேரில் இருந்த வேங்கை மார்பன் என்னும் சிற்றரசனை வென்று அவன் கோட்டையைக் கைப்பற்றியதால், கானப் பேரெயில் எறிந்த உக்கிரப் பெருவழுதி என்ற விருதைப் பெற்றிருக்கிறான். சோழ மன்னர்களும் பாண்டிய மன்னர்களும் இக்கோயிலைக் கட்டவும் பராமரிக்கவும் வேண்டியவைகளைச் செய்திருக்கிறார்கள். கி. பி. பதினான்காம் நூற்றாண்டில் முகம்மதியர் தென்னாட்டின்மீது படையெடுத்த போது, ஸ்ரீரங்கத்து ரங்கநாதரையும் தீர்த்துக் கட்டி விடுவாரோ என்று அஞ்சி, அங்குள்ள கர்ப்பக்கிருகத்தைச் சுவர் எழுப்பி மறைத்து விட்டு, பிள்ளை லோகாச்சாரியார் என்பவர், ரங்கநாதரையும், ரங்கநாயகியையும் இந்தக் கானப் பேருக்கே கொண்டு வந்து ஒரு சிறு கோயிலை அமைத்து அங்கு வைத்துக் காப்பாற்றி யிருக்கிறார். இது பழைய கதை.

இந்தக் கோயில் திருப்பணியிலே சமீபகாலத்திலே முழுதும் ஈடுபட்டவர்கள் சிவகங்கையிலிருந்து அரசாண்ட பெரிய மருது, சின்ன மருது என்ற பாளையப்பட்டுக்காரர்களே. மூன்று சந்நிதிகளிலும் மண்டபங்களெல்லாம் கட்டி, சோமநாதரது கோபுரத்தையும் பெரிதாகக் கட்டிய பெருமை பெரிய மருதுவையே சாரும். இந்தக் கோபுரத் திருப்பணிக்குச் செங்கல் இந்தக்கோயிலிலிருந்து தென்மேற்கே பன்னிரண்டு மைல் தொலைவில் உள்ள மானாமதுரையிலிருந்தே வந்ததாம். ஆங்கிலேயர் இங்கு வந்து கால் ஊன்றி நிற்க நினைத்தபோது அவர்களை எதிர்த்துப் போரிட்டவர்களில் முதன்மையானவர் இந்த மருதுசகோதரர்கள். போரில் பிறந்த வஞ்சனையால் மருது சகோதரர்கள் தோற்கிறார்கள். தோற்றவர்களில் பெரியமருது ஆங்கிலேயர்கையில் அகப்படாது தலை மறைவாய் இருக்கிறார். அவர் இருக்கும் இடத்தையே ஆங்கிலேயர்களால் கண்டு பிடிக்க முடியவில்லை. ஆங்கில தளகர்த்தனான கர்னல் ஆக்னியூவுக்கு, செய்வது என்னவென்று தெரியவில்லை. அப்போது அறிகிறான், இவர் இந்தக் கோபுரம் கட்டிய அருமையை. உடனே தோன்றுகிறது ஒரு யுக்தி. 'சரி, இன்றைக்குப் பத்தாவது நாள் இந்தப் பெரிய மருது வந்து அடிபணியாவிட்டால் இவர் கட்டிய இந்தக் கோபுரம் தரை மட்டமாக்கப்படும்' என்று ஊர் ஊராகத் தெருத் தெருவாகத் தண்டோரா போடச் சொல்கிறான்.

பெரிய மருதுவின் காதில் விழுகிறது தண்டோராச் சத்தம். தாம் கட்டிய கோபுரம் தரைமட்டம் ஆக்கப்படுவதைவிடத் தம் தலையையே கொடுப்பது சரி என்று எண்ணுகிறார். குறித்த நாளிலே வந்து தளகர்த்தனிடம் சரண் அடைகிறார். தளகர்த்தனும் இவரது கலை உணர்வை, பக்தியை எல்லாம் மதிக்கிறான். என்றாலும் மேலதிகாரிகளின் உத்தரவுப்படியே இவரைத் தூக்கிலிட ஏற்பாடு செய்கிறான். அந்தச் சமயத்தில் அவர் வேண்டிக் கொண்டபடியே காளீசர் சந்நிதிக்கு நேரேயுள்ள பொட்டலில் அவருக்குச் சமாதி எழுப்பவும் ஒத்துக் கொள்கிறான். இப்படி என்றும் சமாதியிலிருந்து சோமேசரையும் காளீசுவரரையும் வணங்கிக் கொண்டிருப்பவரது சிலா உருவமே பெரிய மருதுவின் திருவுரு. காளீசர் சந்நிதி வாயிலில் இன்றும் நின்று கொண்டிருக்கிறது. சமீப காலத்தில் கோயிலின் திருப்பணிகள் முடிந்து, கோபுரங்கள் புதுப்பிக்கப்பட்டுக் குடமுழுக்கு விழாவும் சிறப்பாக நடந்தது.

# அன்பே ஆரமுதே

### அத்தியாயம் ஆறு

"நாகம்! மனுஷர்கள் எல்லாருக்குமே ஆவல் என்ற சைத்தான் ஒண்டுக்குடி. பெண்களுடைய சின்ன இதயத்தில் அது பெரிய இடமாகப் பிடித்துக் கொண்டிருக்கிறது. ஒண்டுக்குடிகள் வாழ்கிற வீட்டில் எந்த ரகசியத்தைக் காப்பாற்ற முடியும்? நீ உங்கள் வைத்தியரைப் பற்றிப் பேச்செடுத்த பொழுது, நான் பராபரியாகக் கேட்ட செய்திகளும் நினைவுக்கு வந்தன. ஓடிப்போனவர் பிக்ஷு மாதிரி அலைகிறார் என்று யாரோ உறவினர்கள் சொன்ன நினைவு. அவராக இருக்குமோ என்ற ஒரு சந்தேகத்தில் அவரை அழைத்து வர முடியுமா என்றேன். அவ்வளவு தான்; சைத்தானின் ஆவல் அது" என்றான் ருக்கு.

"நானும் கிறிஸ்தவப் பள்ளிக்கூடத்தில் தான் அந்த நாளில் தஞ்சாவூரில் வாசித்தேன், ருக்கு! சைத்தான் ஆவலோடு விட்டு விட மாட்டான் என்றுதான் நான் படித்திருக்கேன்."

"என்ன செய்வான்!"

"அது நாளைக்கு ல்லவா தெரியும்!" ருக்கு இலேசாகச் சிரித்தான்.

"ருக்கு! சைத்தானை எதற்காக இழுத்தாய் இப்போது? இவ்வளவு நல்ல வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தவர் நம்முடைய தலையில் எழுதுகிற பிரம்மாவாகத்தான் இருந்துட்டுப் போகட்டுமே......சரி, சைத்தான் இல்லாவிட்டால் மனுஷனும் மனுஷியும் ஆடை கூட இல்லாத காட்டு மனிதர்களாகத் தானே இன்னும் திரிந்து கொண்டிருப்பார்கள்? ரயில், இந்த ரேயான் புடவை, நீ டில்லியிலிருந்து வந்த விமானம் எல்லாம் ஏது? இந்தச் சைத்தான் இல்லாவிட்டால் கடவுளின் மகிமைகளையே அறியாத மண்ணுருண்டை



தி. ஜானகிராமன்

களாக இருந்திருப்போம் நாம்." - ருக்கு சிரித்தாள்.

"ஏன் சிரிக்கிறாய்?"

"நைலானை விட்டுவிட்டாயே என்று சிரித்தேன் ... ... இப்பொழுது கடவுள் ஜயித்து விட்டார்."

"அப்படியென்றால்?"

"சைத்தான் ஆடையைக் கொடுத்து மறைத்தான். இப்பொழுது மனுஷன் நைலான் செய்து ஆடையின் நோக்கத்தையே முறியடித்து விட்டான். கடவுள் கட்சி மீண்டும் நிலைத்துவிட்டது. ஆண்களும் உடல் தெரிகிற நைலான் அணிவதால், கடவுள் சற்று அதிகமாகவே ஜயித்து விட்டார் என்று தான் தோன்றுகிறது...."

பேச்சு இவ்வாறு வார்த்தைகளைப் பிடித்துக் கொண்டு தத்தித் தத்தி எங்கெங்கோ போயிற்று. அனந்தசாமியைப் பற்றி மேலும் மேலும் பேசினாள் நாகம்மாள். ருக்கு ஏதோ கனவுலகில் இருப்பது போல் கேட்டுக் கொண்டிருந்தாள்.

க்ஷயரோகம், பெருவியாதிகளைக் கூட அவர் குணப்படுத்தி யிருப்பதை நாகம்மாள் விவரமாகக் கூறினாள். அபஸ்மாரம் போன்ற வலிப்பு வியாதிகளை டாக்டர்களெல்லாம் கைவிட்ட பிறகு அவர் போரிட்டு விரட்டியதைக் கூறினாள். நெருக்கடி கேஸ்களுக்கு வெறும் வைத்தியத்தோடு மட்டும் நின்று விடாமல், வீட்டுக்குப்போய் ஒரு மணி அல்லது இரண்டு மணி நேரம் நோய் குணமாவதற்காக ராமஜெபம் செய்வதையும் கூறினாள். பிறகு தன் அண்ணாவைப் பற்றிப் பேசினாள். அவர் பிள்ளை லண்டனில் வாழ்வதைப் பற்றிப் பேசினாள். தன்னையறியாமல் கொட்டாவி வந்து இமை தானாக அழுந்துகிற வரையில் இருவரும் பேசிவிட்டுக் கடைசியில் படுக்கச் செல்லும்பொழுது மணி மூன்று அடித்து விட்டது. நாலு வீடுகள் தள்ளியிருந்த சினிமா நட்சத்திரத்தின் வீட்டு மடாச் சேவல் தனக்கே உரிய ரோட் ஐலண்ட் குரலில் கூவத் தொடங்கி விட்டது. நாய் குரைப்பதைப் போல் உரத்துக் கரகரத்த அந்த அரவத்தைக் கேட்டு இடது பக்கத்தில் எங்கேயோ ஒரு நாட்டுச் சேவலும் விழித்து விடை கொடுத்தது. இரண்டையும் மீறித் தூங்குவதற்கு அரை மணி நேரம் பிடித்தது ருக்குவுக்கு. அவளுக்கு ஒரே ஒரு சந்தோஷம்! நாகம்மாளின் பேச்சைத் திசை மாற்றித் திருப்பி எங்கெல்லாமோ அலைய விட்டு விட்டாள் அவள். நாகம்மாளும் ஆரம்பித்த இடம் தெரியாமல் இழுத்த இழுப்புக்குப் பேசிக் கொண்டிருந்தாள். பொதுவாக வெகுளியான சுபாவம்.

இப்படி எண்ணிக் கொண்டவாறு கண்ணை மூடினாள் ருக்கு.

ஆனால் கண்ணை மூடிய பிறகு கூட அந்த மூடிய இமைகளையும் ஊடுருவி அந்தப் பழுப்பு வேட்டியும் மலர்ந்த முகமும் வைரம் பாய்ந்த மார்பும் நடமாடத் தொடங்கின. அதைப் பார்த்து அந்தக் கும்மிருளில் அவள் உதட்டில் புன்னகை அரும்பியது. பரவசப் புன்னகையாகவும் கேலிப் புன்னகையாகவும் மாறி மாறி நெளிந்தது அது.

அப்படி ஒரு கேலிப் புன்னகையரும்பும் போதுதான் 'அப்பாடா' என்று செவிள் வேர்த்துக் கன்னத்தில் வழிய, மூக்கின் கீழும் கழுத்திலும் வேர்க்க, அவர் — அனந்தசாமி — ஹாலில் உட்கார்ந்தார். அவள் உள்ளே படுத்திருப்பதை உற்றுப் பார்த்தார். தலைவலியா என்று கேட்டார். 'ஆமாம்' என்று அவள் தலையாட்டியதைப் பார்த்து, உள்ளே வந்து அருகில் உட்கார்ந்தார். பொட்டையும் நெற்றியையும் தொட்டார். எவ்வளவு முரட்டுச் சரீரம் — எவ்வளவு மிருதுவான உள்ளங்கை! இளம் வாழை இலையைத் தொடுவது போன்ற ஒரு குளிர்ந்த ஸ்பரிசம்! கையைப் பிடித்து நாடி பார்த்தார். கண்ணின் கீழ் ரப்பையை விரலால் இழுத்துப் பார்த்தார். சிறிது நேரம் பார்த்துக் கொண்டேயிருந்தார். யாரோ இழுப்பது போலிருந்தது. அவருடைய இடது கை எங்கே?... உற்றுப் பார்த்தபோது அவருடைய இடது கை அவள் முதுகைச் சுற்றியிருந்தது. அவளுக்குப் பேச நாவெழவில்லை. "அடுத்த ரயிலிலேயே ஏன் ஓடினேன், தெரியுமா? அவசரமாக மருந்து வாங்க வேண்டியிருந்தது. நல்ல வேளையாக ரயில் கிடைத்துவிட்டது. போனேன். மருந்துக் கடை திறந்திருந்தது. வாங்கி வந்து விட்டேன். அவ்வளவு சீக்கிரம் போகவில்லையானால் கடை கட்டியிருப்பான். மருந்து கிடைத்திருக்காது" என்றார். எந்த மருந்து? என்ன மருந்து? தலைவலி மருந்தா? ... "இங்கே வா. நானே தடவி விடுகிறேன்." .... அதற்காக இப்படியா அணைத்துக் கொள்ள வேண்டும்?

நீ ப்ரொபசர். அதனால்தான் உடலில் காஷாயம். கையில் நான் .... என்ன இது? நீ ப்ரொபசர்.... "ப்ரொபசர் ருக்மிணி அம்மாள்..."

சட்டென்று விழித்துக் கொண்டு விட்டாள் ருக்கு.

"உங்களைத்தானே. இன்னும் எழுந்திருக்கலியா?" கண்ணைப் பிட்டுக் கொண்டு விழித்தாள் அவள். எதிரே சுவரில் மாட்டியிருந்த கண்ணாடியைப் பார்த்தாள். உள்ளங் கையைத் தேய்த்

தப் பார்த்துக் கொண்டாள். என்ன சொப்பனம் இது!

"ப்ரொபசர் இன்னும் எழுந்திருக்கலையா?"

யார் இது! அண்ணை குரல் மாதிரி! சுப்புசாமி குரல் மாதிரி! சுப்புசாமிதான். எப்பொழுது வந்தார்?

"மாமா!"

"அப்பாடா! காதில் விழுந்ததா இப்பவாவது!"

சுப்புசாமி வந்து எதிரே நின்ருர். வாசற்படிக்கு முன். வாசற்படி முழுவதையும் அடைத்தாற்போல் நின்ருர். அவ்வளவு பெரிய உருவம்!

"மணி எட்டாகப் போகிறதே!" என்ருர் அவர். பெரிய முலாம்பழம் ஒன்று சிரிப்பது போலிருந்தது அந்த முகம்.

"எப்பொழுது வந்தீர்கள் மாமா?"

"நான் வந்து ஒரு மணியாச்சு.... எழுந்து போய்ப் பல் தேய்த்துக் காப்பியைச் சாப்பிடு. இந்தா, இதை முதலில் வாங்கிக்கொள்!" என்று ஒரு பெரிய ஆப்பிளை நீட்டினுர் அவர்.

அதை வாங்கிக் கொண்டாள் ருக்கு. அவரைப் பார்த்தாலே பெரிய பழம் மாதிரி இருந்தது, பாரி ஆசாமி. முலாம்பழத்தைப் போல மஞ்சள் பதுங்கிய வெள்ளை நிறம். அந்த ஆறடி உயரமும் அதற்குத் தகுந்த பெரிய பருமனும் - அத்தனையும் அந்த நிறம். மாநிறம், மார்பும் கணைக்காலும் இன்னும் வெள்ளையாகப் பொலிந்தன. தலையில் சிறிது வழுக்கை. மீதி முடியெல்லாம் பாதி நரை. பெரிய, அகலமான சதுர முகம். முகவாய்க்குக் கீழ் சதை விழுந்து ஒரு வரம்பு கட்டிச் சரிவாக இறங்கிற்று. தாணுக்கும் உத்தரத்துக்கும் நடுவேயுள்ள சரிவு மாதிரி. தோளில் வெள்ளை வெளேரென்ற மடிப்புப் பிரித்த ஜரிகை வண்ணான் மடி. அரையில் அதே போல் 'பளீர்' என்று வெளுத்துப் பொலிந்த தகடு போன்ற ஜரிகை வேட்டி. பாதம்தான் எவ்வளவு பெரிது! ஒவ்வொரு விரலும்தான் எவ்வளவு பெரிது! எவ்வளவு சதை! ஒரு பெரிய மனுஷப் பழம் மாதிரி இருந்தது, அவரைப் பார்த்தால்.

பாயைச் சுருட்டிக் கட்டில் மேல் வைப்பதற்குள்ளாகவே இந்த உருவத்தை நாலைந்து தடவைகள் பார்த்துவிட்டாள் அவள்.

"இப்பொழுது ஏது மாமா வண்டி?"

"காற்றிலே வந்தேன்."

"காற்றிலேயா?"

"ஏன் காற்று என்னைத் தூக்க முடியாதுன்னு பார்க்கிறியா? நான் ராத்திரி விமானத்திலே ஏறும்பொழுதே அங்கே ஒரு யானை கட்டியிருந்தது. அது காலையிலே ஏரோப்ளேனில் ஏறி அமெரிக்காவுக்குப் போகப் போகிறது என்றுன்கள்...... நான் மாத்திரம் வரப்படாதா? போ, போ, பல் தேய். முக்கியமான சமாசாரம் உனக்குச் சொல்லப் போகிறேன்."

"என்ன மாமா?"

"நீ காப்பியைச் சாப்பிடு. அப்புறம் சொல்கிறேன்."

மறுபடியும் என்னவென்று கேட்டுப் பிடிவாதம் பண்ணுமல் பல் தேய்க்கப் போனுள் ருக்கு.

வீட்டுக்குள் ஒரு புதிய கலகலப்பு வந்துவிட்டது. எங்கிருந்துதான் வந்ததோ தெரியவில்லை. சந்திரா குளித்துவிட்டு ஒரு புதிய வங்காளப் பட்டுப் புடவையைக் கட்டிக்கொண்டு குங்குமம் துலங்க சுவாமி அலமாரியில் ஊதுவத்தியை ஏற்றி ஸ்டாண்டில் செருகிக்கொண்டிருந்தாள். நாகம்மாள் சமையலறையில் எண்ணெயையும் நெய்யையும் கரண்டி கரண்டியாக விட்டு ஊத்தப்பம் வார்க்கும் ஓசை சரசரத்தது. உள்ளே மூன்று நாலு கூடைகள்; பழக் கூடைகள். கொல்லையிலே பசுமாடு கத்தியது. சுப்புசாமி வந்துவிட்ட கோலாகலங்களில் அதுவும் ஒன்றுபோலக் கத்தியது. தோசைக்கல்லில் 'ஜிர் ஜிர்' என்று எண்ணெய் பொரிந்தது. நெய் மணத்தது. சுப்புசாமிக்கு எல்லாமே பெரிய அளவில் நடக்க வேண்டும். அவருக்குத் தகுந்த சாப்பாடு வேண்டும். ஊத்தப்பம் பெரிது பெரிதாக முறுகி முறுகிச் சுடச்சுட அவர் இலையில் விழவேண்டும். அதைப் பிழிந்தால் கால் சேர் நெய் சொட்ட வேண்டும். இல்லா விட்டால் சிரித்துக் கொண்டே ஏதாவது சுருக்கென்று சொல்லுவார். "என்னத்துக்கு இப்படி வரட்டி வரட்டியாகத் தட்டறே? இன்னும் பத்து வருஷங்கள் இருப்பேன் என்று ஜோஸியன் சொல்லியிருக்கான். அப்புறமல்லவா இதுக்கு வேலையிருக்கு!" என்பார். எல்லாம் சம்பிரமமாக இல்லா விட்டால், அவருக்கு ஒன்றும் ஓடாது. இந்த மாம்பழக் காலத்தில் வேளைக்கு இரண்டு மாம்பழம். டிபனுக்கு ஒரு மாம்பழம். கூட இருக்கிறவர்களும் அதேமாதிரி சாப்பிட வேண்டும். இல்லாவிட்டால், "சீ, தரித்திரம், எழுந்து போடா, வயிற்றுவலி, மொகரக்கட்டை!" என்று கத்துவார்.

அந்தக் கத்தல், சிரிப்பு, ஆர்ப்பாட்டம் - எல்லாவற்றுக்கும் பயந்து, வீடு முழுதும் இப்பொழுது ஈடு கொடுக்கத் தொடங்கிவிட்டது. 'உம்'மென்று முகத்

தைத் தொங்கப் போட்டுக் கொண்டிருந்த சந்திராவுக்கே களைகட்டி விட்டது.

கொல்லையில் பல் தேய்க்கப் போன பொழுது கிணற்றிலிருந்து வாளி வாளியாக நீரை இழுத்து, குருசாமி காரைக் கழுவிக் குளிப்பாட்டிக் கொண்டிருந்தான்.

ருக்குவுக்கு வெட்கம் பிடுங்கித் தின்றது.

குப்புசாமிக்கு எழுந்தவுடனே குளித்து விடவேண்டும். அவர் மட்டும் இல்லை தங்கை, மருமான், மோட்டார் கார், அதன் டிரைவர், பசுமாடு, எல்லாமே குளித்துவிட வேண்டும். குளிக்காத முகத்தைக் கண்டால் அவருக்குப் பற்றிக் கொண்டு வரும். ஐந்து மணிக்கு எழுந்து கொண்டால், வீட்டில் மற்றவர்கள் எழுந்திருக்கவில்லையே என்று தயங்க மாட்டார். பாய்லரில் தண்ணீரை நிரப்பித் தீமூட்டி விசிறுவார். 'குளிச்சாச்சா? குளிச்சாச்சா?' என்று அவர் ஒவ்வொருவராக வாய் ஓயாமல் கேட்கும் பொழுது, வாரிச் சுருட்டிக்கொண்டு குளியல் அறைக்குள் ஓடித் தண்ணீரைத் தலையில் விட்டுக் கொள்ளத்தான் தோன்றும். அதுவரையில் அந்தக் கேள்வியும் நிற்காது. பல் தேய்க்கப் போன ருக்குவும் விறுவிறுவென்று துண்டை எடுத்துக் குளித்து விட்டுத்தான் உள்ளே அடி எடுத்து வைத்தாள். புடவை மாற்றி, பூஜை அலமாரி முன்னால் சிறிது நேரம் கண்ணை மூடி நின்றாள். அதற்குள் நாலுதடவைகள் கூப்பாடுவந்து விட்டது குப்புசாமியிடமிருந்து.

மூன்று இலைகளைத் தானே போட்டு, சந்திராவும் ருக்குவும் வரட்டும் என்று காத்துக் கொண்டிருந்தார் அவர்.

"பாக்கி பூஜையை அப்புறம் பண்ணிக் கொள்ளலாம், வாயேன்!" என்று ஐந்தாவது தடவையாகக் குரல் கொடுத்தார் குப்புசாமி.

சந்திராவும் ருக்குவும் அவருக்கு இரு பக்கங்களிலும் உட்கார்ந்து கொண்டார்கள். 'நொத்து நொத்'தென்று, முறுகின ஊத்தப்பம் இலையில் விழுந்தது.

"ஒரு முக்கியமான சேதி சொல்லப் போகிறேன் என்றேனே. என்னவென்று கேட்கமாட்டாயோ?" என்றார் குப்புசாமி ருக்மிணியிடம்.

"நீங்கள்தான் அப்புறம் சொல்வதாகச் சொன்னீர்களே!"

"நான் சொல்லிவிட்டேனே!"

"என்ன சொன்னீர்கள்?"

"உன் காதில் விழவில்லை?"

"எப்பொழுது?"

"உன்னை எழுப்பும் பொழுது... என்ன முழிக்கிறாய்? சந்திரா, நீதான் சொல்லேன்! உனக்காவது தெரிகிறதா என்று பார்ப்போம்!"

சந்திரா சற்று யோசித்தாள். "பிறகு, நீங்கள் என்னவாக இருக்கிறீர்கள், உங்கள் காலேஜில்!" என்று கேட்டாள்.

"வாத்தியாராக!"

"அதற்கு என்ன பெயர்?"

"ஆசிரியர்தான். லெக்சரர்!"

"நீங்கள் இப்பொழுது பேராசிரியராக, புரொபசராக ஆகியிருப்பீர்கள்... என்ன மாமா?"

"அட! எப்படியடி கண்டு பிடித்தாய் நீ!" என்று கேட்டுச் சிரித்தார் குப்புசாமி.

"புரொபசர் எழுந்து கொள்ள வில்லையா, எழுந்து கொள்ளவில்லையா என்று தானே மாமா நீங்கள் அவர் காதில் சுப்ரபாதம் பாடினீர்கள்!"

"ரொம்ப சரி; ருக்கு, முந்தாநாளுக்கு முதல் நாள் நான் டில்லியில் இருந்தேன். உங்கள் காலேஜ் கமிட்டி உறுப்பினர் ஒருவரோடு செக்ரடேரியட்டில் பேசிக் கொண்டிருந்தேன். உன்னைப் பற்றிப் பேச்சு வந்தது. இந்தமாதிரி, லெக்சரர் ருக்மிணி எனக்குத் தெரிந்தவர் பெண் தான் என்று சொன்னேன். அவள் அடுத்த வாரத்தில் புரொபசராகக்கூட ஆகலாம் என்று சொன்னார். இப்பொழுது இருக்கிறாளாமே, அவள் ஐ. நா. சபையில் பெரிய உத்தியோகம் கிடைத்தால் போகப் போகிறாளாம்."

"அப்படியா?"

"எங்கள் வீட்டுக்கு 'வா வா' என்று இத்தனை வருஷங்களாகக் கதறினேன், கேட்டாயா? இங்கே அடியெடுத்து வைத்தாலே போதும், பதவி உயரும். அப்பொழுதே வந்திருந்தால்..."

"இந்த ரகசியத்தை நீங்கள் அப்பொழுதே எனக்குச் சொல்லவில்லையே?" என்றாள் ருக்கு.

"ஏன் அண்ணா, அந்தப் பெரிய வேலை இங்கேயேதான் கிடைக்கும்படியாகப் பாரேன் அவளுக்கு. அவள் டில்லியிலே இருந்தது போதுமே!" என்றாள் நாகம்மாள்.

ருக்குவுக்குச் சற்றுத் தூக்கிவாரிப் போட்டது. நாகம்மாள் எதற்காக இதைச் சொல்கிறாள்? அவளை நிமிர்ந்து பார்க்கவும் முடியவில்லை, பார்க்க வேண்டும் என்று தோன்றிய எண்ணத்தைக் கூடத் தட்டிப் பேசாமலிருந்தாள்.



"ஆமாண்டி, அவளுக்குப் பெரிய வேலையாகப் போகிறது கைமேலே. அதுக்கு சந்தோஷப்பட்டு ஒரு கரண்டி நெய்யைப் போட்டுத் தோசையை முறுக வைக்கத் துப்பில்லை உனக்கு. அவளுக்கு இந்த ஊரிலேயே பெரிய வேலை கிடைக்காதோங்கறு! மூஞ்சியைப் பாரு!" என்று அழகு காட்டினார் குப்புசாமி. "ஏன் இங்கே வந்துவிடுவதாக எண்ணம் இருக்கிறதோ?" என்று மறு கணமே ருக்குவிடம் கேட்டும் விட்டார் அவர்.

ருக்குவுக்குத் திக்குமுக்கலாக ஆகிவிட்டது. சமாளித்துக் கொண்டு, "இங்கே யார் இருக்கிறார்கள் எனக்கு?" என்று சட்டென்று சொல்லி விட்டாள்.

"ஏண்டி, நாங்களெல்லாம் மனுஷாளாகப் படலியா உனக்கு?" என்றாள் நாகம்மாள். "இந்த ஊரிலே உனக்கு மனிதர்கள் இல்லையா? என்ன அப்படிச் சொல்லி விட்டாய்?"

"அது சரி..."

"ஏன் அப்படி இழுக்கிறாய்? அப்படி எண்ணமிருந்தால் சொல்லு. நாளைக்கே வேலையிலே சேர்ந்து விடலாம். என்ன சொல்கிறாய்?...ம்!" என்று அதட்டிக் கேட்டார் சுப்புசாமி.

"தோசையைத் திங்கட்டுமே. இரண்டு பேருமாகச் சேர்ந்து இப்படிக் கிடுக்கியிலே மாட்டினால் அவள் என்ன சொல்வாள்?" என்றாள் சந்திரா.

"இந்தமாதிரி காரியங்களை நினைத்தவுடனே செய்துவிட வேண்டும். இப்படிக் கிடுக்கி போட்டால்தான் மனசு சடாலென்று முடிவுக்கு வரும்!" என்றார் சுப்புசாமி.

"அதுக்காக? வேலை உயர்ந்திருக்கிறது என்கிற சேதியைக் கேட்டுக் கொஞ்சம் சந்தோஷம், ஆச்சரியம் இதெல்லாம் படுகிறதற்குக்கூட ஒருத்தரை விட வேண்டாமா?" என்று கூறி ருக்குவைப் பார்த்தாள் சந்திரா.

உண்மைதான். ருக்குவின் சந்தோஷ அதிர்ச்சியைக்கூடச் சட்டை செய்யாமல் அவர்கள் மேலே பேசிக்கொண்டுதான் போனார்கள். செய்தியை நம்புவதற்கே அவளுக்கு நேரம் கொடுக்கவில்லை. அந்தக் கல்லூரியில் பேராசிரியராக ஆக முடியும் என்று அவள் கனவுகூடக் கண்டதில்லை. அந்தப் பதவியை வகித்துக் கொண்டிருந்த மிஸஸ் கங்கூலி அவளை விட ஒரு வயது சின்னவள். வயதாகிப் பதவியிலிருந்து ஓய்வு எடுத்துக் கொள்கிறார்களே, அதைக்கூட ருக்கு அவளுக்கு ஒரு வருஷம் முன்னாலேயே செய்துவிட வேண்டும். ஆகவே, அந்தப் பதவியைப் பற்றி நினைக்கவோ, ஆசைப்படவோ இல்லை அவள். திடீரென்று இந்தச் செய்தி வந்தது அவளுக்கு அதிர்ச்சியாகத்தான் இருந்தது. அது சந்தோஷ அதிர்ச்சி என்றும் சொல்வதற்கில்லை. திடுதிப்பென்று எதிர்பாராததைக் கேட்ட வெறும் அதிர்ச்சி. அதில் சந்தோஷம் புக ஒரு நிமிஷம் இரண்டு நிமிஷங்களாவது ஆகும். அதற்குக்கூட நேரம் கொடுக்காமல் அண்ணனும் தங்கையும் பேசிக் கொண்டிருந்தது, சற்று அர்த்தமில்லாத ஊக்கமாகப்பட்டது ருக்குவுக்கு. டில்லியை விட்டு வருவதாவது போவதாவது! என்ன பிதற்றல்....!

"சரி, பேஷாகச் சந்தோஷப்படட்டும். ஆச்சரியப்படட்டும். இப்ப என்ன குடி முழுகிப் போயிற்று? நாளைக்குத்தான் சொல்லட்டுமே!" என்று கடைசி ஊத்தப்ப விள்ளலைத் தயிரோடு ஒட்டத் தேய்த்து வழித்து வாயில் போட்டுத் தன் பெரிய உடலைக் கையை ஊன்றிப் பெயர்த்து, "ராமையா!" என்று உந்தி எழுந்து கொல்லைப் பக்கம் கை கழுவப் போனார் சுப்புசாமி. திரும்பி வந்தவர் நின்றபடியே இரண்டு சேர் பிடிக்கிற அந்த நீள டம்ளர் நிறைய இருந்த காப்பியை நாகத்தின் கையிலிருந்து வாங்கி மட மடவென்று குடித்தார். "அப்பாடா! காப்பி ரொம்ப நன்றாக இருக்கிறது" என்றார். வெள்ளை வெளேர் என அரைக்கைச் சட்டை ஒன்றைப் பீரோவிலிருந்து எடுத்துப் போட்டுக் கொண்டார். "வரேன், வரேன்! வரேன்!" என்று கத்தினார். கொல்லைப் பக்கம் மறுபடியும் போனார். காம்பவுண்ட் சுவரை ஒட்டிய சார்பில் நின்று குரல் கொடுத்து பசுமாட்டைத் தடவினார், தழுவினார், தட்டிக் கொடுத்தார். மிரண்டு துள்ளிய கன்றையும் ஒரு முறை தடவினார். அப்படியே தோட்டத்தின் வழியாகவே வாசலுக்கு வந்தார். "சந்திரா! நான் வர ஒரு மணிக்கு மேலே ஆகும். நீங்களெல்லாம் சாப்பிட்டு விடலாம். எனக்காகக் காத்திருக்க வேண்டாம்" என்று கத்திவிட்டுக் காரில் ஏறிக் கொண்டார். சந்திரா வாசல் பக்கம் இலையிலிருந்து எழுந்தபடியே ஓடினாள். கார் கிளம்பி வெளி வாசலைக் கடந்து வளைந்து மறைந்தது.

"மாமாவுக்குச் செட்டியாரைக் கட்டிண்டு அழத்தான் பொழுது சரியாயிருக்கு! பாரேன், வந்ததும் வராததுமாக, ஒரு வார்த்தை சொல்லக் காணோம், போய் விட்டார்" என்று உதட்டைப் பிதுக்கினாள் சந்திரா.

ஏறக்குறைய அதையேதான் நினைத்துக் கொண்டிருந்தாள் ருக்கு. என்னத்தையோ மனத்தில் சுமந்து கொண்டு 'லோ, லோ' என்று அலைகிற இந்த ஆத்மாவைக் கண்டு அவளுக்கும் ஒன்றும் பிடிபடவில்லை. செட்டியார் காரியம் என்று எதையோ சொல்லி, எதிலிருந்தோ தப்பித்துக் கொண்டு அவர் அலைகிறாற் போல்தான் தோன்றியது அவளுக்கு. ஊர் ஊராக என்று சொன்னால் போதாது. நாட்டின் இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடிக்கும், அந்தக் கோடியிலிருந்து இந்தக்கோடிக்குமாக நடை போடுகிறார் அவர்.

"நாமும் போவோமா?" என்றாள் சந்திரா. "மியூசியத்துக்குப் போய்ப் பழைய நாணயங்கள் பகுதியைப் பார்க்கலாம் என்று சொன்னீர்களே!"

# ஆதார கலாச்சார இலக்கியப் போட்டி!

## 27 பரிசுகள் | ஒவ்வொன்றும் ரூ. 1,000

ஒவ்வொன்றும் ரூ. 1000 மதிப்புள்ள 27 பரிசுகள் வழங்கப்படும் மூன்றாவது போட்டியில் கலந்து கொள்ளுமாறு இந்திய எழுத்தாளர்களும், பிரசுரகர்த்தர்களும் அழைக்கப்படுகின்றனர். போட்டிக்கு அனுப்பப்படும் கையெழுத்துப் பிரதிகள் அல்லது புத்தகங்கள், புதிதாக எழுத்தறிவு பெற்ற முதியோரையும் சமுதாய அபிவிருத்தித் திட்ட ஊழியர்களையும் கவரும் விதத்தில் கீழ்க்கண்ட விஷயங்களைப்பற்றி யிருக்க வேண்டும். அவை 1959 ஜனவரி 1-ந் தேதிக்குப் பின் பிரசுரமானவையாக இருக்க வேண்டும்.

### விஷயங்கள்

இந்திய சமூகச் சீர்திருத்தங்கள் ○ இந்திய ஞானிகள் (இரண்டு பாகங்களில் - ஒவ்வொரு பாகத்துக்கும் தனித்தனிப் பரிசு) ○ இந்திய மாதர் திலகங்கள் இந்தியப் பண்டிகைகள் ○ இந்திய சுதந்திர இயக்கத்தின் தலைவர்கள் நமது அண்டை நாட்டினர் ○ இந்திய மதங்கள் ○ நட்சத்திரங்களும் கிரகங்களும் இந்தியக் கிராமிய இலக்கியம் ○ இந்திய விஞ்ஞானப் பெரியார்கள் ○ இந்தியாவின் சிறந்த எழுத்தாளர்கள் ○ குழந்தைகளின் விளையாட்டுக்கள் ○ இந்திய கலாச்சார மரபு ○ இந்திய சரித்திர வீரர்கள் ○ நமது இதிகாசங்கள் இந்தியாவிலுள்ள யாத்திரை ஸ்தலங்கள் ○ நமது பழங்குடிகள் ○ நமது தேசிய கீதம் ○ பரவலாயுள்ள வியாதிகளைத் தடுப்பது ○ இந்திய நுணுக்கக் கைத்தொழில்கள் ○ இந்தியாவிலுள்ள நதிகள் ○ நமது கொடியின் கதை இந்தியாவின் முக்கிய நகரங்கள் ○ இந்தியக் கிராமிய நடனங்கள் ○ கவிஞர் தாகூரின் வாழ்க்கை வரலாறு ○ மோதிலால் நேருவின் வாழ்க்கை வரலாறு.

மொழி: கையெழுத்துப் பிரதிகள் அல்லது புத்தகங்கள் எந்த இந்திய மொழியிலும் இருக்கலாம்.

அளவு: கையெழுத்துப் பிரதியானல் சுமார் 80 பக்கங்கள். புத்தகங்களில் போதிய அளவு சித்திரங்கள் இருக்க வேண்டும்.

பரிசுபெறும் புத்தகத்தின் 'காப்பிரைட்' உரிமை வில்லங்கம் ஏதுமின்றி இந்திய சர்க்காருக்கு மாற்றப்படும். பரஸ்பரம் ஒத்துக்கொள்ளப் பட்டபடி, காப்பிரைட்டுக்காகத் தகுதியான தொகை அளிக்கப்படும்.

பிரவேசக் கட்டணம்: எழுத்தாளர் அனுப்பினல் பிரதி ஒன்றுக்கு ரூ. 3; பிரசுரகர்த்தர் அனுப்பினல் பிரதியொன்றுக்கு ரூ. 5.

கடைசிதினம்: 15-9-1961க்குள், பிரதிகள் அனுப்பிவைக்கவேண்டும்.

கீழ்க்கண்ட விலாசத்துக்கு விண்ணப்பித்து மேல் விவரங்களும் நிபந்தனைகளும், தகவல்களும் பெறலாம்.

**ஸ்பெஷல் ஆபீஸர் (லிட்டரேச்சர்)**

**SW. II செக்ஷன், கல்வி மந்திரி இலாகா, புது தில்லி**

DA 60/289

"ஆரம்பித்தாகி விட்டதா? மாமா கிளம்பிவிட்டார். மருமாள் முறை வந்து விட்டது. மாமா புதுக்காசுக்கு அலையறார். நீ பாசி புடிச்ச காசுக்கு அலையிறயாக்கும்... உங்களுக்குப் படிக்க மட்டும் சொல்லிக் கொடுக்கவில்லை காலேஜில். இந்தப் பட்டணத்து வெயிலையெல்லாம் தலையில் தாங்கிக் கொள்ள, உடம்பும் மூளையும் வேக வேக பஸ் ஸ்டாப்புக் கம்பத்திலே ஒட்டிக் கொண்டு நிற்க, புத்தி நிலை கொள்ளாமல் 'மாங்கு மாங்கு' என்று காரியமில்லாமல் அலைய, மனசை ஓர் இடத்திலே ஒரு க்ஷணம் நிற்கவொட்டாமல் எதையோ துரத்தித் துரத்திக் கொண்டு போக, இவ்வளவும் சேர்த்துச் சொல்லிக் கொடுத்து விடுகிறார்கள் என்று நினைக்கிறேன். இதைப் பாரு சந்திரா, டில்லி வெய்யிலில் மூளை இளகிப் பன நுங்குமாதிரி செதுறுகிறது என்று வந்திருக்கிறாள் ருக்கு. அவளை வேறு இழுத்துக் கொண்டு அலைய வேண்டாம். நேற்று ராத்திரியே உடம்பெல்லாம் வலிக்கிறது என்றாள் அவள். இன்றைக்கு அனந்தசாமி வந்தால் மருந்து வாங்கிக் கொடுக்கலாம் என்று இருக்கிறேன். நீபாட்டுக்கு அவளை இழுத்துக் கொண்டு போய்விடாதே" என்று நாகம்மாள் ருக்குவைப் பார்த்து இலேசாக முகம் சுளித்தாள்.

ருக்குவுக்கு ஒரு கண நேரம் என்ன சொல்வதென்றே தெரியவில்லை. அனந்தசாமியைப் பார்க்கக் கூடுமோ என்ற ஓர் அச்சத்தினாலேயே அவள் வெளியே போகத் துடித்தாள். பார்க்கக் கூடும் என்ற ஓர் ஆவலே வெளியே போக வேண்டாம் என்று அவளை உள்ளூற நச்சரித்தது. என்ன பதில் சொல்லலாம்?

"அப்படியானால் நான் போய் வருகிறேன்" என்று சந்திராவே இக்கட்டைத் தீர்த்து வைத்தாள்.

பத்து நிமிடங்களுக்கெல்லாம் சைக்கிளில் ஏறி வெளியேயும் போய்விட்டாள் சந்திரா. ருக்குவுக்குச் சற்றுக் கோபம்கூட வந்தது.

"உனக்கென்ன பைத்தியம் கியத்தியம் பிடித்திருக்கிறதா, நாகம்?" என்று சைக்கிள் மறைந்ததும் மறையாததுமாகக் கேட்டாள் ருக்கு.

"நானா பைத்தியம்? எங்கண்ணா பைத்தியம். என் பெண் பைத்தியம். நீ ஒரு பைத்தியம்."

"என்னது?"

"ஆமாம்! சைத்தான் ஆவலைக் கிளப்பி விட்டுவிட்டான். அது எவ்வளவு தூரம் போகிறது என்று பார்க்காமல் பதுங்குகிறது பைத்தியம் இல்லாமல் என்ன?"

"நாகம்! நீ போகிற போக்கைப் பார்த்தால் ஏதாவது விபரீதமாக வந்து முடியும் போலிருக்கிறது"—ருக்கு சற்று பயந்துவிட்டாள்.

"விபரீதமா? யாருக்கு விபரீதம் வரும்? சாதாரண மனிதர்களுக்கு. சைத்தான் மனுஷர்களிடம் விஷமம் பண்ணும். தெய்வத்தினிடம் வாலாட்டமுடியுமோ, அதுக்கு? அனந்தசாமியை அணுகக் கூட முடியாது. நீயே பாரேன்."

ருக்குவுக்கு இலேசாக உள்ளுக்குள் நடுங்கிற்று. சமாளித்துக்கொண்டு நாலு விநாடிகளுக்குப் பிறகு "இன்றைக்கு வருவாரா என்ன? அவ்வளவு தீர்மானமாகப் பொறி வைக்கிறாயே?" என்று பயத்தையே கேலியாக மாற்றிக்கொண்டு கேட்டுவைத்தாள்.

"அதை நான் எப்படிச் சொல்ல முடியும்! அது திடுதண்டி சன்னாசி. இந்த வெயிலிலே எங்கே அலைகிறதோ பழஞ் செருப்பை மாட்டிக் கொண்டு?" என்று எழுந்தாள் நாகம்மாள்.

ஒன்பது மணிக்கே உடலைப் புடம் போடத் தொடங்கிவிட்ட அந்த வெயிலில் பழஞ் செருப்புடன் அலைந்து கொண்டுதானிருந்தார் அனந்தசாமி. திருவல்லிக்கேணி ஜாம்பஜாரில் இளக்கம் 'சப்பு சப்'பென்று ஒட்டிக்கொள்ளும் தார் மீது அந்தச் செருப்பு 'விடேன் தொடேன்' என்று பெயர்ந்து பெயர்ந்து நடந்தது. கையில் பிரித்துப் பிடித்த குடைகூட இலேசாக அனல் வீசியது. பக்கத்தில் பார்த்தபோது சற்று வெட்கமாக இருந்தது அவருக்கு. முப்பது நாற்பது பெரிய கள்ளிப் பெட்டிகளை அடுக்கி வரிந்து கட்டிய தள்ளு வண்டி ஒன்றைத் தலையால் முட்டித் தள்ளிக் கொண்டு அங்குலம் அங்குலமாக இரண்டு ஆட்கள் நகர்ந்து கொண்டிருந்தார்கள். முதுகு, தொடை, ஆடுசதையெல்லாம் எண்ணெயைச் சதும்பத் தடவினாற்போல் வேர்வை ஓட்டம். காலில் செருப்புக்கு மாற்றாக தார் போட்டுக் கட்டிய சாக்கு. முன்னால் இழுப்பவனின் உடல் இடுப்புக்கு மேல் முன்னும் பின்னும் இயந்திரம் போல் அசைந்தது. இத்தனை பலத்துக்கும் அசைப்புக்கும் வண்டி அசைந்தது ஓர் அங்குலம்தான். திடீரென்று பின்னால் சிவப்புப் பூதம் போன்ற பதின்மூன்றும் நம்பர் பஸ் அவர்கள் காலடியில் வந்து, 'பாம் பாம் பாம்' என்று காதைத் துளைத்தது. மாவு மிஷின் இரைச்சல் ஒரு புறம். அந்த அரைக்கும் கடையிலிருந்து மிளகாய் நெடி வீசி வெயிலோடு கைகோத்துக் கொண்டது. மந்தாரை

இலைக் கட்டைப் பொத்தென்று தள்ளி ஒரு கடை முன் இறக்கிக் கொண்டிருந்தார்கள். கறுப்பாக நொந்த பழம் புளி, வெயிலில் வாடிக் கொண்டிருந்த மாம்பழ வண்டி, நடை பாதையில் வெயிலில் துவண்ட பூக்கூடை, பூக்காரி பக்கத்தில் உட்கார்ந்திருந்து மாம்பழத்தைச் சப்பிக் கொண்டிருந்த குழந்தை — எதைப் பார்த்தாலும் வாட்டம், சோர்வு. அந்தப் புளி, மந்தாரை நொறுங்கல் எல்லாவற்றையும் பார்க்கும்போது உலகமே கிழடு தட்டி உயிருக்கு மன்றாடுவதுபோல் இருந்தது.

ஒரு சந்தில் திரும்பினார் அவர். பத்து வீடுகள் தாண்டியதும், "சாமி வாங்க சாமி!" என்று குரல் கேட்டது.

"எங்க சாமி காணவே காணும்!"

அனந்தசாமி திரும்பினார். ஒரு குறுகிய திண்ணையி லிருந்து குரல் வந்தது. திண்ணையிலிருந்தே ஓர் ஆள் குதித்தான்.

"நான்தாங்க!" என்றான்.

ரிக்ஷா இழுக்கிறவன் பேர் தெரியாது. அந்தத் திண்ணைதான் ஜாகை. அனந்தசாமி "சௌக்கியமா?" என்றார்.

"நான் சௌக்கியம்தான் சாமி. அவளுக்குத்தான் நேத்தே புடிச்சுக் காச்சலடிக்குது. உடம்பெல்லாம் நோவுதாம். கண்ணைப் பாரு சாமி" என்று திண்ணையைக் காட்டினான்.

திண்ணையில் புடவையையே தலையில் வளைத்துப் போர்த்தி முடங்கிக் கிடந்தாள் அந்தப் பெண்.

"ஏ புள்ளே! சாமி வந்திருக்கு, ஏ புள்ளே, அலங்காரம்!" என்று தொட்டு எழுப்பினான் அவன். அலங்காரம் எழுந்து கண்ணைத் திறக்க முடியாமல் திறந்து விழித்தாள். முகத்தில் ஜுரப்பளபளப்பு.

கேள்விகள் வழக்கம்போல் எழுந்தன.

பையிலிருந்து மூட்டையை அவிழ்த்து இரண்டு பொட்டணத்தைக் கொடுத்தார் அனந்தசாமி.

"காலமே வரைக்கும் சுடுதண்ணியே வச்சுக் கொடு. ஜவ்வரிசிக் கஞ்சி கொடுக்கலாம். நாஸ்தா வாங்கிக் கொடுத்திராதே - பக்கோடா, சுண்டல் ஒண்ணும் தொடப்படாது." என்று அவனுக்கு எச்சரித்தார் அனந்தசாமி.

"ஐயோ சாமி - நாஸ்தா வாங்கிக் கொடுப்பான் எவனுச்சிம்? ஞாயாட்டம் பறக்குது கிட்டப் போனா!"

"கஞ்சி வச்சுக் கொடுப்பியா?"

"கொண்டாரச் சொல்றேன்."

"யாரைக் கொண்டாரச் சொல்லப் போறே?" என்று கேட்டார்.

"சின்னது வெங்கடரங்கம் பிள்ளைத் தெரு காவாங்கரையண்டை இருக்கு துங்க - அத்தெக் கொண்டாரச் சொல் றேன். அதுக்கும் ஒரு சாக்கு வந்துது. மறுபடியும் சேந்துக்க."

அனந்தசாமி ஒன்றும் புரியாமல் விழித்தார்.

"அது சின்னச் சமாசாரமுங்க. ரண்டு வாரமாச்சு, இவளோடு சண்டை போட்டுக்கினு கோச்சுக்கினு போச்சு கழுதை. நேத்து பெல்ஸ் ரோடாண்ட போறேன். 'இந்தா பாரு, என்னை வந்து வான்னு சொல்ல வாயில்லே உனக்கு. நான் வந் திருவேன்னு நினைக்காதே. நான் இந்தத் தவனத்தைக் காசாக்கி சோறு துன்னு வேன். சோறு இல்லே, நாஸ்தா பண் ணியே காப்பாத்திக்குவேன். நானு வந் திருவேன்னு கனுக் காணுதே'ன்னு சத்தம் போட்டா. நல்லதுதாங்க. ஆனு ரோசம் மட்டும் பொத்துக்கினு வரும். இப்ப இதுக்குக் காய்ச்சல்னு ஒடியாரும் பாரு...ஏய், பொட்டணத்தைப் பிரிச்சுப் போட்டுக்கவேன் மருந்தை...சாமி, நான் காத்தாலே ஆஸ்பத்திரிக்கு இட்டுக்கினு போயிருப்பேன். அந்தக் கூட்டத்திலே நிக்க முடியுமா இதுக்கு? சாமி வந்தா நல்லாருக்குமேன்னு நெனச்சுக்கினே இருந்தேன். நீ வந்தே..."

அவன் பேசி முடிப்பதற்குள் அனந்த சாமி மூட்டையைக் கட்டிப் பையில் போட்டு, மூக்குக் கண்ணாடியையும் கூட்டில் வைத்து விட்டார்.

"சரி, சாயங்காலம் ஒரு பொட்டணம் கொடு. சரியாயிடும்."

"சரி சாமி. ரிக்ஷாவிலெ ஏறு சாமி. எங்க வேணும்னாலும் உன்னை இட்டுக்கினு போறேன்."

"வாண்டாம். நீ போய்க் கஞ்சி வைக் கிறவளைப் பாரு."

"இதோ போறேன் சாமி. எப்ப கூப்டுவேன்னு காத்திட்டுக் கிடக்கு அது. அதுவும் நீ சொன்னேன்னு சொன்னா..."

அனந்தசாமி நகர்ந்தார். காஷாயம் கட்டி, ஆனால் குடக்கூலிக்கு வீடு வைத் துக்கொண்டு அதைவிட்டு வருடக் கணக் காக வெளியேறாத தம் சன்யாசத்தை நினைத்துக்கொண்டார். ஒட்டுத் திண்ணை யில் ஒரு சட்டிப் பானையுடன் இரண்டு பெண்களுடன் நடக்கிற அந்தச் சம்சா ரத்தை நினைத்துக் கொண்டார். மாறும் காலத்தின் லட்சணமா, சென்னை போன்ற பட்டணத்தின் பண்பாடா அது என்று புரியாமல் நடந்தார் இந்தச் சந்நியாசி. இன்னும் எங்கே யெல்லாம் அவர் போக வேண்டுமோ! (தொடரும்)

# நரிவேட்டை

கதை: ஜெயந்தி

சித்திரம்: விநு

5

வேவு பார்ப்போரைக் கண்டு பிடிக்கும் நோக்கத்துடன் காலிம்பாங்குக்கு வந்த குமாரிடம் லின்யி தன் காதலை வெளியிடுகிறாள். நிலா உதயமாக லின்யி உணர்ச்சிப் பெருக்கோடு உல்லாசமாய்க் கீதமிசைக்கிறாள்.

பாடல் முடிந்ததும்..

. . . . .

லின்யி! நான் உன்னை ஏமாற்ற விரும்ப வில்லை.

எனக்குத் தெரியும் குமார்! நீங்கள் என்னை நேசிக்க வில்லை.... ஆனால் உங்கள் மனம் மாறும் என்று நான் எதிர்பார்க்கவும் கூடாதா?

இது உனக்கு என் அன்புப் பரிசு! இந்தா.

இதென்ன பெண்களைப் போல 'லேடீஸ்வாட்ச்' கட்டி யிருக்கிறீர்கள்?

இதைப் பரிசாக அளித்த காரணத்தை ஷியாமா அறிந்தால் வருத்தப் படமாட்டாள்.

அதை உங்கள் கரத்தாலேயே அணிவிக்கக் கூடாதா?

சற்று நேரத்துக்குப் பின் - குமார் தன் அறையில்

என் வருகையே பல நிகழ்ச்சிகள் துரிதமாக நடைபெறக் காரணமாயிருக்கிறது. வின்பி... அவள் ஆசையை முற்றிலும் குலைக்காமலிருந்தால் நமக்குச் சாதகமாகப் பயன் படுவாள்.... ஷியாமாவின் கடிகாரத்தைப் பரிசளித்ததும் அதற்குத் தானே......

கதவை யாரோ தட்டுகிறார்கள்.

வின்பி! என்ன இது? இந்த நேரத்தில்?

குமார்! எனக்குப் பயமாயிருக்கிறது இதோ பாருங்கள்!

வின்பி! குமாருடன் உனக்கும் டெஸிமோவுக்கும் சம்பந்தம் வேண்டாம்!

எனக்காக கிலன்மார்க்கில் காத்திருந்தது, இந்தக் கடிதம் குமார்!

அப்படியானல் உன் அப்பா என்னைக் காண நாளை வரமாட்டார்!

அது தானே இல்லை! முன்னிலும் தீவிரமாயிருக்கிறாரே, உங்களைச் சந்திப்பதில்!

குமார்! நீங்கள் திரும்பிப் போய் விடுங்கள்! உங்களுக்கு ஏதேனும் நேர்ந்தால் என்னால் தாளவே முடியாது!

கோழையா நான்? இதோ பார்! என்னை ஆபத்து சூழ்ந்தால் இந்தத் தந்தியை ஷியாமாவுக்கு அனுப்பி விடு!

ஷியாமாவா? யார் அது?

ஷியாமா.....
கயிறு இறுகுகிறது...
குமார்

என்... என் தங்கை! சரி நீ போய் வா... தைரியமாயிரு!

அதே சமயத்தில் ......

கடிதம் கிடைத்ததா லின்யிக்கு?

கடிதத்தை எடுத்துக் கொண்டு அவன் குமாரிடம் தான் போனான்! என்ன துணிச்சல்!

உங்களிடம் அடி பட்டதால் ஆத்திர மடைந்து விட்டான் கிழவன்

ரஹீமை அடைத்து வைத்திருப்பது அவன் கோபத்தைக் கிளறி விட்டிருக்கிறது!

அதனால் இவனும் ரஹீமைப் போலவே துரோகியாக மாறி நம் ரகசியங்களை வெளியிடப் பார்க்கிறானோ? அயோக்கியன்!

இப்படி வாருங்கள்.....ரகசியம் புரிந்ததா?..

மறு நாள் காலையில்

சரியாக மணி எட்டு ... அதோ டெனிமோவும் வந்து விட்டான்!

குமார்! வா! நடந்தபடியே பேசலாம்.....

ஆ! ஐயோ!!

தொடரும்

பிரபல பல்வைத்திய நிபுணர்கள் நிரூபித்துள்ளனர்

# கால்கேட் குளோரோபில்




## ஈறுகளை பலப் படுத்து கிறது

**வாய் நாற்றத்தை அதி தீவிரமாய் ஒழிக்கிறது!** "ஆஸ்மோஸ்கோப்" பரிசோதனைகளில், கால்கேட் குளோரோபில் டூத்பேஸ்ட், வேறெந்த சாதாரண பற்பசையைவிட மிகத்தீவிரமாக வாய் நாற்றத்தை ஒழிக்கிறது என்பது நிரூபணமாயுள்ளது.

**சொத்தையாக்கும் கிருமிகளை ஒழிக்கிறது!** கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை ஒவ்வொரு முறையும் சாப்பிட்டவுடன் தேய்ப்பதால், பற்களை சொத்தையாக்கும் கிருமிகள் அழிகின்றன.

கால்கேட்டின் பிரத்தியேகமான சேர்க்கை முறையைக் கொண்டு குளோரோபில்லின் பூரண பலனை அடையுங்கள்.... கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்ட் அல்லது கால்கேட் குளோரோபில் டூத் பவுடர் வாங்குங்கள்!

கால்கேட் குளோரோபில் டூத் பேஸ்டை தினமும் தேய்ப்பதால், தீவிரமான குளோரோபில்லின் பூரண தன்மையை அடைந்து, ஈறுகள் உறுதியாகவும் ஆரோக்கியமாகவும் இருக்க ஏதுவாகிறது. உன்னதமான இந்த குளோரோபில் டூத்பேஸ்ட், சிறந்த பற்பசை, பற்பொடி முதலியவை தயாரிப்பதில் மிக்க அனுபவங்கொண்ட உலகிலே மிகப்பெரிய ஸ்தாபனத்தாரால் தயாரிக்கப்படுகிறது!

வேறு எந்த பற்பசையிலும் இதைவிட அதிக வீரிய குளோரோபில் இல்லை — குழந்தைகள் அதன் பெப்பர்மின்ட் வாசனையை மிகவும் விரும்புகிறார்கள்!







பெரிய எக்கானமி சைஸ் லாபகரமானது!

CTPA-G-10 TAM.

# மணிபல்லவம்

## 34 - திருநாங்கூர் அடிகள்

பூம்புகாரின் ஆரவாரமும், வாழ்க்கை வேகமும், சோழர் பேரரசின் தலைநகரமென்ற பெருமையும், நாங்கூருக்கு இல்லாவிட்டாலும் அமைதியும் அழகும் கூடியதாயிருந்தது அந்தச் சிறுநகரம். எங்கு நோக்கினும் பசும்புல் வெளிகளும், வெறுமண் தெரியாமல் அடர்ந்த நறுமண மலர்ச் சோலைகளும், மரக்கூட்டங்களுமாகப் பசுமைக் கோலங் காட்டியது அந்த ஊர். வெயில் நுழையவும் முடியாத பசுமைக்குள் மறைந்திருந்த அழகு காரணமாக நாங்கூருக்குப் 'பொழில் நகரம்' என்றே சோழ நாட்டுக் கவிஞர்கள் புகழ்ப் பெயர் சூட்டியிருந்தார்கள்.

நாங்கூரின் வீரப் பெருமைக்குக் காரணமாயிருந்தவர்கள் அங்கு வாழ்ந்து வந்த வேளிர்கள் என்றால் ஞானப் பெருமைக்குக் காரணமாயிருந்தவர் 'பூம்பொழில் நம்பி' என்னும் பெரியவரே ஆவார். பூம்பொழில் நம்பியைத் திருநாங்கூர் அடிகள் என்ற பெயரில் சோழ நாடெல்லாம் அறியும். சமய நூல்களிலும், தத்துவ ஞானத்திலும், பழுத்துப் பண்பட்ட குணக்குன்று அவர். காவிரிப் பூம்பட்டினத்திலிருந்து தொடங்கி நாங்கூருக்குச் செல்லுகிற பெருவழி அவ்வூர் எல்லையுள் நுழையுமிடத்தில் பூம்பொழில் என்றொரு குளிர்ந்த சோலை இருந்தது. அந்தச் சோலையில்தான் முதுபெருங் கிழவரும், துறவியுமாகிய நாங்கூர்

நா. பார்த்தசாரதி

அடிகள் வசித்து வந்தார். வயதும், உடலும், அறிவும் முதிர்ந்திருந்தாலும் கபடமில்லாத குழந்தைமனம் கொண்டவர் திருநாங்கூர் அடிகள். சோழ நாட்டில் அந்த நாட்களில் சென்ற இடமெல்லாம் வெற்றிக்கொடி நாட்டிக்கொண்டிருந்த சமயவாதிகளும், அறிஞர்களும், புலவர் பெருமக்களும், தம்முடைய மாணவர்கள் என்பதை உணர்ந்திருந்தும் அதற்காக அடிகள் இறுமாப்பு அடைந்ததே யில்லை நேரில் தம்மைப் புகழுவோரிடம் எல்லாம், "இயற்கை தான் பெரிய ஆசிரியன்! அதனிடமிருந்து நான் எவ்வளவோ கற்றுக் கொண்டேன். இன்னும் எவ்வளவோ கற்றுக்கொள்ள வேண்டும். இந்தப் பூம்பொழிலில் எத்தனையோ நாட்களாகச் செடிகள் தளிர் விடுகின்றன, அரும்புகின்றன, பூக்கின்றன. ஆனாலும் ஒவ்வொரு நாளும் இவை எனக்குப் புதுமையாகவே தோன்றுகின்றன. கண்களிலும், மனத்திலும், சலிப்புத் தோன்றாமல் பார்த்து நினைத்து உணர்ந்தால் இயற்கையே பெரிய ஞானம்தான்" என்று குழந்தையைப் போல் சிரித்துக்கொண்டே கூறுவார். தமது பூம்பொழிலில் ஏதாவது ஒரு செடியில் புதிய தளிரையோ, புதிய அரும்பையோ, பார்த்துவிட்டால் அவருக்கு ஏற்படுகிற ஆனந்தம் சொல்லி முடியாது. வித்தூன்றியிருந்த புதுச்செடி முளைத்தாலும் அவருக்குத் திருவிழாக் கொண்டாட்டம்தான். அப்படிப் புதுத் தளிரையும், புது அரும்பையும், புதுச் செடியையும் பார்த்துத் தாம் பேரானந்தம் அடைகிறபோது அருகில் இருப்பவர்கள் வாளாவிருந்தால் "உலகத்துக்குப் புதிய அழகு ஒன்று உண்டாகியிருக்கிறது! அதைப் பார்த்து ஆனந்தப்படத் தெரியாமல் நிற்கிறீர்களே? உலகம் உம்முடைய வீடு ஐயா! உம்முடைய வீட்டில் அழகுகள் புதிது புதிதாகச் சேர்ந்தால் உமக்கு அவற்றை வரவேற்று மகிழத் தெரிய வேண்டாமா?" என்று உணர்ச்சியோடு கூறுவார் அவர். இயற்கை! இயற்கை! என்று புகழ்ந்து போற்றுவது தான் அவருக்குப் பேரின்பம்.

எண்ணிலாத மலர்கள் மலரும் அவ்வளவு பெரிய பூம்பொழிலில் அடிகள் ஒரு பூவைக்கூடக் கொய்வதற்கு விடமாட்டார். யாரும், எதற்காகவும், அங்கேயுள்ள பூக்களைப் பறிக்கக்கூடாது. "பூக்கள் இயற்கையின் முகத்தில் மலரும் புன்னகைகள். அந்தப் புன்னகைகளை அழிக்காதீர்கள். அவை சிரிக்கட்டும், சிரித்துக் கொண்டே மணக்கட்டும்" என்று அழகாக உருவகப்படுத்திக் கூறுவார். எத்தனை அரும்பு கட்டினாலும், எத்தனை பூப்பூத்தாலும், எத்தனை முறை மணந்தாலும், ஒரே அளவில் அரும்பு கட்டி ஒரேவித உருவில் மலர்ந்து, ஒரே வகை மணத்தைப் பரப்பும் தனித்தனிப் பூக்களைப் போல் எப்போது பேசினாலும், எதைப் பற்றிப் பேசினாலும் சொற்கள் மலரக் கருத்து மணக்கப் பேசும் வழக்கமுடையவர் அடிகள். பட்டு நூலில் துளையிட்ட முத்துக்கள் ஒவ்வொன்றாய் நழுவி இறங்கிச் சேர்ந்து கோத்துக் கொண்டு ஆரமாக ஒன்று படுவது போல் அவருடைய வாயில் சொற்கள் பிறப்பதும், இணைவதும், பொருள் படுவதும், தனி அழகுடன் இருக்கும். மல்லிகைச் செடியில் பூக்கும் எல்லாப் பூக்களுக்கும் மல்லிகைக்கே உரியதான மணம் இருப்பதைப் போல் நாங்கூர் அடிகளின் ஒவ்வொரு சொல்லுக்கும் அவருடைய நாவில் அது பிறந்ததென்பதாலேயே ஓர் அழகு இருப்பதுண்டு.

சிறப்பு வாய்ந்த இத்தகைய ஆசிரியர் பெருமகனாரைச் சந்திக்கச் செல்வதில் எந்த மாணவருக்குத்தான் இன்பமிருக்காது? நீராட்டு விழாவுக்கு முதல் நாள் காலையிலேயே காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து நாங்கூருக்குப் புறப்பட்டிருந்த நீலநாகமறவர் அந்தி மயங்கும் போதில் நாங்கூர் அடிகளின் பூம்பொழிலை அடைந்துவிட்டார். கூட்டடையும் பறவைகளின் ஒலியும் நாங்கூர் அடிகளின் மாணவர்கள் பாடல்களை இரைந்து பாடி மனப்பாடம் செய்யும் இனிய குரல்களும் அப்போது பூம்பொழிலில் ஒலித்துக் கொண்டிருந்தன

நீலநாக மறவர் பொழிலுக்கு வெளியிலேயே தம்முடைய தேரை நிறுத்தி விட்டுக் கீழே இறங்கி மேலாடையை இடுப்பில் கட்டிக் கொண்டு பயபக்தியோடு உள்ளே நடந்து சென்றார். கவசமும், வாளும் அணிந்து படைக்கலச்சாலையின் எல்லைக்குள் கம்பீரக் காட்சியளிக்கும் நீலநாகமறவர் இப்போது எளிய கோலத்தில் தம் ஆசிரியரைத் தேடி வந்திருந்தார் அவர் உள்ளே சென்றபோது ஆசிரியராகிய நாங்கூர் அடிகள் அந்தப் பூம்பொழிலிலே இருந்ததொரு பொய்கைக் கரைமேல் அமர்ந்து நீர்ப்பரப்பில் மலர்ந்து கொண்டிருந்த செங்குமுத மலரைப் பார்த்துக் கொண்டிருந்தார் நீரின்மேல் தீ மலர்வதுபோல் செந்நிறத்தில் அழகாக மலரும் அந்தப் பூவின்மேல் அவருடைய கண்கள் நிலைத்திருந்தன.

தமக்குப் பின்னால் யாரோ மெல்ல நடந்து வரும் ஓசை கேட்டும் அவர் கவனம் கலைந்து திரும்பவில்லை. அவருக்கு ஒவ்வோர் அநுபவமும் ஒரு தவம்தான்.

எதில் ஈடுபட்டாலும் அதிலிருந்து மனம் கலையாமல் இணைந்துவிட அவருக்கு முடியும். பூவின் எல்லா இதழ்களும் நன்றாக விரிந்து மலர்ந்த பின்புதான் அவர் திரும்பிப் பார்த்தார். அதுவரையில் அவருக்குப் பின்புறம் அடக்க ஒடுக்கமாகக் காத்து நின்ற நீலநாகமறவர், "அடியேன், நீலநாகன் வந்திருக்கிறேன்" என்று கூறிக்கொண்டே அவருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கினார்.

"வா அப்பா! வந்து வெகுநேரம் காத்துக் கொண்டிருந்தாயோ? நான் இந்தப் பூவில் தெய்வத்தைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அப்படியே தியானத்திலும் ஆழ்ந்து விட்டேன். பூ, காய், பழம், வித்து, மரம், செடி, கொடி, மலை, கடல், எல்லாமே தெய்வம்தான்! அவைகளைத் தெய்வமாகப் பார்ப்பதற்குப் பழக்கப்படுத்திக் கொண்டால் நிற்குமிடமெல்லாம் கோவில்தான். நினைக்குமிடமெல்லாம் தியானம்தான். பார்க்குமிடம் எல்லாம் பரம்பொருள் தான். இவையெல்லாம் உனக்கு வேடிக்கையாயிருக்கும் நீலநாகா! இத்தனை முதிர்ந்த வயதில் இப்படி நேரமில்லாத நேரத்தில் மரத்தடியிலும், குளக்கரையிலும், கிடக்கிறேனே என்று நீ என்னை எண்ணி வருத்தப்பட்டாலும் படுவாய்! ஆனால் எனக்கென்னவோ வயதாக ஆக இந்தப் பித்து அதிகமாகிக் கொண்டு வருகிறது. எங்கு பார்த்தாலும், எதைப் பார்த்தாலும் தெய்வமாகத் தெரிகிறது. எந்தச் சிறு அழகைப் பார்த்தாலும் தெய்வத்தின் அழகாகத் தெரிகிறது. தளிர்களில் தெய்வம் அசைகிறது. மலர்களில் தெய்வம் சிரிக்கிறது. மணங்களில் தெய்வம் மணக்கிறது."



இவ்வாறு வேகமாகச் சொல்லிக் கொண்டு வந்த அடிகள் முதுமையின் ஏலாமையால் பேச்சுத் தடையுற்று இருமினார்.

"இந்தக் காற்றில் இப்படி உட்கார்ந்திருந்தது உங்கள் உடலுக்கு ஒத்துக் கொள்ளவில்லை, ஐயா! வாருங்கள். உள்ளே போகலாம்" என்று அவருடைய உடலைத் தாங்கினாற் போல் தழுவி உள்ளே அழைத்துக்கொண்டு சென்றார் நீலநாக மறவர்

அடிகளின் தவக்கூடத்துக்குள் சென்று அமர்ந்த பின் அவர்கள் உரையாடல் மேலே தொடர்ந்தது. நீலநாகமறவர் அடிகளிடம் வேண்டிக் கொண்டார்:-

"ஐயா! சென்ற ஆண்டு இந்திரவிழாவின்போது தங்களைச் சந்தித்தபின் மறுபடியும் எப்போது காண்போம் என்ற ஏக்கத்திலேயே இத்தனை நாட்களைக் கடத்தினேன். பூக்களிலும், தளிர்களிலும், தெய்வத்தைக் கண்டு மகிழ்கிற உங்களிடமே தெய்வத்தைக் காண்கிறேன் நான். எனக்கு என்னென்ன கூற வேண்டுமோ அவ்வளவும் கூறியருளுங்கள். அடுத்த இந்திரவிழா வருகிற வரை இப்போது தாங்கள் அருளுகிற உபதேச மொழிகளிலேயே நான் ஆழ்ந்து மகிழ வேண்டும்."

இதைக் கேட்டு நாங்கூர் அடிகள் நகைத்தார். நகைத்தபடியே நீலகநாக மறவரின் முகத்தை உற்றுப் பார்த்தார்.

"இத்தனை வயதுக்குப் பின்பு இவ்வளவு மூப்பு அடைந்தும் நீ என்னிடம் உபதேசம் கேட்க என்ன இருக்கிறது, நீலநாகா? உனக்கு வேண்டியதை யெல்லாம் முன்பே நீ என்னிடமிருந்து தெரிந்து கொண்டு விட்டாய். உன்னைப்போல் பழைய மாணவர்களுக்கு இப்போது நான் கூறுவதெல்லாம் நட்புரைதான். அறிவுரை அல்ல. ஆனால் ஒரு பெரிய ஆசை எனக்கு இருக்கிறது. என்னுடைய எண்ணங்களை யெல்லாம் விதைத்து விட்டுப் போக ஒரு புதிய நிலம் வேண்டும். அந்த நிலம் மூப்படையாததாக இருக்க வேண்டும். நெடுங்காலம் விளையவும், விளைவிக்கவும் வல்லதாக இருக்க வேண்டும்."

"எனக்குப் புரியவில்லை, ஐயா! இன்னும் தெளிவாகக் கூறலாமோ?"

"காவியத்துக்கு நாயகனாகும் குணங்கள் நிறைந்த முழு மனிதனைக் கவிகள் ஒவ்வொரு கணமும் தேடிக் கொண்டிருப்பதுபோல் என் ஞானத்தை நிறைத்து வைக்க ஓர் இளம் மாணவனைத் தேடிக் கொண்டிருக்கிறேன் நான்."

இதைச் சொல்லும்போது நாங்கூர் அடிகளின் குழிந்த கண்களில் ஆவல் ஒளிரும் சாயல் தெரிந்தது. ஏக்கமும் தோன்றியது.

அடிகளிடம் வெகு நேரம் தத்துவங்களையும், ஞான நூல்களையும் பற்றிப் பேசிவிட்டு இறுதியாகக் காவிரிப்பூம் பட்டினத்து நிகழ்ச்சிகளையும் கூறினார் நீலநாகமறவர். அருட்செல்வ முனிவர் மறைவு, அவர் வளர்த்த பிள்ளையாகிய இளங்குமரன் இப்போது தன் ஆதரவில் இருப்பது, எல்லாவற்றையும் அடிகளுக்கு விவரித்துக் கூறியபோது அவர் அமைதி

---

## இக்கால இல்லங்களிலே ஸர்ப்...





### "எதற்காகக் காத்திருந்தேனோ அந்த மாறுதல்..."

என்கிறார் பம்பாயிலுள்ள சமூக ஊழியரான ஸ்ரீமதி நொரீன் அமோலிக்.

'குடித்தனம் நடத்துவதற்காக ஏராளமான பெண்மணிகள் காலத்துக்கேற்ற புதுப்புது முறைகளை மேற்கொள்வதைப் பார்க்கிறேன்.

'எடுத்துக்கொள்ளுங்களேன் ஸர்ப். அன்றாட சலவைக்கு அது எத்தகைய பேருதவி என்பதை அனுபவத்தில் அறிந்தவள் நான்' என்கிறார் அவர்.

எளிதான வேலையோடு, எடுப்பான வெளுப்பு...எனவே, சட்டை, சேலை, பாவாடை....எதுவானாலும் சரி, எல்லாத் துணிமணிகளுக்கும் நான் ஸர்ப் உபயோகிப்பதில் வியப்பில்லை.

இக்கால மாதரின் தீர்ப்பு... ஆற்றல் மீறிய ஸர்ப், அழுக்கை அறவே அகற்றி, வெண்மைக்கு ஒப்பற்ற வெண்மை அளிக்கிறது. உங்கள் வீட்டுத் துணிகளுக்கு உகந்தது ஸர்ப்!

Surf

## ஸர்ப் மூலம் உங்களுக்கு வெள்ளைவெளேரென்ற சலவை

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

SU. 17-X52 TM

யாகக் கேட்டுக் கொண்டு வந்தார். நீலநாகமறவர் யாவற்றையும் கூறி முடித்தபின், "நீ இப்பொழுது கூறிய இளங்குமரன் என்னும் பிள்ளையை ஒரு நாள் இங்கு அழைத்துவர முடியுமா நீலநாகா?" என்று மெல்லக் கேட்டார் நாங்கூர் அடிகள்.

அவர் என்ன நோக்கத்தோடு அப்படிக் கேட்கிறார் என்று விளங்கிக் கொள்ள இயலாவிடினும் நீலநாகமறவர் இளங்குமரனை ஒரு நாள் அவரிடம் அழைத்து வர இணங்கினார்.

மறுநாள் இரவு நீலநாகமறவர் திருநாங்கூரிலிருந்து காவிரிப்பூம்பட்டினம் திரும்பும்போது அடிகள் மீண்டும் முதல் நாள் தாம் வேண்டிக் கொண்ட அதே வேண்டுகோளை வற்புறுத்திக் கூறினார்.

"என்ன காரணமென்று எனக்கே சொல்லத் தெரியவில்லை, நீலநாகா! அந்தப் பிள்ளை இளங்குமரனை நான் பார்க்க வேண்டும்போல ஒரு தாகம். நீ அவனைப் பற்றிச் சொன்னவுடன் என்னுள் கிளர்ந்தது. மறந்து விடாமல் விரைவில் அவனை அழைத்து வா."

இளங்குமரனுடைய வீரப் பெருமைக்கு ஆசிரியரான நீலநாகமறவர் இப்போது அந்த இளைஞனின் வாழ்வில் இன்னும் ஏதோ ஒரு பெரிய நல்வாய்ப்பு நெருங்கப் போகிறதென்ற உணர்வுடன் திருநாங்கூரிலிருந்து திரும்பினார்.

# 35 - தெய்வமே துணை!

நீரில் மூழ்கிவிட்ட அந்தப் பெண் யாராயிருந்தாலும் அவளைக் காப்பாற்ற வேண்டும் என்னும் உறுதியான எண்ணத்துடன் இரு கரையும் நிரம்பிடப் பொங்கிப் பெருகிஓடும் காவிரிப்புனலிலே இளங்குமரன் தன்னுடைய நீண்ட கைகளை வீசி நீந்தினான். கரையிலிருந்து பார்த்த போது அவள் இன்ன இடத்தில் மூழ்கியிருக்க வேண்டுமென்று குறிப்பாகத் தெரிந்த கவடும் இப்போது தெரியவில்லை. மூழ்கிய பெண்ணைப் பற்றிய கவலையே இல்லாமல் வாயில் அடக்கிய அவலோடும் தங்கள் திறமையை நிரூபிக்கும் ஆசையோடும் மற்றப் பெண்கள் நீந்தி முன்னேறிக் கொண்டிருந்தார்கள்.

மிக அருகில் நேர் கிழக்கே கடலோடு கலக்கப் போகும் ஆவலுடன் ஓடிக் கொண்டிருந்த காவிரியில் நீரோட்டம் மிகவும் வேகமாகத்தான் இருந்தது. தேங்கி நிற்கும் நீர்ப்பரப்பாயிருந்தாலாவது மூழ்கியவளின் உடல் மிதந்து மறைவதை எதிர்பார்க்கலாம். ஒருவேளை நீரோட்டத்தின் போக்கில் கிழக்கே சிறிது தொலைவு அந்தப் பெண் இழுத்துக் கொண்டு போகப்பட்டிருப்பாளோ என்ற சந்தேகம் இளங்குமரனுக்கு ஏற்பட்டது. உடனே அவள் மூழ்கின துறைக்கு நேரே கிழக்குப் பக்கம் சிறிது தொலைவு வரை நீந்தினான். இளங்குமரன் நினைத்தது வீண் போகவில்லை. அவன் நீந்திக் கொண்டிருந்த இடத்திலிருந்து ஒரு பனைத் தூரத்தில் விரிந்த கருங்கூந்தலோடு எழுந்தும் மூழ்கியும் தடுமாறித் திணறும் பெண்ணின் தலை ஒன்று தெரிந்தது. கணத்துக்குக் கணம் அந்தத் தலைக்கும் அவனுக்கும் இடையிலிருந்த நீர்ப்பரப்பின் தொலைவு அதிகமாகிக் கொண்டு வந்தது. அவன் தன் ஆற்றலையெல்லாம் பயன்படுத்தி எவ்வளவோ வேகமாக நீந்தியும்கூட விரைந்தோடும் நீரின் ஓட்டம் அவளை இன்னும் கிழக்கே இழுத்துச் சென்று கொண்டிருந்தது.

கடலும் காவிரியும் கலக்குமிடம் நெருங்க நெருங்க ஆழமும், அலைகளும் அதிகமாயிற்றே என்று தயங்கினாலும் இளங்குமரன் தன் முயற்சியை நிறுத்திவிடவில்லை.

'பூம்புகார்போல் பெரிய நகரத்தில் மனிதர்கள் ஒருவருக்கொருவர் உதவிக் கொள்வதற்கே வாய்ப்புக்கள் குறைவு. அப்படியிருந்தும் அரிதாக ஏற்பட்ட ஓர் உதவியைச் செய்யாமல் கைவிடலாகாது' என்பதுதான் அப்போது இளங்குமரனின் நினைப்பாக இருந்தது. முகம் தெரியாத அந்தப் பெண்ணைக் காப்பாற்றிக் கரை சேர்த்து அவளுடைய பெற்றோரிடம் ஒப்படைக்கும்போது அவர்கள் அடையும் மகிழ்ச்சியைக் கற்பனைசெய்துகொண்டே பாய்ந்து நீந்தினான் அவன். நகரத்து மக்களெல்லாம் மகிழ்ச்சியோடு நீராட்டு விழா முடிந்து திரும்பும்போது, பெண் காவிரியில் மூழ்கி மாண்டதற்காக அழுது புலம்பும் பெற்றோருடைய ஓலம் ஒன்றும் காவிரிக் கரையில் ஒலிக்கக் கூடாது என்பதுதான் அவன் ஆசை.

இதோ அந்த ஆசையும் நிறைவேறிவிட்டது. அருகில் நெருங்கி அவளுடைய கூந்தலை எட்டிப் பிடித்து விட்டான் இளங்குமரன். அவளுடைய கூந்தல் மிகப் பெரிதாக இருந்ததனால் அவளை இழுத்துப் பற்றிக்கொள்ள இளங்குமரனுக்கு வசதியாயிருந்தது. தன் உட-

லோடு, இன்னோர் உடலின் கனமும் சேரவே நீந்தவிடாமல் நீரோட்டம் அவனை இழுத்தது. மேகக் காடுபோல் படர்ந்து நறுமணத் தைலம் மணக்கும் அந்தப் பெண்ணின் கூந்தல் அவனுடைய முகத்தை மறைத்ததோடன்றி அவனுடைய கண்களிலும் வாயிலும் சரிந்து விழுந்து தொல்லை கொடுத்தது. எதிரே பார்த்து நீந்த முடியவில்லை அவளையும் காப்பாற்றி அவனும் பிழைத்துக் கரையேற வேண்டுமானால் கிழக்குப் பக்கம் நீந்திப் பயனில்லை. நீரோட்டத்தை எதிர்த்து மேற்குப் பக்கம் நீந்தினால்தான் காவிரித் துறைகளில் ஏதாவதொன்றின் அருகே கரையேறி மீள முடியும். கிழக்கே போகப்போகக் கடல் நெருங்கிக் கொண்டிருந்தது. நீரும் உப்புக் கரிக்கத் தொடங்கியது. ஆழம் அதிகமாவதோடு முதலைகளினால் பெரும் எதிர்ப்பும் கிழக்கே போகப் போக மிகுதியாகிவிடுமே என்று எண்ணி நடுக் காவிரியில் தத்தளித்தான் இளங்குமரன். செய்வதற்கு ஒன்றும் தோன்றவில்லை.

இந்தச் சமயம் பார்த்து மழையும் பெரிதாகப் பெய்யத் தொடங்கியிருந்தது. நாற்புறமும் பனி மூடினாற்போல மங்கலாகத் தெரிந்ததே தவிர ஒன்றும் தெளிவாகக் காண முடியவில்லை. மேகங்கள் தலைக்குமேல் தொங்குவது போலக் கவிந்துகொண்டன. காற்று வெறிகொண்டு வீசியது. அலைகள் மேலெழுந்து சாடின.

உயிர்களை எல்லாம் காக்கும் காவிரி அன்னை தன் உயிரையும், அந்தப் பேதைப் பெண்



ணின் உயிரையும் பலிகொள்ள விரும்பி விட்டாளோ என்று அவநம்பிக்கையோடு எண்ணினான் இளங்குமரன். நீரோட்டம் இழுத்தது. உடல் தளர்ந்தது. பெண்ணின் சுமை தோளில் அழுத்தியது. கால்கள் நிலை நீச்சும் இயலாமல் சோர்ந்தன. நம்பிக்கை தளர்ந்தது.

ஆனால் காவிரி அன்னை இளங்குமரனைக் கைவிட்டுவிடவில்லை. சிறிதளவு சோதனை தான் செய்தாள். கிழக்கு நோக்கி நீரோட்டத்தோடு நீரோட்டமாகக் கவனிப்பாரின்றி மிதந்து வந்த படகு ஒன்று இளங்குமரனுக்கு மிக அருகில் நெருங்கிச் சென்று கொண்டிருந்தது. படகில் யாரும் இருப்பதாகத் தெரியவில்லை. நீராட்டு விழா ஆரவாரத்தில் படகுக்குரியவர்களின் கவனத்தை மீறி அறுத்துக் கொண்டு வந்த அநாதைப் படகு போல் தோன்றியது அது. பலங்கொண்ட மட்டும் முயன்று ஒரு கையால்,



அந்தப் பெண்ணின் உடலைப் பற்றிக் கொண்டு இன்னொரு கையை உயர்த்திப் படகைப் பற்றினான் இளங்குமரன். நீரின் வேகம் அவனையும் படகையும் சேர்த்து இழுத்தது. அவனும் விடவில்லை. படகும் அவன் பிடித்த சுமை தாங்காமல் ஒரு பக்கமாகச் சாய்ந்தது. அரை நாழிகை நேரம் படகோடும், நீரோட்டத்தோடும் போராடி முயன்று எப்படியோ தன்னையும், அந்தப் பெண்ணையும் படகுக்குள் ஏற்றிக் கொண்டான் இளங்குமரன். படகுக்குள் ஏறிக் கொள்ள மட்டும்தான் அவனால் முடிந்ததே ஒழியக் கடலை நோக்கி ஓடும் படகை எதிர்த் திசையில் காவிரித் துறையை நோக்கி மறித்துச் செலுத்த முடியவில்லை. அப்போதிருந்த காற்றிலும், மழையிலும், நீர்ப்பிரவாகத்தின் அசுர வேகத்திலும் அப்படி எதிர்ப்புறம் படகைச் செலுத்துவது முடியாத காரியமாக இருந்தது. காவிரி கடலோடு கலக்கும் சங்க முகத்தை நோக்கி வெறி கொண்ட வேகத்தில் இழுத்துக்கொண்டு போயிற்று அந்தப் படகு. படகு சென்ற வேகத்தினாலும், அலைகளின் அசைப்பினாலும் உள்ளே கிடத்தியிருந்த பெண்ணின் தலை படகின் குறுக்கு மரச் சட்டத்தில் மோதி இடிக்கலாயிற்று. இளங்குமரனின் உள்ளம் இதைப் பொறுத்துக் கொள்ள முடியாமல் வருந்தியது. அந்தப் பெண்ணின் தலையை மெல்லத் தூக்கித் தன் மேலங்கியைக் கழற்றி மடித்து அவள் தலைக்கு அணைவாக வைத்தான். அவள் தலை மோதி இடிப்பது நின்றது.

பெருமழை பெய்யவே மழை நீர் படகில் சிறிது சிறிதாகத் தேங்கலாயிற்று. மிகச் சிறிய அந்தப் படகில் இருவர் சுமையுடன் நீரும் தேங்குவது எவ்வளவு பயப்படத்தக்க நிலை என்பதை எண்ணியபோது இளங்குமரன் தனக்கிருந்த சிறிதளவு நம்பிக்கையையும் இழக்கத் தொடங்கினான். மனம் உறுதி குன்றியது.

காவிரி கடலோடு கலக்குமிடம் நெருங்க நெருங்கப் படகின் ஆட்டம் அதிகமாயிற்று. அலைகளும் சுழிப்புக்களும் படகை மேலும் கீழும் ஆட்டி அலைத்தன. படகினுள்ளே தேங்கிய நீரை முடிந்தவரை அப்புறப்படுத்த முயன்றும் மேலும் மேலும் நீர் சேர்ந்து கொண்டிருந்தது. புயலில் உதிர்ந்த அரசிலையாகப் படகு அலைபட்டபோது, மனித நம்பிக்கைகள் குன்றியவனாக இரண்டு கைகளையும் மேலே தூக்கிக் கூப்பினான் இளங்குமரன். "பூம்புகாரைக் காக்கும் தெய்வமே! சம்பாபதித் தாயே! என்னையும் இந்த அபலைப் பெண்ணையும் காப்பாற்று. நான் இன்னும் நெடுங்காலம் வாழ ஆசைப்படுகிறேன். என்னை அழித்து விடாதே. என் ஆசைகளை அழித்துவிடாதே" என்று மனமுருக வேண்டிக் கொள்வதைத் தவிர, வேறு முயற்சி ஒன்றும் அப்போது அவனுக்குத் தென்படவில்லை.

(தொடரும்)

# உங்கள் அழகை அதிகரிக்கிறது பாதுகாக்கவும் செய்கிறது!

அற்புத நறுமண மூட்டப்பட்ட சார்மிஸ் ஸ்னோ உங்கள் சருமத்தை அழகுறச் செய்கிறது, பாதுகாக்கிறது. எல்லா பருவ காலங்களிலும் சருமத்தை மிருதுவாகவும் வெல்வெட் போல வழவழப்பாகவும் வைக்கிறது. பவுடருக்கு ஆதாரமானது. எண்ணெய்ப்பசையில்லாதது. சார்மிஸ் ஸ்னோ சொறசொறப்பும், வரிகளும், கோடுகளும், புண்களும் ஏற்படாமல் சிறந்தமுறையில் தடுக்கிறது. பூச்சிக் கடிகள், வெடிப்புகளிலிருந்தும் பாதுகாக்கிறது.






## சார்மிஸ் ஸ்னோ

ஒரு காலகேட் உயர்தர சரக்கு

CS6/3R

# பருக்கள் தீராத பிரச்னையாயிருந்தன...










சரும உபாதைகளை சீக்கிரம் குணமாக்குவது லிச்சென்ஸா




எல்லா கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்

DZ-929 TM

**வா**ல்பேட்டை பட்டணத்தில் எங்கோ ஒரு மூலையிலிருக்கும் சேரி. அந்தப் பேட்டைக்குச் சரித்திர முக்கியத்துவம் எதுவும் இருப்பதாகக் குப்பன் கேள்விப்பட்டதில்லை. அப்படியொரு பிரபலம் அதற்குக் கிடைக்கும் என்று அவன் எண்ணியதுமில்லை. ஆனால் அந்த அதிசயம் திடீரென்று அவன் காலத்தில் அவன் கண் காண நடந்தது. குப்பன் அந்தப் பேட்டைவாசிதான்.

அன்று காலையில் தூங்கி விழித்துத் தன் குடிசை வாசலுக்கு வந்த குப்பன் ஒரு புதுக் காட்சியைக் கண்டான். அவனுடைய வீட்டருகேயிருந்த மைதானத்தில் சில பெரிய மனிதர்கள் நின்றுகொண்டிருந்தனர். அங்கே கீற்றுக் கொட்டகை ஒன்று வேகமாக உருவாகிக் கொண்டிருந்தது. கொட்டகை வேலை முடிந்ததும், உயர்தரக் கட்டில், பஞ்சணை மெத்தை, சாய்வு நாற்காலி போன்ற பொருட்கள் அங்கு கொண்டு வரப்பட்டன.

குப்பனுக்கு முதலில் ஒன்றும் புரியவில்லை. பக்கத்திலிருந்த ஒருவரிடம் விசாரித்தான்.

'பிரபல தலைவர் ரத்தினசாமி இந்தக் கொட்டகையில் உண்ணாவிரதம் இருக்கப் போகிறார்' என்று அவர் அவனுக்குச் செய்தியைத் தெரிவித்தார்.

குப்பனுக்கு ஆச்சரியமாக இருந்தது. பட்டினி கிடப்பதற்கு இவ்வளவு ஆர்ப்பாட்டமா? பாவம், அவனுக்கு அரசியல் ஒன்றும் தெரியாது. அதனால் அவனுக்கு அந்த விஷயம் ரொம்பச் சாதாரணமாகத் தோன்றியது. ஆனால் குப்பனின் எண்ணங்களுக்கு முற்றிலும் மாறாகக் காரியங்கள் 'ஜே ஜே'யென்று நடந்தேறின.

குப்பனுக்குக் கூட 'இது ரொம்பப் பெரிய விஷயம் போலிருக்கிறது' என்ற எண்ணம் தோன்ற ஆரம்பித்து விட்டது.

உண்ணாவிரத ஆரம்ப விழா மிகச் சிறப்பாக நடந்தது. பிரசங்கி ஒருவர் வெகு ஆவேசமாகப் பேசினார். ....'நம் நாட்டிலிருக்கும் லட்சக்கணக்கான ஏழைகளின் பட்டினி தீரும்வரையில் கால வரம்பின்றி நம் மதிப்புக்குரிய தலைவர் ரத்தினசாமியவர்கள் உண்ணாவிரதம் இருக்கத் தீர்மானித்திருக்கிறார்கள்' என்று அவர் எடுத்துரைத்தபோது கரகோஷம் வானைப் பிளந்தது.

குப்பனுக்கும் அதைக் கேட்டதும் உடல் புல்லரித்தது. உண்மையில், அவன் முந்திய நாளிலிருந்து பட்டினி. மூன்று நாட்களாக வேலை கிடைக்கவில்லை. தன்னைப் போன்றவர்களின் பட்டினியைப் போக்க உண்ணாவிரதம் இருக்க முன்வந்திருக்கும் மகானை அவன் நன்றியுடன் பார்த்தான். அவனுக்கு அவர் ஓர் அவதார புருஷராகவே தோன்றினார்.





மனைவி : இதென்ன நோயாளியை வீட்டுக்குத் தூக்கி வருகிறீர்கள்?
டாக்டருக்குப் படிக்கும் மாணவர் : ஆஸ்பத்திரி டாக்டர் எனக்கு 'ஹோம் ஒர்க்' கொடுத்திருக்கிறார். வீட்டுக்கு இந்த நோயாளியை எடுத்துக்கொண்டு போய்ப் பரிசோதனை செய்து நாளைக்கு வந்து என்னிடம் சொல் என்றார்...!

இரவில் கூட்டம் அநேகமாகக் கலைந்து விட்டது. சிலர் மட்டுமே தலைவருக்குத் துணையாக அங்கு தங்கினர். அவர்கள் தலைவருக்கு ரொம்பவும் வேண்டியவர்களாக இருக்கலாம்.

குப்பனுடைய 'வீட்டுக்காரி' அவனோடு சண்டை பிடித்துக் கொண்டு 'ஆயி' வீட்டுக்குப் போய்விட்டாள். அவனுக்கும் அக்கடா வென்றுதான் இருந்தது. இல்லாவிட்டால் இப்படி வேலை கிடைக்காமல் கஞ்சிக்கு வழியற்றுக் கிடக்கும்போது 'மொல்லு மொல்லு' என்று சண்டைக்கு வந்துவிடுவாள். பட்டினி என்றாலும் நிம்மதியான பட்டினி இப்போது. அந்தக் குடிசையில் ஏகாந்தமாக முடங்கிக் கிடப்பதைவிட இந்த மகானுடைய அருகில் இருப்பது நல்லது என்று தோன்றவே, குப்பனும் அந்தக் கொட்டகையருகே உட்கார்ந்து விட்டான்.

வெகுநேரம் வரையில் பேசிக் கொண்டிருந்து விட்டு, எல்லாரும் படுக்கப் போய்விட்டனர். தங்கக் கூடியவர்களுக்கு ஏற்கெனவே கட்டில் வசதிகள் செய்யப்பட்டிருந்தன.

குப்பனும் அங்கே கிடந்த கீற்று ஒன்றை எடுத்துப் போட்டுத் தூக்கத்துக்குத் தயாரானான். அப்பொழுது திடீரென்று தலைவரின் பேட்டி அவனுக்குக் கிடைத்தது.

"யாரப்பா நீ?" வெளியே வந்த தலைவர் அவனைக் கண்டு கேட்டார்.

"நான்தான் குப்பனுங்க. அதோ இருக்குதே அதுதான் நம்ப குடிசை. ஐயாவைப் பற்றின பேச்சைக் காதிலே வாங்கின திலிருந்து ஐயா பக்கத்திலேயே பொழுதைப் போக்கணும்னு தோணிப் போச்சுங்க."

தலைவரின் தோள்கள் விம்மின. புன்னகையால் அவர் முகம் மலர்ந்தது. குப்பனைப் பற்றி வெகு அக்கறையாக விசாரித்தார். அவனும் உள்ளது உள்ளபடியே சொன்னான்.

"உன்னைப் போன்றவர்களின் கஷ்டத்தைப் போக்கவே என் வாழ்நாளை அர்ப்பணிக்கத் துணிந்து விட்டேன்" என்றார் தலைவர்.

குப்பனுக்குப் பரவசத்தால் கண்களில் நீர் அரும்பிவிட்டது.

இடையிடையே பசி கொஞ்சம் தொந்தரவு கொடுத்தாலும், அன்று வெகு மன நிறைவுடன் தூங்கினான் குப்பன். தலைவரின் அறிமுகமும் அபிமானமும் அவனுக்குக் கிடைத்து விட்டன. அவருடைய போராட்டம் வெற்றியடைந்ததும், அந்த வெற்றியால் விளையும் பலனை அனுபவிக்க அவனுக்கு முன்பந்தி உரிமை கிடைக்கும்!

மறுநாள், அதிகாலையிலேயே தலைவரைப் பார்க்கத் திரள் திரளாகக் கூட்டம் வர ஆரம்பித்தது. முந்திய நாள் அறிமுகத்தைக் கொண்டு, தலைவருக்கு அருகிலிருந்து பணிவிடை செய்யும் பாக்கியத்தைப் பெற்றிருந்தான் குப்பன். அதில் அவனுக்கு ஏகப் பெருமையாக இருந்தது.

எட்டு மணி சுமாருக்கு டாக்டர் ஒருவர் காரில் வந்து இறங்கினார். தலைவரைக் 'கண்டு' போக டாக்டர் வந்திருக்கலாம் என்று குப்பன் முதலில் நினைத்தான். ஆனால் டாக்டரோ தலைவரைப் பரிசோதனை செய்ய ஆரம்பித்தார்.

குப்பனுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய் விட்டது. பட்டினியாக இருந்தால் டாக்டரிடம் சோதனை செய்து கொள்ள வேண்டும் என்று அதுவரை அவனுக்குத் தெரியாது. அவனும் எத்தனையோ நாட்கள் பட்டினி கிடந்திருக்கிறான்; ஒருநாளும் டாக்டரிடம் சோதனை செய்து கொள்ளவில்லையே!

சிறிதுநேரக் குழப்பத்துக்குப் பின், தன்னுடைய பட்டினி வேறு, தலைவருடைய உண்ணாவிரதம் வேறாக இருக்கலாம் என்று எண்ணிக் கொண்டான்.

சோதனையை முடித்த டாக்டர் ஒரு பெரிய கல்லைத் தூக்கிப் போட்டார். "தலைவர் உடம்பு மோசமாகிக் கொண்டு வருகிறது!"

குப்பனுக்கு ரொம்பக் கவலையாகி விட்டது. ஓர் இரவு சாப்பிடாமல் இருந்ததிலேயே தலைவரின் உடம்பு மோசமாகிவிட்டதே!

ஆனால் தலைவர் அதைப் பற்றிக் கவலைப் பட்டதாகத் தெரியவில்லை. பேப்பரும் பேனாவுமாக நின்று கொண்டிருந்த இரண்டு மூன்று நபர்கள் ஏதோ குறித்துக் கொள்வதைப் பார்த்துப் புன்னகை புரிந்தார்.

"ஏதாவது திரவமாகவாவது ஆகாரம் எடுத்துக் கொள்ளுங்கள்" என்றார் டாக்டர்.

"இல்லை, டாக்டர்! என் கோரிக்கை நிறைவேறும் வரை பச்சைத் தண்ணீர் வாயில் விடப்போவதில்லை" என்று மறுத்துக் கூறிவிட்டார் தலைவர்.

பக்தி பரவசம் குப்பன் நெஞ்சில் பெருக்கெடுத்தது. தலைவர்தான் எவ்வளவு உயர்ந்த தியாகி!

உண்ணாவிரதம் தொடங்கி இருபத்துநான்கு மணி நேரம் ஆகிவிட்டது. இரவு வேளை,

தலைவர் நிலை உண்மையிலேயே மோசமாகி விட்டது. படுக்கையில் சாய்ந்து விட்டார். எழுந்து உட்காரத் தெம்பில்லை. பழக்கமில்லாத முயற்சியின் விளைவு.

இரவில் வெகு நேரமாகியிருக்கும். கொட்டகையில் தலைவரின் அத்யந்த நண்பர்களான ஓரிருவரைத் தவிர வேறு நபர் கிடையாது. குப்பனும் தலைவரருகேதான் இருந்தான். அப்பொழுது நண்பரொருவர் ஒரு டம்ளர் ஆரஞ்சுப் பழ ரசத்தை எடுத்து வந்து தலைவரருகே வைத்தார்.

தலைவர் பழ ரசத்தையும் அருகில் நின்ற குப்பனையும் மாறி மாறிப் பார்த்தார். பின் நண்பரிடம் 'வேண்டாம்' என்பது போல் சைகை காட்டி விட்டார்.

குப்பனால் வியப்பை அடக்க முடியவில்லை. யார்தான் இப்படி இருக்க முடியும்? ஆளை நடமாட்டமில்லாத அந்த நேரத்தில் ரகசியமாகத் தரப்பட்ட பானத்தையே மறுத்து விட்டாரே! கொள்கையில் எவ்வளவு பற்று! தன் வியப்பை வெளிப்படையாகவே தலைவரிடம் தெரிவித்து விட்டான்

"உங்களைப்போல் உடம்பைவிடக் கொள்கையைப் பெரிசாகநினைக்கிறவங்க இனிமேல் பொறந்தால் தான் உண்டு" என்றான்.



பழ ரசத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டவாறு வறட்டுச் சிரிப்பொன்று சிரித்தார் தலைவர். தலைவருடைய நண்பர் தம் முகத்தில் தோன்றிய சிரிப்பைப் பலவந்தமாக அடக்கிக் கொண்டு வெளியேறி விட்டார். பழ ரசம் அங்கேதான் இருந்தது.

அச்சமயம் பத்திரிகை நிருபர் ஒருவர் தலைவரைப் பேட்டி காண வந்தார். அவர் வெளியூர்க்காரராம். தலைவரின் உண்ணாவிரதம் பற்றி அவசரமாகச் செய்தி சேகரித்துத் தம் பத்திரிகைக்கு அனுப்ப அந்த இரவு நேரத்தில் வந்திருக்கிறார். அவர் தலைவரருகே யிருந்த பழ ரசத்தைப் பார்த்து விட்டு, "ஐயா, உண்ணாவிரதத்தை முடித்து விட்டீர்களா?" என்று கேட்டார்.

தலைவருக்கு நிருபரின் கேள்வியிலிருந்த பொருள் புரிந்து விட்டது. "அப்படியொன்றுமில்லை. நண்பர் ஒருவர் அந்தப் பழ ரசத்தை நான் வேண்டாமென்று தடுத்தும் வைத்து விட்டுப் போயிருக்கிறார். அவர்களுக்கு தம் உடம்பின் மேல் அக்கறை. நமக்குக் கொள்கை தானே முக்கியம்?" என்றார்.

பத்திரிகை நிருபர் பேட்டியை முடித்துக் கொண்டு போய் விட்டார். தலைவர் மீண்டும் கண்ணை மூடிக் கொண்டார்.

குப்பன் தலைவர் அருகே உட்கார்ந்திருந்தான். தூங்குவதாக எண்ணம் இல்லை. கண்கள் மூட மறுத்தன. காரணம், தலைவர் அருகேயிருந்த பழ ரசம்தான்!

லட்சியத்துக்காக உண்ணாவிரதம் இருக்கும் தலைவருக்கு அது வேண்டாதிருக்கலாம். ஆனால் வழியில்லாமல் பட்டினி கிடக்கும் குப்பன் அதைச் சாப்பிட்டால் என்ன? அவன் மனத்தில் சிறு குறுகுறுப்பு.

"ஐயா!"

தலைவர் கண் விழித்துப் பார்த்தார்.

"என்ன குப்பா?"

"இந்த ஆரஞ்சு ரசமுங்க..."

"ம்ம்! எனக்கு வேண்டாம்." பெரும் பிரயாசையுடன் வார்த்தைகள் வெளிவந்தன.

"வீணாப் போவுதுங்களே!"

"ம்ம்!"

"நான் மூன்று நாட்களாகப் பட்டினிங்க" என்று கூறினான் குப்பன்.

தலைவர் அவனை உறுத்துப் பார்த்தார். 'பட்டினி கிடப்பதில் உம்மைவிட நான் சீனியர்' என்ற முகபாவம் ஒன்றும் அவன் முகத்தில் இல்லை. ஏக்கம்தான் இருந்தது.

"கெட்டுப்போகிறதை நான் சாப்பிடட்டுங்களா?" என்று வினவினான் அவன்.

"ஆ, நீயா?" சற்றுப் படபடப்புடன் கேட்டார் தலைவர். குப்பன் திகைத்தான்.

"நான் குடிக்கக் கூடாதுங்களா?"

"குப்பா! இதை நீயும் சாப்பிடக் கூடாது. நானும் சாப்பிடக் கூடாது."

"ஏனுங்க?"

"நீ சாப்பிட்டால்கூட நான்தான் குடித்து விட்டேன் என்று எல்லாரும் நினைத்துக் கொள்வார்கள். ஆனால் வெளிப்படையாகக் கேட்க மாட்டார்கள். நானும் சொல்லவும் முடியாது. இப்போ வந்துட்டுப் போனாரே, பத்திரிகை நிருபர், அவர் பார்வையேஒருமாதிரியாயிருக்கு! நாளைக் காலையில் வந்தால் முதல் வேலையாகப் பழ ரசம் இருக்கிறதா என்றுதான் பார்ப்பார். இல்லாவிட்டால், 'ரத்தினசாமி ஆரஞ்சுப் பழ ரசம் குடித்துக் கொண்டு உண்ணாவிரதம் இருக்கிறார்' என்று கொட்டை எழுத்தில் பத்திரிகையில் போடுவார். அதனால் இந்தப் பழ ரசத்தை நீயோ நானோ மட்டுமல்ல, ஏதாவது பூனைகூட வந்து குடித்து விடாதபடி இன்றிரவு முழுதும் நாம் கவனமாகப் பார்த்துக் கொள்ள வேண்டும். இதை எடுத்துக் கொண்டு போகச் சொல்லலாம் என்றால் எல்லாரும் தூங்கப் போய் விட்டார்களே!" என்றார் தலைவர்.

தன்னுடைய அற்பத்தன ஆசைக்காக மிகவும் நொந்து கொண்டான் குப்பன். தமக்கும் தம் லட்சியத்துக்கும் மாசு வாராமல் காத்துக் கொள்ள இவ்வளவு முன் யோசனையுடன் நடந்து கொள்ளும் தலைவரிடம் அவன் தன்னுடைய முட்டாள்தனமான ஆசையை வெளியிட்டு விட்டானே!

அன்றிரவு குப்பனும் தலைவரும் தூங்கவில்லை. ஆரஞ்சுப் பழ ரசத்துக்குக் காவல்!

குப்பன் உள்ளத்தில் நம்பிக்கை நன்றாக வேரோடிவிட்டது. சிறு விஷயத்தில் கூட இவ்வளவு கட்டுப்பாட்டுடன் இருக்கிறாரே தலைவர்! அவர் தம் போராட்டத்தில் வெற்றி காண்பது நிச்சயம். அவனுடைய பட்டினி நிரந்தரமாக மறையும் காலம் நெருங்கிவிட்டது.

அந்த இராப் பொழுதும், கூட ஓர் அரைப் பகல் பொழுதும் கழிந்தன. இதற்கிடையில் தலைவர் அவர்களின் உடல் நிலையில் நெருக்கடியான கட்டம் ஏற்பட்டு விட்டது. அவரைச் சுற்றிக் கூட்டம் பெருத்தது. பெரிய பெரிய மனிதர்கள் வந்து போய்க் கொண்டிருந்தனர். முன் போல் தலைவருடன் நெருக்கமாகப் பழகக் குப்பனுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவில்லை. எல்லாரும் 'நான் நீ' என்று போட்டி போட்டுக் கொண்டு அவரைச் சுற்றி நின்று கொண்டிருக்கும் போது குப்பன் சற்று ஒதுங்கிக் கொள்ள வேண்டியதுதானே ?

கொட்டகையருகே போய் உட்கார்ந்தான். அவனுக்கும் சோர்வாக இருந்தது. இரும்பு மாதிரி உடம்பு என்றாலும் அசல் இரும்பான உடம்பு இல்லையே, 'பட்டினி புரூப்' பாக இருக்க? பசி மயக்கத்தோடு முந்திய இரவு காவலுக்காகக் கண் விழித்த அசதி வேறு. கொஞ்சம் படுத்திருந்தால் தேவலாம் போலிருந்தது. தரையில் சாய்ந்து கண்ணை மூடிக் கொண்டான். தூக்கமா, மயக்கமா என்று சொல்ல முடியாத ஒரு சுகமான நிலை, அவனைப் பொறுத்த வரையில்.

எவ்வளவு நேரம் அப்படி இருந்தானோ, திடீரென்று 'ஹோ'வென்று கடல் இரைச்சல் போல் கேட்ட ஒலியால் கண் விழித்துப் பார்த்தான். இது என்ன திடீரென்று?

சற்றுத் தொலைவில் ஒரு மேடை அமைக்கப் பட்டிருந்தது. மேடையில் போடப்பட்டிருந்த நாற்காலியில் தலைவர் சாய்ந்திருந்தார். மேடையைச் சுற்றிப் பெருங் கூட்டம். கொட்டகை காலியாக இருந்தது!

தன் சக்தியை யெல்லாம் கூட்டிப் பரபரப் புடன் எழுந்து மேடையருகே சென்றான்.

பிரமுகர் ஒருவர் பேசிக் கொண்டிருந்தார். "...எல்லாருக்கும் ஒரு நற்செய்தி. தலைவர் அவர்களின் லட்சியம் நிறைவேறப் போகிறது. ஆகவே தலைவர் அவருடைய வேண்டுகோளுக்கிணங்கி உண்ணாவிரதத்தை முடித்துக் கொள்ளத் தீர்மானித்து விட்டார்..."

குப்பனுக்கு ஒரே திகைப்பாக இருந்தது. ஒன்றும் புரியவில்லை. தலைவரின் லட்சியம் நிறைவேறி விட்டதா? தன் வயிற்றை ஒரு முறை தடவிப் பார்த்தான். அது வழக்கம் போல் அவனைப் பார்த்து உறுமியது.

பிரமுகரின் குரல் தொடர்ந்து கேட்டது. 'ஏழைகளின் பட்டினியைப் போக்க வேண்டிய நடவடிக்கைகளை அரசாங்கம் எடுத்து வருவதாக நம் அமைச்சர் ஒரு பொதுக் கூட்டத்தில் கூறியிருக்கிறார். அமைச்சரின் வாக்கை மதித்து நம் தலைவர் ரத்தினசாமி அவர்கள் உண்ணாவிரதத்தைக் கைவிடுகிறார்கள். அமைச்சர் கூறியபடி நடைபெறாது விட்டால், சட்ட சபைக்குப் போய் அது விஷயமாகப் போராடுவதற்கும் தலைவர் தீர்மானித்திருக்கிறார்."

'தலைவர் ரத்தினசாமி அவர்களுக்கு ஜே!' என்ற வாழ்த்தொலி விண்ணதிர முழங்கியது.

தலைவர் அவர்கள் பழரசம் அருந்த, உண்ணாவிரத முறிவு விழா கோலாகலமாக நிறைவேறியது. அதைத் தொடர்ந்து மாபெரும் ஊர்வலமும் நடந்தது.

ஊர்வலம் புறப்பட்டுச் சென்றது. ஊர்வலத்தில் கலந்து கொண்ட பிரமுகரொருவர் தம் சகாவிடம் இலேசான குரலில் சொன்னார்: "இந்தத் தடவை நம் தலைவருக்குத் தேர்தலைப் பற்றிக் கவலை இல்லை. எல்லாப் பத்திரிகைகளிலும் உண்ணாவிரதம் பற்றி விரிவாக வந்திருக்கிறது. நல்ல பப்ளிஸிட்டி! அவருக்குப் பிரமாதமான புகழ்!"

அந்த வார்த்தைகள் குப்பனின் காதுகளில் விழத்தான் விழுந்தன. அதனால் குப்பன் ஒன்றும் கல்லாய்ச் சமைந்து விடவில்லை.

ஒருவாறாகத் தலைவர் ரத்தினசாமி அவர்களின் உண்ணாவிரதம் வெற்றிகரமாக முடிந்தது. ஆனால் குப்பனின் உண்ணாவிரதம்? ஆகா! அவனும் நம்பிக்கையுடன் இருக்கலாம்; அவனுக்காகத் தலைவர் அவர்கள் உண்ணாவிரதம் இருந்திருக்கிறார்கள். இன்னும் நம் வாழ்நாள் முழுவதும் போராட விருக்கிறார்கள்; பிறகென்ன?






# கோடையில் உங்களுக்கு சுகமான குளிர்ந்த காற்று

பட்டனை அழுத்திய மாத்திரத்திலேயே, கோடைக்காலத்தில் பெட்டர்ஸின் குளிர்ந்த காற்று உங்களைச் சூழ்ந்து இன்பத்தில் ஆழ்த்துகிறது. அதிகக் குளிர்ச்சியை அளிப்பதற்காகவே இதன் இயந்திரங்கள் நியூயார்க்கிலுள்ள பெட்டர்ஸ் கார்ப்பொரேஷனால் தயாரிக்கப்பட்டவை. உலகத்திலேயே மற்ற ஏர் கண்டிஷனர்களைவிட பெட்டர்ஸ் அதிகமாக விற்கப்படுவதே அது மிகவும் சிறந்ததென்பதை எடுத்துக் காட்டுகிறது.

- 5 வருஷ உத்திரவாதம்
- 1 மற்றும் 2 டன் மாடல்கள்
- மின்சார சக்திக்காகும் செலவு மிகக் குறைவு

# பெட்டர்ஸ்-லாய்ட்

## ஏர் கண்டிஷனர்கள்

பெட்டர்ஸ் லாய்ட் கார்ப். பிரை. லி., புதுடில்லி 1

டிஸ்டிரிப்யூட்டர்கள் (சென்னை):

ஜெனரல் ரேடியோ அண்ட் அப்ளையென்ஸஸ் லிமிடெட்

3-15, மவுண்ட் ரோடு, சென்னை-2. போன்: 86719

# ரேடியோ நாடக விழா

எஸ். வி. எஸ்.

ரேடியோ நாடகங்களில் ஒரு சௌகரியம். காதுக்கு மட்டும் வேலைகொடுத்தால் போதும். கண்ணுக்கு வேலை இல்லை. பிடித்தால் வீட்டில் உட்கார்ந்தபடியே கேட்கலாம். பிடிக்கா விட்டால் 'டக்' என்று நிறுத்தி விடலாம்.

சென்ற ஏப்ரல் 14ந் தேதி முதல் 21ந் தேதி வரை சென்னை வானொலி நிலையத்தார் நடத்திய நாடக விழா நாடகங்களைக் கேட்க நேர்ந்தபோது மேலே சொன்னபடி 'டக்'கென்று நிறுத்திவிடத் தோன்றவில்லை. ஒவ்வொரு நாடகமும் விடாமல் கேட்கவே தூண்டியது. ஆனால் ஒரு நாடகம் கேட்டு விட்டு மறு நாள் நண்பர்களிடம் சென்று "நாடகம் நேற்று கேட்டீர்களா?" என்று வினவினால், "கேட்டுக் கொண்டுதான் இருந்தேன். ஆனால் பாதியில் தூங்கி விட்டேன்!" என்றார்கள். இரவு 9-30 மணியிலிருந்து 10-45 வரை என்றால் இந்தச் சங்கடம் இருக்கத்தான் செய்கிறது.

முதல் நாடகம் ஹாஸ்ய நடிகர் திரு கே. ஏ. தங்கவேலு நடித்து நடத்திய 'திருவாளர் அதிருஷ்டம்' என்பது.

சந்திரா என்னும் பெண்ணைக் காதலித்த திருவாளர் அதிருஷ்டம், பெண்ணின் தந்தை, தாயார், சகோதரர்கள் ஆகியோரின் வக்கிர புத்தியைத் திருத்தினால்தான் காதலியை மணக்க முடியும் என்ற நிலை நேருகிறது. இதற்காகத் திருவாளர் அதிருஷ்டமாக நடிக்கும் திரு தங்கவேலு, பூசாரியாகவும், நாட்டு வைத்தியராகவும், சோதிடராகவும் நடித்து அவர்களைச் சீர்திருத்துகிறார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது. அதுவும் நழுவி வாயில் விழப் போகிறது என்ற நிலையில் திடீரென்று சந்திரா ஆணாக மாறி விடுகிறாள் என்று செய்தி வந்து காதல் நிர்மூலமாகிறது. இதுதான் கதை. மிகப் பழைய பாணி. நடிப்பு ஹாஸ்யமாகச் சிரிப்பூட்டும் வகையில் இருந்தாலும் நிறைவு இல்லை.

வாழைப் பழத் தோலில் சறுக்கி ஒருவர் கீழே விழுகிறார். அதைப் பார்த்தவர்களுக்குச் சிரிப்பு வரத்தான் செய்கிறது. ஆனால் அடுத்த கணம் சிரித்தது எவ்வளவு தவறு என்று உணர்வதில்லையா? அதைப் போன்ற உணர்ச்சிதான் ஏற்பட்டது, திருவாளர் அதிருஷ்டம் நாடகம் கேட்டபோது. சிரிக்கத்தான் செய்தோம்; நாடகம் முடிந்த பிறகு என்ன தவறு செய்து விட்டோம் என்ற உணர்ச்சிதான் மனத்தில் நிலைத்தது.

சந்திரா ஆணாக மாறி விட்டாள் என்று முடித்திருப்பது, ரஸக்குறைவாக இல்லையோ!

அடுத்த நாடகம் 'ரோஜாவின் அந்தர்'. பிரச்னை நாடகம் என்று அறிவிக்கப்பட்டிருந்தது. எழுதியவர் அரு. ராமநாதன்.

பத்மராஜன் என்ற பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்த இளைஞன் கவிதைப் பித்துப் பிடித்து, அவனுக்கே சரியாகப் புரியாத ஒரு மனப் பிராந்தியில் வாழ்ந்து வருகிறான். அவனைக் காதலித்தாள் பண்பும் அழகும் வாய்ந்த அவனுடைய முறைப் பெண். ஆனால் கவிஞனோ, தன்னுடைய அப்ஸரஸ் என்னும் காவியத்துக்கு மூலப் பொருள் என்று கருதிக் கருப்பாயி என்னும் தெருக்கூத்துக்காரியுடன் ஓடி, அலைந்து, கெட்டு, தொழு நோய்பிடித்து அழிகிறான். ஆனால் எப்படியோ அப்ஸரஸ் என்னும் காவியம் மட்டும் எழுதி விடுகிறான். அந்தத் தெருக்கூத்துக்காரியிடம் ஒரு பண்பைக்கூடக் காணவில்லை. பின் எப்படி அவன் காவியம் இயற்ற முடிந்தது என்பதுதான் பிரச்னை போலும்.

இந்த நாடகத்தில் வால்மீகியையும் மற்றப் பெரும் கவிஞர்களையும் மேற்கோள் காட்டுவதுதான் விந்தை. துளஸிதாஸர் மனைவிப் பித்து பிடித்து அலைந்த போது, 'என் மேலுள்ள ஆசையில் ஒரு பகுதி அந்த ராமன் மேல் பக்தியாக மாறினால் எவ்வளவோ புண்ணியமுண்டு' என்றாள். துளஸிதாஸரின் அகக்கண் மலர்ந்தது. ஆனால் கருப்பாயி கவிஞனின் அகக் கண்ணைத் திறக்கும் ஒரு காரியமும் செய்யவில்லை. இவளை வைத்து எப்படித்தான் கவிதை புனைந்தானோ அந்தக் கவிஞன்? நாடகம்தான் பிரச்னை நாடகம் என்றால் வசனங்களைப் புரிந்து கொள்வதுமா பிரச்னையாக இருக்க வேண்டும்? கருப்பாயி பாத்திரத்தின் பெயர் கருப்பானாலும் நடிப்பு பளபளப்பாக இருந்தது. ஸ்ரீமதி ஞானம்மா டேவிட் கருப்பாயியாக நடித்தார்.

கே. ஏ. தங்கவேலு



அரு. ராமநாதன்



கொத்தமங்கலம் சுப்பு



'ஓதாது உணர்ந்தவன்' என்ற தலைப்பில் திரு ரா. அய்யாசாமி தொகுத்துத் தயாரித்த பிரகலாத சரித்திரம் வெகு நன்றாக இருந்தது. பாடல்களில் வரும் வார்த்தைகளைக் கணீர் என்று உச்சரித்து, தெளிவாகக் காதில் விழும் வகையில் பாடியவர்களைப் பாராட்ட வேண்டும். நரசிம்ம உருவம் வெளிப்பட்ட இடத்தில் மிகநீளமான பாடல்களைப் போட்டது நாடகத் தன்மை குறைந்துவிட்ட உணர்ச்சியை ஏற்படுத்தியது.

திரு கொத்தமங்கலம் சுப்பு அவர்களின் 'பெற்றதெல்லாம் பிள்ளைகள்' கருத்தும் நகைச் சுவையும் நிரம்பிய நாடகமாயினும் ஏனோ எடுபடவே இல்லை. பின்னணி சங்கீதம் பல தடவைகள் முன்னணியில் வந்து இடையூறு செய்தது. சுப்பு அவர்களின் வசன நடை முழுதும் செட்டிநாட்டு வழக்குத் தமிழ் நடை. ஆகவே அவர் எழுதிய நாடகத்தை அவரே பயிற்றி யிருந்தால் வசனங்கள் உணர்ச்சியுடன் அமைந்திருக்கும்.

ரா. அய்யாசாமி

திரு ஜெகசிற்பியன் எழுதிய 'மண்ணின் குரல்' ஒரு நல்ல நாடகம். நடித்தவர்களும் நன்றாக நடித்தார்கள். இந்த நாடகத்தில் நடித்தவர்கள் திரு டி. கே. ஷண்முகம் குழுவினர் என்று அறிவித்தபோது, "இவர்கள் நன்றாக நடித்ததில் என்ன அதிசயமிருக்கிறது!" என்று தோன்றிவிட்டது.

கதையில் உழவர்களுக்காக அவ்வளவு தூரம் பரிந்து பேசிய அந்த வாலிபனுக்குச் சொத்தும் உடைமையும் வந்துவிட்டவுடன், அவன் லட்சியங்களெல்லாம் அப்படியே காற்றில் பறந்து போகின்றன. இது ஒருவேளை பிரத்தியட்ச வாழ்க்கையில் உண்மையாக இருக்கலாம். கதைக்கு இவ்வளவு உண்மை தாங்காது. காரண காரியங்களைக் கூறி மெள்ள மெள்ள மனம் மாறிற்று என்று முடித்தால்தான் பண்பு நிறைந்த நாடகமாகும்.

இந்த நாடகத்துக்குக் கொடுக்கப்பட்ட 'மண்ணின் குரல்' என்ற தலைப்புக்குப் பொருத்தம் உண்டாக்க நாடகத்தின் முடிவில் முயற்சி செய்யப்பட்டிருக்கிறது! பலன் பூஜ்யம்தான்.

திரு ஆர். வி. எழுதிய 'அத்தையா வினக்கு' சாதிப் பிரச்னையும் காதலும் கலந்த கதை. பழையவிஷயமாயிற்றே என்று முதலில் தோன்றியது. . நடித்தவர்களின் திறமை காரணமாகவோ, நாடகாசிரியரின் திறமை காரணமாகவோ அதில் புதுமையும்விறுவிறுப்பும் இருந்தன. கடைசியில் குழந்தை தன் மாமியாரைத் தொந்தரவு செய்வதாக மருமகள் கற்பனை செய்து கொண்டு கூறும் கட்டம் மிக இயற்கையாக இருந்தது. எல்லாவற்றிலும் தாயின் குணசித்திரம் மிக அபாரம். சமுதாயம் சாதி வித்தியாச உணர்ச்சியை இன்று எப்படிப் பார்க்கிறது என்பதை மிக நன்றாக எடுத்துக் காட்டி விட்டார் ஆசிரியர்.

ரேடியோ நாடக விழாவில் கடைசி நாடகமாகப் பூவாளுர் சுந்தரராமன் அவர்களின் கதை நாடகமாக்கி ஒலி பரப்பப்பட்டது. இது ஒலி பரப்பான ஏழு நாடகங்களுக்கும் சிகரமாக அமைந்துவிட்டது. நாடக அமைப்பு, நடிப்பு, பின்னணி ஆகிய எல்லா அம்சங்களிலுமே நன்றாக இருந்தது. வெளிப்புறத்தில் நடக்கும் காதல் பேச்சு மிக சுவையாக, இயற்கையாக இருந்தது. அசட்டு அனுஷமாக நடித்தவரின் நடிப்பும் நன்றாக இருந்தது.

தந்தையின் வற்புறுத்தலின் பேரில், தன் காதலன் முத்து, தனக்கு விருப்பமில்லாமலே பலாத்காரப்படுத்தித் தனக்குத் திருட்டுத் தாலி கட்டிவிட்டதாகக் கிராமப் பஞ்சாயத்து முன் போய் சொன்னான் அவன். முத்து திடுக்கிட்டான். தந்தை அனுஷம் என்னும் பைத்தியத்துக்குத் திருமணம் செய்து வைக்க முயன்றபோது, 'திருட்டுத் தாலியாயினும் அதைக் கழற்ற முடியாது. அது புனிதப் பொருள்' என்று வாதாடினான் அவன். பெண் குலத்தின் உயர்ந்த பண்பை மிக அழகிய முறையில் எடுத்துக் காட்டி விட்டார் இந்தக் கதையின் ஆசிரியர்.

தமிழில் நல்ல நாடகங்கள் உருவாக இந்த ரேடியோ நாடக விழா வாய்ப்பும் வசதியும் ஊக்கமும் உற்சாகமும் ஏற்படுத்தித் தந்திருக்கிறது.


ஜெகசிற்பியன்


ஆர்வி


பூவாளுர் சுந்தரராமன்

# நடிகையை வென்ற நடிப்பு

## திருச்சி வாசுதேவன்

### காலை மணி பத்து

டிர்ர்ரிங்....டிர்ர்ரிங்!

"ஹலோ...மிஸ் நந்தினியின் காரியதரிசி பேசுகிறேன்....!"

"மல்லிகாவா?"

"ஆமாம். நீங்க?"

"புரோக்கர் செட்டு..."

"நமஸ்காரம் அண்ணாச்சி! சௌக்யமா?"

"சௌக்யந்தான்...நந்தினியைப் பார்க்கணும் இப்போ...."

"இன்னைக்கு முடியாதே!"

"ஏன்!"

"அக்காவுக்கு நேற்று இரவு ஷூட்டிங்! காலையிலே அஞ்சு மணிக்குத்தான் வீட்டுக்கு வந்தாங்க. இன்னும் எழுந்திருக்கலே..."

"அப்படின்னு இன்னும் அரை மணி கழிச்சு வரலாமா?"

"மணி இப்போ பத்து. பதினோரு மணிக்கு ஒரு கால்ஷீட்டுக்குப் போகணும். ஸ்டுடியோ விலேயிருந்து கார் கூட வந்து காத்துக் கிட்டிருக்கு!"

"கால்ஷீட் கான்சல்னு சொல்லியனுப் பேன்...புதிசா ஒரு 'பார்டியை' அரேஞ்ச் பண்ணியிருக்கேன்... எப்படியும் இன்னிக்கே நந்தினியை ஒரு படத்துக்குப் 'புக்' பண்ணி அட்வான்ஸ் கொடுத்துடணுமின்னு நாள், நட்சத்திரம், தேதி, நம்பர் எல்லாப் பொருத் தமும் பார்த்துட்டு ஓட்டல் காஷ்மீரிலே காத்திண்டிருக்கான் ஆசாமி!"

"ஹூம்....."

"என்ன மல்லிகா யோசிக்கறே?"

"ஒண்ணுமில்லே...இரவு எட்டு மணிக்கு."

"நாசமாய்ப் போச்சு! அந்த ஆசாமி பெரிய தொழில் பிரமுகர். மத்தியானம் இரண்டு மணிக்கு விமானத்திலே டில்லிக்குப் போகப் போகிறான். டிக்கெட்கூட நான்தான் வாங்கப் போனேன்.... அப்படியே டில்லிக்கு ஒரு தந்தியும் கொடுத்து விட்டு இப்பத்தான் திரும்பி வர்றேன்...."

"இதை நீங்க நேத்தே எங்களுக்குச் சொல்லியிருந்தா...."

"சாதான் போ. ஆசாமி நேத்திக்கே கிளம் பிப் போகணுமின்னான். நான்தான் எப்படி எப்படியோ முயற்சி செய்து நம்ம நந்தினி யைக் கதாநாயகியாக 'புக்' பண்ணிட்டுத் தான் போகணுமுன்னு ஒரு வழியாச் சரிப் படுத்தி வைச்சிருக்கேன்."

"ரொம்ப சந்தோஷம், அண்ணாச்சி! இவ்வளவு தூரம் நீங்க பிரயாசைப் பட்டிருக்கிற போது பிறகு என்ன செய்யறது? கால் ஷீட்டை இன்னிக்குக் கான்சல் பண்ணிட லாம். நீங்க இன்னும் கொஞ்ச நேரத்திலே அந்த ஆசாமியை அழைச்சுட்டு வந்துடுங்க!"

அதெல்லாம் என் பொறுப்பு. நீ உடனே நந்தினியை எழுப்பிவிட்டு, அவளைத் தயாராக இருக்கச் சொல்லு."

"சரி, அண்ணாச்சி! போனை வைச்சுடட் டுமா?" என்றாள் மல்லிகா.

"பேஷா!"

### பகல் மணி பதினொன்றரை



"வணக்கம்; வாங்க! வாங்க அண்ணாச்சி!" என்று வரவேற்றாள் நந்தினியின் காரியதரிசி மல்லிகா.

"நாங்க வர்றோங்க றதை நந்தினிக்குச் சொல்லியிருக்கி யோன்னே?"

"ஓ, சொல்லிட் டேனே!"

"மிஸ்டர், இவதான் நந்தினியோட காரிய தரிசி மிஸ் மல்லிகா! இவர்தானம்மா, குருவி யாப்பட்டி குமாரராஜா மிஸ்டர் குஞ்சர வதனம்..."

"ரொம்ப மகிழ்ச்சி; உட்காருங்க!... மன்னிக் கணும்! இதோ வர்றேன், ஒரு நிமிஷத்திலே!..."

"காரியதரிசியும் கூட ரொம்ப அழகாகத் தான் இருக்கா."

"இவகூட எங்கள் ஊருக்குப் பக்கந்தான். பி. யு. ஸி. படிச்சிருக்கா. வேலையில்லேன்னு தெரிஞ்சது. இப்போதைக்கு இங்கே இருக் கட்டுமேன்னு நான்தான் இங்கே கொண்டு வந்து சேர்த்தேன். ஹூம், யாரானும் முதல் போடறேன்னு இவளையே கதாநாயகியாகப் போட்டு ஒரு படம் எடுக்கணுமின்னு திட்டம் போட்டிருக்கேன். ம்..."

"கவலைப்படாதீங்க! நான் உங்களுக்கு ஒத்தாசை செய்யறேன்!"

"இதெல்லாம் என்ன மல்லிகா?"

"ஒண்ணுமில்லேன்னு! வெறும் ஜஸ் கிரீமும் பாதாம்கீருந்தான்..."

"நன்றி, மிஸ் மல்லிகா! நான் இப்போ தான் சாப்பிட்டேன்."

"பரவாயில்லே...புரூட் ஜூஸாவது சாப்பிடுங்களேன்!"

"வணக்கம்!"

"நந்தினி! இவர் நம்ப சிநேகிதர். ரொம்ப வேண்டியவர். குருவிப்பட்டின்னு கேள்விப்பட்டிருப்பியே!"

"ஓ, ஆமாம் 'மொங்குப்பட்டி கில்லாடி' படத்துக்கு அங்கே போய் வெளிப்படக் காட்சிகளெல்லாம் எடுத்திருக்கோமே!"

"ஆமாம்! அதனோட குமாரராஜா மிஸ்டர் குஞ்சரவதனம் இவர்தான்! பெரிய வர்த்தகப் பிரமுகர். பல கம்பெனிகளிலே டைரக்டராக இருக்கிறார். அத்தோடு படத்தொழிலிலேயும் ஈடுபடணுங்கறது அவரது நெடுநாளைய அவா. அது இப்போத்தான் கூடி வந்திருக்கு. இவரது முதல் படத்திலே நீதான் கதாநாயகி."





"ரொம்ப மகிழ்ச்சியான சேதி, அண்ணு! ஆனால்.....இப்போ பதினஞ்சு படத்துக்கு மேலே ஒப்பந்தம் ஆகியிருக்கே!"

"இப்படியெல்லாம் சொல்லி நீ மறுத்துட்டா குமாரராஜா மனசு ஒடிஞ்சுபோயிடும். உன் ஒத்துழைப்பிலேதான் இவர்களது ஆர்வமே அடங்கியிருக்கு! பார்த்து, மறுத்துடாமே சௌகரியப்படுகிறபோது 'கால்ஷீட்' கொடுத்தால் போதும்! நீங்க என்ன சொல்றீங்க? நான் சொல்லறது சரிதானே...?"

"எனக்கு ஆட்சேபணையில்லே! மிஸ்டர் கிட்டு! இப்பவே இரண்டு மணி ஆயிடுச்சே? பிளேனுக்கு நேரமாயிடாதா? இன்னைக்கு நாள் ரொம்ப நல்லாயிருக்கிறதனாலே தொகையை முடிவு பண்ணிப்பிடுவோம்.......என்னோடு இப்போ நேரோட்டதுக்கு வாங்க....அட்வான்ஸா 'செக்' கொடுத்துட்டுப் போறேன். டில்லியிலேயிருந்து நான் திரும்பினதுக்கப்புறம் மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசுவோம்."

"என்ன நந்தினி, குமாரராஜா சொல்றதை யெல்லாம் கேட்டியா? அவரோட கல்மஷமில்லாத உள்ளம் உனக்குப் புரிஞ்சிருக்கும். அதனாலே நீ வெளிப்படையாக அவரிடம் உன் மனத்திலுள்ளதைச் சொல்லலாம்!"

"என்னைக் கேட்கிறீங்களே, அண்ணு! இப்போ காண்டிராக்ட் தொகை என்னங்கிறது உங்களுக்குத் தான் தெரியுமே!"

"இருந்தாலும் நீயே சொல்றதுதான் அழகு...இவரோ இந்தத் துறைக்குப் புதிசு... கொஞ்சம் குறைவுபடுத்திச் சொல்லு!"

"நாற்பதாயிரம் வைச்சுக்கலாம்!"

"ரொம்ப அதிகம், மிஸ். நந்தினி....! நான் பதினைந்தாயிரத்துக்குள்ளே முடியும்னு பார்த்தேன்!"

"நன்றாயிருக்கு போங்கோ....பதினைந்தாயிரமா? போனமாசம் மிஞ்சூர் மிட்டாதார் 'காருமல்லிக் காதலி'ங்கிற படத்துக்காக முப்பதினாயிரம் ரூபாய்க்கு ஒப்பந்தம் செய்திருக்கிறார்.....நந்தினி, அந்தக் காண்டிராக்ட் பைலை எடுத்துக் கொண்டு வரச் சொல்லு!"

"மல்லிகா அந்தக் காண்டிராக்ட் பைலை எடுத்துக் கொண்டுவா!"

"இதோ.....!"

"பதினையாயிரம் இருபதினாயிரம்கிற பேச்செல்லாம் மூணு வருஷங்களுக்கு முந்தி..."

"ஓஹோ!"

"அதை அண்ணு கையிலே கொடு..."

"இதோ காண்டிராக்டுகளைப் பாருங்க! கடந்த மூன்று வருஷங்களாக இருபத்தையா




யிரத்திலே யிருந்து நாற்பதாயிரம் வரையில் ஒப்பந்தமாகியிருக்கு !''

'' அடடே ! ஆமாம் ! சொன்னப்பலே நம்ம பத்தெட்டிலே முப்பதினாயிரத்துக்குக் காண்ட்ராக்ட் ஆகியிருக்குன்னு ஒப்பந்தம் சொல்லுதே !''

'' இன்னும் கொஞ்ச நாள் கழிச்சுப் பாருங்களேன், நந்தினியோட அதிர்ஷ்டத்தை! அறுபதாயிரம் எழுபதாயிரம் கொடுத்துப் 'புக்' பண்றதுக்குப் பட அதிபர்களெல்லாம் 'கியூ' விலே வந்து நிற்கப் போறாங்க !''

'' எல்லாம் அண்ணாவோட ஆசீர்வாதம்!''

'' ஊம்....''

'' என்ன யோசிக்கிறீங்க ?''

'' இல்லே, எனக்கு இந்தத் துறை புதிசு பாருங்க ! ஆரம்பத்திலேயே அகலக்கால் வைக்காமல் இருந்தால்தான் சரிப்படும். அதனாலே இருபத்தையாயிரமா இருக்கட்டும். படம் வெற்றி ஆச்சுன்னா...!''

'' அதென்ன அப்படிச் சந்தேகமாச் சொல்றீங்க — நான் சொல்ற டைரக்டரைப் போடுங்கோ! 'ஹவுஸ் புல்' ஆயி நூறு நாள் ஓடுறதுக்கு நான் பொறுப்பு! அப்புறம் என்ன? ...நீங்களும் வேண்டியவர். நந்தினியும் அப்படித்தான். ஆகையினாலே இரண்டு பேருக்கும் பொதுவா ...''

'' அதுதான் காண்டிராக்ட் பைலையே உங்க கிட்டக் கொடுத்திருக்கேனே அண்ணா! அதையெல்லாம் பார்த்துவிட்டு அவர் விருப்பப்பட்டு என்ன முடிவு செய்திருவரோ, அது எனக்குச் சம்மதம் !''

'' பேஷ்! என் கவலே விட்டுது!''

'' சரி மிஸ்டர். நேரமாகுது! முப்பதாயிரத்துக்கு அக்ரிமெண்ட் செய்துவிடலாம். படம் முழு வெற்றி ஆச்சுன்னு முதல்லே கேட்ட பணத்தைத் தந்துவிடுகிறேன்! சம்மதந்தானே, மிஸ் நந்தினி ?''

'' குமாரராஜா செய்த முடிவுக்கு நான் குறுக்கே வர முடியுமா ?''

'' ஓகே ! மிஸ்டர் கிட்டு! நீங்க இப்போ என் கூட வாங்க. அட்வான்ஸா பத்தாயிரத்துக்குச் 'செக்' தர்றேன் ! பிறகு நான் டில்லியிலேயிருந்து திரும்பிவந்ததும் புரொடக்ஷன் சம்பந்தமாகக் கலந்து பேசுவோம். நீங்கதான் கடைசி வரையில் இருந்து படத்தை நல்ல முறையிலே முடிச்சுக் கொடுக்கணும் ; புறப்படுவோம் ! மிஸ் நந்தினி ! ரொம்ப நன்றி. போய் வருகிறோம் !''

'' மல்லிகா ! இந்தா. பைலை எடுத்துக் கொண்டு போ !''

'' மிஸ்டர் கிட்டு ஹோட்டல் வரையில் அதைக் கொண்டு வாங்களேன். சில ஒப்பந்தங்களைச் சரியாகக் கவனிக்கல்லே. அதையெல்லாம் ஒரு தடவை பார்த்துடறேன். நீங்க வர்றபோது கையோட எடுத்துட்டு வந்துடலாம் !''

'' குமாரராஜா மனசு போலத்தான் கொண்டு போங்களேன், அண்ணா !''

'' சரி ; வரட்டுமா, நந்தினி ?''

'' செய்யுங்க அண்ணா !''

## இரவு மணி பத்து

'' டிர்ர்ரிங், டிர்ர்ரிங், டிர்ர்ரிங் !''

'' ஹலோ !''

'' நந்தினி பேசறேன் !''

'' எங்கேயிருந்து அக்கா பேசறீங்க ?''

'' கிளப்பிலேயிருந்துதான். நான் இங்கே வந்த கொஞ்ச நேரத்திலே மிஸ்டர் 'வான் வசனம்' வந்து விட்டார். உடனே ரெண்டு பேரும் சாந்தோம் கடற்கரைக்குப் போய், நாளைக்கு எடுக்கப் போகிற காட்சிக்கு ஒத்திகை பார்த்தோம் ; நேரம் தெரியலே !''

'' இங்கே எப்போ வருவீங்க ?''

'' ஏன், இன்னும் ஒருமணி நேரம் ஆகலாம். ''

'' ரொம்ப முக்கிய விஷயம். புரோக்கர் கிட்டு நம்மைப் பெரிய ஆபத்திலே மாட்டி வைச்சுட்டான்...!''

'' மல்லிகா! கனவு கினவு கண்டியா, என்ன?''

'' அதெல்லாம் இல்லே....நீங்க உடனே வாங்க !....அதைச்சொல்றதுக்கே எனக்கு...''

'' சும்மாச் சொல்லு. அப்பலே எனக்குத் தெரியும், கிட்டுகிட்டே வந்து சேருகிறவன் எல்லாப் பெரிய கோல்மால் பேர்வழியாகத் தான் இருப்பானுங்கன்னு ! ஏன், அட்வான்ஸா 'செக்' தரலியாமா ?''

'' செக்கா ? குமார ராஜாமாதிரி நடிச்சானே...அவன்...ஐயோ...அவன்..பெரிய..''

'' புலியா, சிங்கமா ? என்னடி பயந்து சாகிறே ; சீக்கிரம் சொல்லேன் !''

'' புரொட்யூசர் மாதிரி வந்தானே. அவன் பெரிய வருமான வரி அதிகாரியாம்! சந்தேகப்பட்டுப் பல கம்பெனிகளோட கணக்குகளைப் பரிசோதிக்கப் பார்க்கத் டில்லியிலேயிருந்து வந்தவனாம்... அது தெரியாமல் அவன் வலையிலே கிட்டு சிக்கிட்டானாம்....''

'' சரி, பைல் என்ன ஆயிற்று ?''

'' அதைக் கையோட கொண்டு போயிட்டானாம், அந்த வருமான அதிகாரி !''

'' ஆங் ! காண்டிராக்ட் பைலைக்கொண்டு போயிட்டானா?''...டொடிங்...டிங்க் !

'' ஹலோ, ஹலோ!! அக்கா...ஐயோ, மூர்ச்சையாகி விழுந்துட்டாங்க போலிருக்கே !''

# அழகாயிருப்பது எப்படியென்று கூறியதற்கு சந்தோஷம்

நீங்கள் கூறுவதுபோல் சுலபமான வழி

பிரதிதினமும் கூந்தலில் ஸ்வஸ்திக்

பர்ப்யூம்டு காஸ்டர் ஆயில் தேய்த்து வாரிக்கொள்வதே

**ஸ்வஸ்திக் பர்ப்யூம்டு காஸ்டர் ஆயில்**

*ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிட்., பம்பாய்.*





# படித்துப் பாருங்கள்



## ஆசிய வரலாறு

பெரும அளவுள்ள பொருட்களின் சாரத்தை, வைத்திய நிபுணர்கள் ஒரு சில துளிகளிலோ அல்லது பொடிகளிலோ வடித்துக் கொடுக்கிறார்கள் அல்லவா? அது போலவே 4 கோடி 30 லட்சம் சதுர மைல்கள் நிலப்பரப்புள்ள அகண்டமான ஆசியாவின் வரலாற்று விவரங்களை, 'ஆசிய வரலாறு' என்ற இந்தச் சிறு நூலில் பேராசிரியரும் அறிஞருமான ஸ்ரீ எம். ரத்தினசாமி சாரமாக வடித்துக் கொடுத்திருக்கிறார்.

190 பக்கங்கள் கொண்ட இந்த நூல் உருவத்தில்தான் சிறிதேயன்றி, விவரத்தில் பெரிதாகும். அசு என்ற அசிரியச் சொல்லுக்கு எழுஞாயிறு என்று பொருள். அதிலிருந்தே ஆசியா என்னும் சொல் வந்தது. இந்த முன்னுரையுடன் தொடங்கும் இந்த நூலில், ஆசியாவின் நில அமைப்பு, பண்டைய காலச் சிறப்பு, நாடோடி இனத்தவரின் வருகை, ஆசியாவினுள் ஐரோப்பியர்கள் வந்த வரலாறு, ஆசியாவின் விழிப்பு முதலிய பல விஷயங்கள் அடங்கியுள்ளன.

ஐரோப்பா அநாகரிகத்தில் ஆழ்ந்திருந்த பண்டைய காலத்தில், இந்தியாவின் நாகரிகம் மகோன்னத நிலையில் இருந்தது என்பது இந்நூலிலிருந்து தெரிகிறது.

இவ்வரிய வரலாற்று நூலில் உள்ள ஒவ்வொரு வரியும் இதன் ஆசிரியரின் ஆராய்ச்சித் திறனையும் அனுபவத்தையும் பறைசாற்றுகிறது. தென்மொழிகள் புத்தக டிரஸ்டின் ஆதரவில் வெளியாகியுள்ள இந்த நூல் எல்லோருக்கும் பயன்தரத் தக்கது.

பேராசிரியர் எம். ரத்தினசாமி ஆங்கிலத்தில் எழுதியுள்ள இந்த நூலை, ஸ்ரீ என். எஸ். நாராயணன் செந்தமிழில் அருமையாக மொழிபெயர்த்துள்ளார்.

கிடைக்குமிடம்: ஔவை நூலகம், 4/141, பிராட்வே, சென்னை-1; விலை: ரூ. 1-90.

-வாஞ்சி

## தமிழ் நாட்டுப் பாமரர் பாடல்கள்

குழந்தை தூங்க வேண்டுமா? தாலாட்டுப் பாடினால் தன்னால் அயர்ந்து தூங்கி விடுகிறது. இரவு வேளைகளில் பார வண்டி நெடுந் தூரம் போக வேண்டுமா? வண்டிக்காரன் தூங்காமல், காத வழி கடக்க வேண்டுமா? ஒரு தெம்மாங்கை எடுத்து விட்டானானால், கண்ணுறக்கம், களைப்பு எல்லாம் காத தூரம் பறந்துவிடும். நடவு நடும் பெண்கள் நடவுப் பாட்டை முறை வைத்துப் பாடத் தொடங்கினார்களானால், செய்யும் வேலையின் சிரமம் தெரியாமல் முடிந்து விடும். சுண்ணாம்பு இடிக்க, ஏற்றம் இறைக்க என்று வாழ்க்கையின் பல வேலைகளையும் களைப்புத் தெரியாமல் செய்து முடிக்கவென்று பல பாடல்கள் வழக்கில் இருந்து வருகின்றன. ஒலியின் உதவி கொண்டு உடல் சோர்வு தீர்க்கும் அற்புத மருந்து என்று இவற்றைச் சொல்லலாம். கருத்தைத் தேடி மணிக்கணக்காக மண்டையை உடைத்துக் கொள்வதில்லை, இப் பாமரப் பாட்டுகள் பாடுபவர்கள். அன்றாட வாழ்க்கையில் காணும் நிகழ்ச்சிகளை அந்தக் கணமே பாடலாக உருக்கொடுத்துப் பாடி மகிழ்கிறார்கள்.

இத்தகைய வாய்மொழிப் பாமரர் பாடல்களைச் சேர்த்துத் தொகுத்துப் புத்தக வடிவம் கொடுக்கும் பணியில் இப்போது பலர் ஈடுபட்டிருக்கிறார்கள். திரு நா. வானமாமலை அவர்கள் பல நண்பர்கள் உதவியைக்கொண்டு இப் பணியைப் புரிந்து வருகிறார். தாலாட்டில் தொடங்கி வகைப்படுத்திச் சிறந்த முறையில் பாடல்களைத் தொகுத்துக் கொடுத்திருக்கிறார். நாட்டு மக்களின் வாழ்வு தெளியத் தெரியும் வகையிலே பாராட்டுதலுக்குரிய நன்முயற்சி இது.

பிரசுரம்: என். ஸி. பி. எச். பிரைவேட் லிமிடெட், 6, நல்லதம்பிச் செட்டித் தெரு, சென்னை-2. விலை ரூ. 3.00.

## கெனில்வொர்த்

நாவல் என்ற உடனே ஸர் வால்டர் ஸ்காட்டின் பெயர் சிறப்பாக நம் நினைவுக்கு வரும். அந்த அளவுக்கு ஆங்கில இலக்கிய வரலாற்றிலே இடம் பெற்றவர் அவர். மேலே என்ன நடக்கப் போகிறதோ என்று ஆவலைத் தூண்டிவிட்ட வண்ணம் எழுதும் பேராற்றல் படைத்தவர் ஸ்காட். அவரது நவீனங்களில் ஒன்றின் சுருக்கம்தான் 'கெனில்வொர்த்' என்னும் இந்த நவீனம்.

காதலுக்கும் கடமைக்கும் இடையே ஊசலாடும் எலிசபெத் அரசியின் வாழ்வைப் பகைப்புலனாகக் கொண்டு, இந்த நவீனத்தைப் படைத்திருக்கிறார் ஆசிரியர். இதில் வரும் பாத்திரங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு குணசித்திர இயல்பு படைத்தவை. உண்மைக் காதல் எத்தனை பெரிய தியாகத்தைத்தான் மேற்கொள்ளாது என்பதைச் சித்திரிக்கிறது ட்ரெஸிலியானின் வாழ்க்கை. என்றால் கயவவின் உள்ளத்துள் புரையோடியிருக்கும் தீமைச் சக்தி எத்தகையது என்பதைக் காட்டுகிறது, வார்னி யென்னும் குடிலனின் வாழ்க்கை.

தமிழாக்கம் நல்ல முறையில் அமைந்திருக்கிறது. எனினும் செந்தமிழில் தமிழாக்கப்பட்டுள்ள இந்த நூல் எல்லோருக்கும் புரியும் வகையிலே இன்னும் சிறிது எளிய தமிழிலே தரப்பட்டிருந்தால் நன்றாயிருந்திருக்கும் என்று கூறவே தோன்றுகிறது.

ஆசிரியர்: ஸர் வால்டர் ஸ்காட், தமிழாக்கம்: கு. பரமசிவன். பிரசுரம், திருநெல்வேலி தென்னிந்திய சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், பிராட்வே, சென்னை-1. விலை: ரூ. 3-0.

# தொடு வானம்

அன்று 'ஜானகி நிவாஸி'ல் ஒரே குதூகலம். மேல்நாடு சென்றிருந்த வாசு தன் படிப்பை முடித்துக் கொண்டு திரும்பி விட்டான். அவன் தாய்நாடு திரும்புவதற்கு முன்பே டில்லியில் அவனுக்கு ஒரு வேலை காத்திருந்தது. இன்னும் ஒருவாரத்தில் அந்தப் பதவி ஏற்க அவன் சென்னையிலிருந்து கிளம்பி விடுவான். அவன் மேல் நாட்டிலிருந்து திரும்பி வந்திருக்கும் மகிழ்ச்சியில் குறிப்பிட்ட சில விருந்தாளிகளை அழைத்து ஒரு விருந்துக்கும் ஏற்பாடு செய்திருந்தார் அவனது தந்தை ரகுபதி.

விருந்தினரான சங்கரன் தம் குடும்பத்துடன் வந்து விட்டார். அவருடைய மூத்த மகள் உஷாதான் தன் சின்னத்தம்பியின் கையைப் பிடித்தபடியே முதலில் உள்ளே நுழைந்தாள்.

"வாசு! இதோ பார்த்தாயா? இவள் உஷா. உனக்கு அடையாளம் தெரிகிறதா?" என்று ரகுபதி கேட்டபோது வாசு வியப்பால் விரிந்த முகத்துடன் அவளை நோக்கினான். அவன் கற்பனை செய்து வைத்திருந்ததைக் காட்டிலும் அதிகமான அழகுடன் அவள் காணப்பட்டாள்.

"உஷாவா இது? அப்பாடியோவ்! அடையாளமே தெரியவில்லையே!"

"என்ன அண்ணா இது. நீ மேல் நாட்டுக்குப் புறப்பட்டபோது இருந்த அளவே இந்த உஷா என்றும் இருப்பாள் என்று நினைத்து விட்டாயா? நீ புறப்பட்டுப்போய் அப்படியும் இப்படியுமாக ஆறு வருடங்கள் ஆகிவிட்டனவே" என்று சிரித்தபடி கூறினான் கண்ணன். அவன் வாசுவைக் காட்டிலும் இரண்டு வயது சிறியவன். வாசுவுக்குத் தம்பி. சென்னையிலேயே தன் கல்லூரிப் படிப்பை முடித்துக் கொண்டு ஒரு வேலையிலும் அவன் அமர்ந்து விட்டான்.

வாசு மீண்டும் ஒரு முறை உஷாவை நோக்கினான். அவளோடு சண்டையிட்டுச் சச்சரவிட்டு 'காரம்' விளையாடுவாளே, அந்த உஷாவா இவள்! நிலவானிலே சிரித்த முகம் காட்டிச் செம்மை படர உஷை ஒருத்தி உதித்து விட்ட அழகு; முழங்கால் வரையில் தொங்கும் இரட்டைப் பின்னல்; வயதின் சாயையைக் காட்டி அழகுக்கு மெருகிடும் நாணம்; பருவம் வளர்த்த வசந்த கன்னிகை அவள். காஷ்மீர் ஸில்க் புடவையும், ஆர்கண்டி பிளௌஸும் அவள் அழகுக்கு மெருகூட்டின. காலம் இவ்வளவு வளர்ச்சிக்கு உரமிடும் அதிசயத்தை எண்ணிப் பார்த்து நின்று விட்டான் வாசு.

மறுநாள் மாலை. ரகுபதியும் அவர் மனைவியும் கோவிலுக்குச் சென்றிருந்தனர். கண்ணன் இன்னும் காரியாலயத்திலிருந்து திரும்பி வருக்கவில்லை. அப்பொழுது உஷா வீட்டுக் கார் டிரைவர் வந்தான்.

"ஸார், உங்க தம்பி கண்ணன் இல்லையா?"

"இல்லையே, அவன் இன்னும் வரவில்லை" என்றான் வாசு. டிரைவர் தயங்கி நின்றான்.

"ஏன், என்ன வேண்டும்?"

"ஒண்ணும் இல்லீங்க. இந்தப் புத்தகத்தை அவர் கிட்டே கொடுக்கணும். உஷா கொடுத்தனுப்பினாங்க."

"அதற்கு ஏன் தயக்கம்? என்னிடம் கொடு. நான் கொடுத்து விடுகிறேன்."



டிரைவர் புத்தகத்தைக் கொடுத்து விட்டுச் சென்று விட்டான். அந் நாவலைப் புரட்டிப் பார்க்க ஆரம்பித்தான் வாசு. நடுவில் இதென்ன....?

'' அண்ணு!'' வாசு தலையை நிமிர்த்திய போது கண்ணன் காரியாலயத்திலிருந்து திரும்பி விட்டிருந்தான்.

'' என்ன அண்ணு, தனியாக இங்கே என்ன செய்கிறாய்?''

'' அலுப்பின் காரணமாக வெளியே போக வில்லை. இந்தப் புத்தகத்தை உஷா உன்னிடம் கொடுக்கச் சொன்னாளாம்.''

ஆவலும் பரபரப்பும் உந்தித்தள்ளக் கண்ணன் புத்தகத்தைப் பெற்றுக் கொண்டு பக்கங்களைப் புரட்டினான். கையில் இடறியது ஒரு கடிதம்.

'' அண்ணு....அண்...''

'' என்னடா என்ன...?''

'' நீ...வந்து...புத்தகத்தைப்...புரட்டி...''

வாசு மெள்ள அவனை நோக்கினான். அதற்குள் கண்ணனை உள்ளே ஓடி விட்டான்.

இரவு சாப்பாட்டுக்குப் பிறகு ஜானகி மாடியில் திறந்த வெளியில் அமர்ந்து பேசிக்கொண் டிருந்தாள் தன் கணவருடன்.

'' வாசுவும் நல்லபடியாகத் திரும்பி விட்டான். டில்லிக்கும் ஓடி விடப் போகிறான். இன்னமும் நீங்கள் மௌனமாக இருந்தால் எப்படித் தான் முடியும்?''

'' ஜானகி! நீ எதற்கு அடிபோடு கிறாய் என்பது எனக்குப் புரிகிறது. வாசுவின் விவாகத்தை முடிக்க நான் இப்போதே தயார்தான். ஆனுல்...'' என்று ரகுபதி தயக்கம் காட்டினார்.

''பெண் வேண்டுமே என்ற தயக்கமோ? கையில் வெண்ணெயை வைத்துக் கொண்டு நெய்க்கு அழும் கதைதான். உஷாவை நம்வீட்டு மருமகளாக ஆக்கிக்கொள்ள நாம் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே! வாசு 'மேல்நாடு செல்வதற்கு முன்பு இருவரும் சேர்ந்து ஒட்டிப் பழகியவர்களாயிற்றே! இந்தத் திருமணத்தில் இருவருக்கும் எல்லையற்ற ஆனந்தம் கிடைக்கும். உஷாவின் தங்கை விமலாவைக் கண்ணனுக்கு முடித்துவிடலாம்...'' ஜானகி தன்னுடைய திட்டத்தைக் களிப்புடன் கூறினாள்.

''என்வரை சம்மதம்தான் ஜானகி. ஆனுல் வாசு முன்பைப்போல் குழந்தையல்ல. அவன் சம்மதத்தை நேரில் பெறாமல் நான் ஒன்றும் கூற முடியாது'' என்று ரகுபதி கண்டிப்பாகக் கூறிவிட்டார்.

'' வாசு, வாசு...!'' ஜானகி குரல் கொடுத்தாள். சகோதரனுடன் அமர்ந்து ரேடியோ கேட்டுக் கொண்டிருந்த வாசு மாடிக்கு வந்தான்.

அவனோடு பேச்சுக் கொடுத்தவள் மெதுவாகப் பேச்சைக் கல்யாண விஷயத்தில் திருப்பினாள்.



"அம்மா! என்னை மன்னித்து விடுங்கள். என் விவாகத்தை நான் முன்பே முடித்துக் கொண்டு விட்டேன்."

"ஐயோ, வாசு! என்ன காரியமடா செய்தாய்?" நெஞ்சு பாரம் மூளையில் முட்ட ஜானகி மூர்ச்சித்து விட்டாள்.

"வாசு!" தந்தையின் கர்ஜனை கேட்டு வாசு திரும்பினான். "வாசு! நீ யாரை மணந்து விட்டாய் என்பதைக் கூறி விட்டுப் போ. அந்த விவாகம் செல்லுபடி ஆகுமா, ஆகாதா என்பதை நான் தீர்த்துக் கொள்கிறேன்" என்றார்.

"அப்பா! என் விவாகத்தைப் பற்றி நான் கூறினால் நீங்கள் என்னை ஏளனம் செய்வீர்கள், புத்திமதி கூற வருவீர்கள் என்பதையெல்லாம் யோசித்துத்தான் நான் கூறத் தயங்கினேன். உங்கள் மனத்துக்குத் துன்பம் தரும் இச்செய்தியை உங்களிடம் கூறி உங்களைத் தவிக்க விடுவதற்கு நான் மிகவும் வருந்துகிறேன்..." விடுவிடென்று கீழே இறங்கிச் சென்று விட்டான் வாசு.

மறுநாள் பிற்பகல் வேளை. வாசு டில்லிக்குப் போகுமுன் சில துணிமணிகள் வாங்கக் கடை வீதிக்குச் சென்றிருந்தான். ஜானகி கட்டிலிலே படுத்துக் கிடந்தாள். அழுது அழுது அவள் கண்கள் வீக்கம் கண்டிருந்தன. ரகுபதி அருகில் ஒரு நாற்காலியில் அமர்ந்திருந்தார். கண்ணன் தாய் படுத்திருந்த கட்டிலின் ஓர் ஓரத்தில் அமர்ந்து பேசிக் கொண்டிருந்தான்.

"நான் மேல் நாட்டுக்குப் போய்ப் படிக்கவில்லையே என்று அம்மா ரொம்பவும் குறைப் பட்டுக் கொண்டிருந்தாள். இனி அந்தப் பேச்சையே எடுக்கமாட்டாள்" என்று கண்ணன் புன்னகையுடன் கூறினான்.

"வாசு துணிந்து இப்படி ஒரு வேலையைச் செய்து வைப்பான் என்று நான் நினைக்கவில்லை. நல்ல பிள்ளையாகத் திரும்புவான், சொன்ன பெண்ணை விவாகம் செய்து கொள்வான் என்றுதான் நினைத்தேன்." துயரக் கலவையுடன் ஜானகியின் வார்த்தைகள் வெளிவந்தன.

"ஆ....மாம்! நீ எப்போதுமே அண்ணாவை உயர்வாகத்தான் நினைத்திருந்தாய். நான்கு பேர்களுடன் நான் பேசிப் பழகுவதும், சிரித்துக் கொம்மாளமுமாக இருப்பதும் உன் கண்ணை உறுத்தச் செய்தன. வாசுவைப் போலிருக்கக் கூடாதா என்று கூறுவாய். சாதுவாக இருந்து கொண்டே அண்ணன் எப்படியெல்லாம் செய்வான் என்பது உனக்கு இப்பொழுதுதான் புரிகிறது...." கண்ணன் இடையே கூறினான்.

"ஐயோ கண்ணா, ஒன்றும் கூறாதே!" ஜானகி கைகளால் முகத்தை மூடி விம்ம ஆரம்பித்து விட்டாள்.

"கண்ணா! எரியும் புண்ணில் ஏன் உப்பை யுப அள்ளிக் கொட்டுகிறாய்?" என்று கண்டித்த ரகுபதி "ஜானகி! உஷாவை நம் கண்ணனுக்கே முடித்து விடுவதாக நிச்சயம் செய்து விட்டேன்..." என்றார்.

"அப்பா....அ....ப்பா!" என்று கண்ணன் மகிழ்ச்சியுடன் கூவினான்

"என்ன கண்ணா சங்கரன் நம் குடும்பத்தில் சம்பந்தம் செய்து கொள்ளத் துடிக்கிறார். நல்ல வேளையாக உஷா உன்னுடனும் சரளமாகப் பழகுகிறாள். அதனால் இந்தச் சம்பந்தத்துக்கு அவர்களிடமிருந்து தடங்கல் இருக்காது. நீயும் நான் சொன்னதைக் கேட்க வேண்டும்...."

"சரி அப்பா, உங்கள் இஷ்டம். அண்ணாவைப்போல் உங்களுக்கு எதிராகப் போக நான் விரும்பவில்லை" என்று கூறிக் கண்ணன் எழுந்து விட்டான்.

மனத்தில் தோன்றிய உற்சாகமும் களிப்பும் சைக்கிளை எடுத்துக் கொண்டு உஷாவுக்குச் செய்தியைக் கூற ஓடினான்.

வாசு டில்லிக்குப் புறப்படும் நாள். பயணத்துக்கான நேரமும் நெருங்கி விட்டது. பெட்டிப் படுக்கை காரில் ஏறிவிட்டன.

"அண்ணா, நீ இப்படிப் பிடிவாதமாகப் புறப்படுவது நன்றாக இல்லை. என் விவாகத்துக்கு இன்னும் ஒரு வாரம்தான் இருக்கிறது. அதற்கு இல்லாமல் கிளம்புகிறாயே!"

உடைந்த மனத்தைச் சேர்த்துப் பிடிப்பது போல் ஷர்ட்டின் பித்தானை இறுக்கிப் போட்டுக் கொண்டான் வாசு. கண்ணனுக்குப் பதில் சொல்ல வந்தவன் சொல்லாமலே மென்று விழுங்கி விட்டான்.

"அம்மா!" தாயின் காலடிகளைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டான் வாசு.

"வா...சு...நீ...நீ..." ஜானகி தவித்துப் போய் நின்றாள்.

"அம்மா! உனக்கு எல்லையற்ற மனத் துன்பம் கொடுப்பதற்கு என்னை மன்னித்து விடும்மா. நான் தரும் துயரங்களை மறந்து விட்டு என்னை மட்டும் எப்போதும் உன் நினைவில் வைத்துக் கொள்ளம்மா.." தாயின் தோளைப் பற்றிக் கூறிய வாசு தந்தையின் பக்கம் திரும்பினான். "அப்பா. போய் வருகிறேன்."

ரகுபதி பதிலே கூறவில்லை. அவர் முகத்தைத் திருப்பிக் கொண்டு தம் கோபத்தை வெளிப் படுத்தினார்.

வாசு டில்லிக்குப் போய்விட்டான்.

கண்ணனது விவாகத்துக்குப் பலமான ஏற்பாடுகள் நடந்து கொண்டிருந்தன. உள்ளம் குன்றிவிட்டது போல் ஜானகியின் உடலும் குன்றிவிட்டது. விவாக வேலைகளில் அவளால் பங்கெடுக்கவே முடியவில்லை. வாசுவின் நடத்தையைப் பற்றிப் பேசியவர்களுடன் அவள் கண்ணீரினால் பதிலளித்தாள்.

விவாக தினம். காலை முகூர்த்த நேரத்தில் திடீரென்று வாசு வந்து நின்றபோது கண்ணன் திடுக்கிட்டான். அனைவரும் ஆச்சரியப் பட்டனர். வெறுப்புடன் நோக்கியவர்களுள் ரகுபதியும் ஒருவர்.

தம்பதிகளை நோக்கினான் வாசு. நாணம் படர்ந்த செம்மையுடன் முகக் கமலம் விரிய உஷா அமர்ந்திருந்தாள். கண்ணன் குறுகச் சிரித்து அதில் இன்பத்தை நிரப்பிக் கொண்டிருந்தான். ஒவ்வொரு அங்க அசைவும் மனப் பூரிப்பின் சாயையை எடுத்துக் காட்டியது. வாசுவின் உள்ளம் விரிந்து களிப்புக்கு இடம் கொடுத்தது. முகூர்த்தம் முடிந்து சாப்பிட்டானதுமே பிற்பகல் விமானத்தில் வாசு கிளம்பி விட்டான்.

அவசரச் சாப்பாடு அவர் வேலையைக் கெடுத்திருக்கும்...












ஒரு தேக்கரண்டி ஈனோ ஒரு டம்ளர் ஜலத்தில் போட்டால் உடனே பொங்கி கரைந்து நேர்த்தியான, புத்துணர்ச்சியளிக்கும் பானமாக மாறும். தனதனக்கும் ஈனோ 'ப்ரூட் ஸால்ட்' இதத்தையளித்து சமனமூட்டக்கூடியது. வயிற்றுக் கோளாறுகளிலிருந்து உடனடியாக நீடித்த நிவாரணமளிக்கிறது. ஜீரணசக்தியை சரியாக்குகிறது.









ஈனோ அவருக்கு சீக்கிரத்தில் குணமளித்தது

# ஈனோ 'ப்ரூட் ஸால்ட்'

'ஈனோ', 'ப்ரூட் ஸால்ட்', என்ற வார்த்தைகள் ரெஜிஸ்டர்ட் ட்ரேட் மார்க்குகள்
பீச்சம் (இந்தியா) பிரைவேட் லிமிடெட்

# நீங்கள்

# ஆஸ்துமா-வினால்

# அவஸ்தைப்பட்டால்

## இதை அவசியம் படியுங்கள்

இபஸோன் மாத்திரைகள் இந்தியாவிலே திரும்பவும் கிடைக்கின்றன. ஆஸ்துமா, ப்ராங்கைடிஸ், ப்ராங்கைடிஸினால் ஏற்படும் ஜலதோஷம், மார்புச் சளி, ஹே காய்ச்சல், மற்றும் இது சம்பந்தப்பட்ட நோய்களினால் அவஸ்தைப்படுகிறவர்களுக்கு இபஸோன் மிகவும் உதவியளிக்கிறது. இபஸோன் எளிதில் உட்கொள்ளக்கூடியது. பயமின்றி உபயோகிக்கலாம். உடனடியாகச் சமனமூட்டி, நிச்சய பலனளிக்கிறது.

இபஸோன் தயாரிப்பில் சேர்க்கப்பட்டுள்ள வைத்திய முறையின் அம்சங்களின் இயல்புகள் சுருக்கமாக கீழே குறிப்பிடப்பட்டுள்ளன:

1. சுவாசக் குழாய்களின் தசைநார்களுக்கு ஏற்படும் வலிப்புக்கு சமனமூட்ட ஒரு சக்தி வாய்ந்த தன்மை இபஸோனுக்கு உண்டு. சுவாசாசயங்களில் மூச்சு எளிதில் செல்லவும், வெளியில் வரவும் இது உதவி செய்கிறது. அது மாத்திரமல்ல; ஆஸ்துமாவினால் ஏற்படும் உக்கிரத்திற்கு ஆசுவாசமளிக்கிறது.
2. சுவாசக் குழாய்களிலும் மற்றும் மார்பு உறுப்புகளிலும் உள்ள கபத்தை இபஸோன் மிருதுவாக்கி, திரவமாக இருமலில் எளிதாக வெளியே தள்ளிவிடுகிறது.
3. சுவாசாசயத்திலுள்ள இரத்தக் குழாய்களில் ஏற்படும் அடைப்பிற்கு இபஸோன் சமனமூட்டுகிறது.
4. இபஸோன் இருதயத்தின் கஷ்டங்களைக் குறைத்து, அதிகம் வேலை செய்யக் கூடிய அளவுக்கு சக்தியை அளிக்க உதவி செய்கிறது.
5. இபஸோன் ஆஸ்துமாவினால் நிச்சயமாக ஏற்படும் உக்கிரத்தைக் குறைத்து, ஏக்கத்தை நிவர்த்தி செய்து, மிருதுவாக நரம்புகளுக்கு சமனமளிக்கிறது. அது மட்டுமல்ல; ப்ராங்கைடிஸினால் ஏற்படும் அகோரமான இருமலைக்கூட சரிசெய்து விடுகிறது.

ஆஸ்துமா வெகு சீக்கிரம் உங்களைப் பீடிக்கிறது. ஆஸ்துமாவினால் நீங்கள் பீடிக்கப்படுவீர்கள் என சிறிய சந்தேகம் வந்தவுடன் ஒரு இபஸோன் மாத்திரையை உட்கொண்டு, அதிசீக்கிரத்திலே நிச்சயமாக நிவாரணமடையுங்கள்.

இபஸோனின் அரிய தன்மைகள், ஆஸ்துமாவினால் அவஸ்தைப்பட்டு இதை உபயோகித்து குணமடைந்தவர்களாலும், அதை சிபார்சு செய்யும் டாக்டர்களாலும் நிரூபிக்கப்பட்டுள்ளன.

வழக்கத்தை ஊட்டிவிடும் மருந்துகள் எதுவும் இபஸோனில் சேர்க்கப்படவில்லை.

இபஸோன் 15, 45, 100 மாத்திரைகள் கொண்ட வசதியான பாக்கட்டுகளில் எல்லா மருந்து கடைகளிலும் கிடைக்கின்றன.




# EPHAZONE

இபஸோன் தயாரித்து, விநியோகிப்பவர்கள்:-

**ஜே எல். மோரிஸன், சன் அன்டு ஜோன்ஸ் ( இந்தியா ) லிமிடெட்.**

பம்பாய் – கல்கத்தா – மதராஸ் – டில்லி.

உஷா அவனை நமஸ்கரித்து எழுந்தாள். "அண்ணா! நீங்கள் இத் திருமணத்தில் பங்கெடுத்தது பற்றி மிக்க சந்தோஷம்."

வாசு அவளையே சற்று உற்று நோக்கினான். "உஷா! உங்கள் இல்வாழ்வு நலம் பெற்று நன்கு அமைய ஆண்டவன் அருள்புரியட்டும்."

ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்துக் காரில் ஏறிக் கொண்டான் வாசு.

ஜானகி தன் குடும்பத்தில் இவ்வளவு மாறுபாடுகள் ஏற்படும் என்று நினைத்திருக்கவே இல்லை. வாசு மாதம் பிறந்ததும் தன் சம்பளத்தில் பாதிப் பணத்தை அனுப்பி அன்பு மசியில் கடிதத்தை நிரப்பி அனுப்பியதோடு நின்றிருந்தான். என்றேனும் ஒரு நாள் அவர்களைப் பார்க்க வருவதாகத் தவறாமல் குறிப்பிட்டு எழுதி வந்தான்.

மூத்த மகனிடம் செலுத்த இயலாத பாசத்தைத் திரட்டி இளையவன் மீது சுமத்த எண்ணியவளுக்கு அங்குதான் மிகுந்த ஏமாற்றம் விளைவித்தது. மூன்று குழந்தைகளுக்குத் தந்தையாகி விட்ட கண்ணன் ஒவ்வொரு குழந்தை பிறந்தபோதும் உஷாவிடமிருந்து தன் அன்பைக் குறைத்து வந்தான். உஷா தாய்மை பெற்று உடல் தளிப்பில் படுக்கையில் விழும் நலிவுக்கு வந்தபோது கண்ணன் போக்கே முற்றிலும் மாறிவிட்டது.

ஜானகி உள்ளம் உடைந்து விட்டாள். கண்ணனின் போக்கில் உஷா பொறுமை காட்டியது ஒன்றே அவள் அடைந்த ஆறுதல்.

'என்றேனும் ஒரு நாள் வருகிறேன்' என்று எழுதி வந்த வாசு திடீரென்று ஒரு நாள் வந்து நின்றான். ஜானகி பாச நீர் பெருக அவனை அணைத்துக் கொண்டாள்.

"அம்மா! இப்படி உருத் தெரியாமல் இளைத்து விட்டாயே! என் காரணமாக எழுந்த துயரம் உன்னை இப்படி உருக்குலையச் செய்துவிடும் என்று நான் அறிந்ததுதான். ஆனால்..."

"இல்லையடா வாசு! உன் காரணமாக என் உடல் வாட்டம் காணவில்லை. இங்கு வீட்டு நிலைமை...அதெல்லாம் பற்றிப் பிறகு பேசிக் கொள்ளலாம்.. எனப்பா வாசு, உன் இல்லறம் நன்றாக நடக்கிறதா? மணந்தவளுடன் சுகமாக இருக்கிறாயா? நீ ஆனந்தமாகக் காலங்கழிக்கிறாயா?" அன்புப் பார்வையுடன் உறவாடி வார்த்தைகளை அடுக்கினாள் ஜானகி.

"ஒரு குறைவுமில்லை. சுகமாக இருக்கிறேனம்மா! மனத்தில் எழும் ஆசைகளையும் விருப்பங்களையும் அடக்கி ஆண்டு விட்டால் இல்லறம், துறவறம் எல்லாமே நல்லறமாகத்தான் இருக்கும்...ஏம்மா கண்ணன் எங்கே, உஷா எங்கே?"

ஜானகி பெருமூச்சு விட்டாள். "கண்ணன் வீட்டில் தங்குவது அபூர்வம். உஷா... உ...ஷா..." ஜானகியின் குரல் அடைத்தது. கையினால் அவள் ஓர் அறையைச் சுட்டிக் காட்டினாள்.

"உஷா! நீ....நீ....நீயா இப்படி...?" வாசு கலங்கித் தவித்து விட்டான்.

"ஓ, நீங்களா, வாருங்கள்..." உஷா அவனை ஈனஸ்வரத்தில் வரவேற்றாள். வாய் திறந்து புன்னகையை முழுதும் உதிர்த்து



"நான் கொடுக்கும் பசும் பால் சரியாக இருக்குதுங்களா?"

"ஓ! என் குழந்தைக்குக் கால் பாகம் பாலும் முக்கால் பாகம் தண்ணீரும் டாக்டர் கொடுக்கச் சொன்னார். சரியாக இருக்கு."

"டாக்டர் சொல்றப்போ நான் பக்கத்திலிருந்தேன்!"

விடாதபடி வேதனை அவள் உதட்டை இறுக மூடி வைத்திருந்தது.

அன்று இரவுக்குள் வாசுவுக்கு வீட்டின் நிலை நன்றாகப் புரிந்துவிட்டது. இரவு சாப்பாடு முடிந்ததும் உஷா திடீரென்று மூர்ச்சித்துக் கீழே விழுந்து விட்டாள். ஒரு வார காலமாக அவள் அடிக்கடி மூர்ச்சையாகிக் கொண்டிருந்தாள்.

"கண்ணா! உஷா இங்கே விழுந்து கிடக்கிறாள். இவளைக் கவனிக்காமல் நீ எங்கே கிளம்பி விட்டாய்?" வாசு கர்ஜித்தான்.

கண்ணன் ஓர் அடி உள்ளே வைத்து அண்ணனை நோக்கினான். "உஷாவுக்கு இதெல்லாம் வழக்கம்தான். இதைப் பார்த்துக் கொண்டிருந்தால் எனக்குக் கட்டாது.."

"கண்ணா! நீயா, நீயாடா இப்படிக் கூறுகிறாய்! நீயும் உஷாவும் காதலித்து மணந்தவர்கள் என்பது எனக்குத் தெரியும். இப்படிக் கல் நெஞ்சுடன் எப்படியடா மாறினாய்?"

கோபத்துடன் அண்ணனை வெறித்து நோக்கினான் கண்ணன். "கல்லாம், நெஞ்சாம்! யாருடன் பேச வந்துவிட்டாய்? ஊர் பேர் தெரியாத ஒருத்தியைப் பெற்றோர்களுக்குத் தெரியாமல் திருட்டுத்தனமாக மணந்து உற்றோருக்கும் உறவினருக்கும் களங்கத்தைத் தேடி வைத்த உன்னுடன் பேசுவதே எனக்கு மானக் குறைவு! பெரிதாக நீதி போதிக்க வந்துவிட்டான் இவன்!"

'பட்'டெனக் கண்ணனின் கன்னத்தில் அறை விழுந்தது.

"அண்ணா!" ஆங்காரத்துடன் கர்ஜித்தான் கண்ணன். "உஷா என் மனைவி.

அவளை நான் எப்படி வேண்டுமானாலும் நடத்துவேன். நீ யார் கேட்பது...நீ போ, போ....போய்விடு....இங்கே நிற்காதே...''

வாசு நீர் நிறைந்த கண்களுடன் கண்ணனை நோக்கினான். பொங்கி வந்த கோபத்தைச் சிரமத்துடன் அடக்கினான். ஒவ்வொரு அடியாக வாசலை நோக்கி வைத்தான்.

'' வாசு...!'' ஜானகி கூச்சலுடன் மகனைத் தடுக்க விரைந்தபோது உஷாவிடமிருந்து ஒரு விக்கல் சத்தம் கிளம்பியது. அவள் மீளாத் தூக்கத்தில் மூழ்கி விட்டாள்.

'' உஷா '' ஜானகி அலறித் துடித்தாள். ரகுபதியும் வாசுவும் கண்ணீர் விட்டனர். கண்ணன் தலைகுனிந்து நின்றான்.

பதினைந்து நாட்கள் விடுமுறையைச் சோகத்திலும் துயரத்திலும் கழித்துவிட்ட வாசு அன்று மீண்டும் டில்லிக்குப் புறப்பட்டு விட்டான்.

' அண்ணா! நான் இந்தச் சட்டையையும் நிக்கரையும் போட்டுக் கொள்கிறேன்!''

'' அண்ணா! இதோ பார்த்தாயா, அம்மா தான் இந்தப் பாவாடையில் பூப்போட்டாள். இதைப் பெட்டியில் வைத்துக்கொள்.''

'' நான் ரயிலில் உன் பக்கத்தில்தான் உட்காருவேன்!''

உஷாவின் மூன்று குழந்தைகளையும் தன்னுடன் அழைத்துப் போக நிச்சயித்துவிட்டான் வாசு. கண்ணன் இதற்குத் தடுப்புக் கூறவில்லை. ஜானகியும் ரகுபதியும் முதலில் ஒப்புதல் கொடுக்க மறுத்தனர். குழந்தைகளுக்கு ஒரு மாறுதல் வேண்டும் எனக் கூறினான் வாசு. அந்தக் குழந்தைகளும் அவனிடம் ஒட்டிவிட்டன.

'' வாசு நீ யாரை மணந்திருந்தாலும் சரி, அதைப்பற்றி நான் இப்பொழுதெல்லாம் வருத்தப்படுவதில்லை. உன் இல்லறம் நன்கு செல்வது பற்றி நான் ஆனந்தமே அடைகிறேன். ஆனால், நீ இக் குழந்தைகளை இப்பொழுது அழைத்துச் செல்வதால் உன் குடும்பத்திலும் புயல் வீசுமோ என்றுதான் பயப்படுகிறேன்!'' என்று ஜானகி கூறினாள்.

வாசு சற்று மௌனமாக இருந்தான். பிறகு, '' அம்மா! என் இல்லறம் இவ்வளவு நாட்கள் அமைதியாகத்தான் சென்று கொண்டிருந்தது. ஆனால் அதில் சோகம் குடிபுகுந்து விடுமோ என்ற அச்சம் வந்துவிட்டது. அதைத் தீர்க்க இந்தக் குழந்தைகள் உதவும் என்றுதான் நினைக்கிறேன்...'' என்றான்.

மூன்று குழந்தைகளுடன் புறப்பட்டுப் போய்விட்டான் வாசு. குழந்தைகளின் குதூகலத்தை அளவிட முடியாது.

காலத்தில் கைப்பிடியில் மேலும் ஒரு வருடம் சென்றது. 'வாசுவின் குடும்பம் எப்படி நடக்கிறது?' என்றறிந்துவர ரகுபதியைத் டில்லிக்கு அனுப்பியிருந்தாள் ஜானகி. அவர் அன்று திரும்பி வரும் நாள்.

சற்று முன்பு கண்ணன் சொன்ன செய்தி ஜானகியைத் திடுக்கிடச் செய்திருந்தது.

அம்மாவுக்கு உடல் நிலையே சரியாக இல்லையாம். அதனால் குடும்பத்தையும் அவளையும் கவனித்துக் கொள்ள லீலா என்ற பெண்ணைக் கண்ணன் மறு விவாகம் செய்து கொள்ளப் போகிறானாம். படத்தைக் காட்டினான்.

ஜானகி நிச்சயித்து விட்டாள். 'இனி இங்கிருக்க முடியாது. வாசுவின் மனைவி எப்படிப்பட்டவளாக இருப்பினும் அவனிடமே போய் விட வேண்டும்.'

ரகுபதி திரும்பி விட்டார். அவர் சொல்லப் போவதை ஆவலுடன் எதிர்நோக்கினாள் ஜானகி. தலைவலி காரணமாக ஜானகி கட்டிலோடு கிடந்தாள்.

'' குழந்தைகளை அழைத்து வரவில்லையா ?''

'' வாசு அனுப்ப மறுத்து விட்டான். குழந்தைகளும் வர மறுத்து விட்டன. குழந்தைகளின் வளர்ச்சி அளவிட முடியாதது...''

'' உண்மையாகவா ? வாசுவின் மனைவி நன்றாக இருக்கட்டும்... இனி நானும் அவனிடமே போய் விடுகிறேன்...''

'' அது முடியாது ஜானகி. அவள் அங்கு இல்லை. அவளை நாம் பார்க்கவும் முடியாது.''

'' என்ன ? என்ன சொல்கிறீர்கள் ?''

'' ஜானகி!...வாசு மேல்நாடு போவதற்கு முன்பே அந்தப் பெண்ணைக் காதலித்துக் கொண்டிருக்கிறான். மேல்நாடு சென்ற பிறகும் அவளை மனத்தோடு நேசித்து அவளுக்கு அன்பளிப்பாகச் சாமான்களைச் சேகரித்திருக்கிறான்..... ஆனால்...'' சற்று நிறுத்தினார்.

'' ஆனால்! என்ன.....சொல்லுங்கள் சீக்கிரம்...''

'' ஆனால் அவன் தன் காதலைப்பற்றி அந்தப் பெண்ணிடமோ வேறு யாரிடமோ எதுவும் கூறி இருந்திருக்கவில்லை. அவன் திரும்பியதும் தன் காதலை வெளியிடும் முன்பே அப் பெண் வேறொருவனை நேசிப்பதை அவள் எழுதிய ஒரு கடிதத்தின் மூலம் புரிந்து கொண்டு விட்டான். அவன் காதலுக்கும் அவள் பங்கம் விளைவிக்கவில்லை...''

'' ஐயோ! அவன் விவாகத்தை முடித்துக் கொண்டு விட்டதெல்லாம் பொய்யாகச் சொன்னதுதானா ?''

'' ஜானகி! அவன் தன் மனத்தையே உலகமாகப் பாவித்திருந்திருக்கிறான். அவளை மனப்பீடத்தில் வைத்து அன்பைச் செலுத்துவதையே விவாகமாக மதித்திருக்கிறான்...''

'' அப்படியானால்....நீங்கள் சொல்வதைப் பார்த்தால்...வாசு...வா..சு..'' படபடப்பும் ஆவலும் உணர்ச்சியும் போட்டியிட ஜானகி கணவரை ஏறிட்டு நோக்கினாள்.

'' ஆமாம் ஜானகி, நீ ஊகித்தது சரிதான். இன்றும் அவன் மன உலகில் இடம் பெற்று, அவன் கடைசி மூச்சுவரை அன்புத் தேனில் நனைந்து அவனோடு அழிந்து போகும் உரு, பிம்பம் கொடுத்தவள் உஷாவேதான்.''

ரகுபதி குனிந்த தலையுடன் தம் இருப்பிடத்தைவிட்டு எழுந்து விட்டார். கண்ணன் விவாகம் செய்து கொள்ளப் போவதாகக் கூறிய லீலாவின் புகைப்படம் காற்றில் பறந்து அவர் காலடியில் விழுந்தது.

'' வா...சு!''

ஜானகியின் தொண்டையிலிருந்து எழும்பிய பெரிய ஒலி அவ்வறையை நிறைத்தது.

Printed &. Published by R. Ananthanarayanan on behalf of Messrs. Bharathan Publications Private Limited, at the Kalki Press, Kilpauk, Madras-10.
Managing Editor, T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

